

# சங்கரண்ணா!
## சாவு உனதது முடிவல்ல

வெளியீடு:

சிறப்புப் படையணி

# சங்கரண்ணா!

# சாவு உனது முடிவல்ல

எழுத்துருவாக்கம் : சி. நிர்மலன்

கணனி அச்சுப்பதிவு : படைய அறிவியற் கல்லூரி மகளிர்

பக்கங்கள் : 415

முதற்பதிப்பு : செப்ரெம்பர் 2003

வெளியீடு : : கேணல் சங்கர் அவர்களின் இரண்டாம் ஆண்டு நினைவு தின மான 26.09.2003 அன்று வெளியிடப்பட்டது.

பிரதிகள் பதிப்பகம் : அறிவமுது
பதிப்பகம்
யாழ் நெடுஞ்சாலை,
கிளிநொச்சி.

கிடைக்குமிடம் : அறிவமுது
பொத்தகசாலை
யாழ் நெடுஞ்சாலை,
கிளிநொச்சி.
தொ. பே. 021 – 222 3961

விலை உரூபாய் : 300/-



வீரப்பிறப்பு
18 - 09 - 1949
வீரச்சாவு
26 - 09 - 2001
கேணல் சங்கர் / முகிலன்
(வைத்திலிங்கம் சொர்ணலிங்கம்)
வவுனியா.

# முன்னுரை

சங்கரண்ணையுடனான நீண்ட உறவு, போராளியாகப் பழகிய நட்பு, வயதில் மூத்தவராயினும் தோழனாகப் பழகிய பாங்கு, தலைவரி லும் போராட்டத்திலும் அவர் வைத்திருந்த அதீத நம்பிக்கை, பொறுப் பாளராகத் தந்த ஆலோசனைகள், அறிவுரைகள் போன்றவை அவ ரைப் பற்றிய ஒரு சிறு குறிப்பேட்டை எழுதுவதற்கு எனக்கு ஆர்வ மூட்டின. தேசியத் தலைவர் அவர்களிடமிருந்து கிடைத்த அனு சரணை எனது ஆர்வத்தை மேலும் அதிகரித்தது.

தளபதிகள், பொறுப்பாளர்கள், போராளிகள், முன்னைநாட் போரா ளிகள், பொதுமக்கள் எனச் சங்கரண்ணையைப் பல வழிகளிலும் அறிந்தவர்களை அணுகினேன். சங்கரண்ணையாற் பொறிக்கப்பட்ட பல்வகைச் சுவடுகள் பற்றிய தரவுகள் அவர்களிடமிருந்து கிடைக்கப் பெற்றன. கிடைக்கப்பெற்ற தரவுகள் ஒவ்வொன்றையும் அவற்றின் காலகட்டம், பின்னணி, சூழல் என்பனவற்றின் விவரணத்துடன், பிரதி பலிக்கவேண்டிய விடயத்தின் முக்கியத்துவத்தையும் கோடிட்டுக் காட்டி எழுத்துருவாக்கினேன்.

ஒன்றுடன் ஒன்று இசைவுபெறும் தரவுகள் பொருத்தமான தலையங்கங்களைக் கொண்ட சுவடுகளாக ஆக்கப்பட்டுள்ளன. **"இறுதி நாட்கள்"** தனித்துவ முக்கியத்துவத்துடன், பதிவேட்டின் தொடக்கமாக அமைக்கப்பட்டுள்ளது. அடுத்ததாக, புலிகள் அமைப் பில் இணைவதற்கு முன்பான சுவடுகளுடன், பின்னைய சில தரவு களையும் இணைத்து **"பதிவு ஒன்று"** விரிகிறது.

**"பதிவு இரண்டு"** புலிகள் அமைப்பிற் சங்கரண்ணை செயற் பட்ட காலத்தில் அவரது சுவடுகளால் முழுமைப்படுத்தப்படுகிறது. இவை அனைத்திற்கும் மேலாக, சங்கரண்ணை பதித்த பல சுவடுகள், காலம் கனியாததால் தொடர்ந்தும் தேசியத் தலைவர் அவர்களதும் மற்றும் சிலரதும் உள்ளக் கிடக்கைகளாகவே இருந்து வருகின்றன. தேசம் விடியும்போது அவ்விதழ்கள் முற்றாகவே விரிந்துகொள்ளும். அதுவரை அவை மௌனச் சுவடுகளாகவே மறைந்து நிற்கும். **"பதிவு மூன்றாக"** அந்த மறைவிடம் நினைவுகூரப்படுகிறது.

இறுதியாக இந்தப் பதிவேடானது, ஓர் உள்ளத்தின் **"இதயத் துடிப்பால்"** உங்கள் உள்ளங்களில் சங்கரண்ணையைப் பதிவு செய்கிறது.

இப்பதிவேட்டில், பதிவுகளாக ஒளிரும் புகைப்படங்கள், ஆவணங்கள், சான்றிதழ்கள் என்பன சங்கரண்ணையின் பெட்டகத்திலிருந்தவையே என்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்நூலின் உருவாக்கத்திற்கு ஊக்கம் தந்து உதவிய விடுதலைப் புலிகள் ரவி அவர்களுக்கும், பல வகைகளிலும் உதவிய போராளிகளுக்கும் குறிப்பாகக் கணனியில் அச்சுப்பதிவுகளை மேற்கொண்டு பெரும் பங்காற்றிய படைய அறிவியற் கல்லூரியின் மகளிர் பிரிவினர்க்கும் எனது நன்றிகள்.

சங்கரண்ணா நீங்கள் விட்டுச்சென்ற சுவடுகள், பதிவுகளாகி என்றும் எங்கள் இலட்சியப் பாதையின் வழிகாட்டியாகி நிற்கும்.

'புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்'

- சி. நிர்மலன் -
சிறப்புப்படையணி

# சரித்திரம் மறக்காத சோக நிகழ்வு



மனிதன் பிறக்கும்போதே சாவும் அவனோடு சேர்ந்து பிறப்பெடுக்கிறது. அந்தச் சாவின் பிடியிலிருந்து யாரும் தப்பிவிட முடியாது; யாரும் ஓடியொளிந்துகொள்ளவும் முடியாது. அது வாழ்வின் ஒரு நிகழ்வாக, என்றோ ஒருநாள் எதிர்கொள்ளப்பட வேண்டியதுதான். இப்படிக் கூறி நாம் சங்கர் அண்ணையினுடைய சாவிற்கு ஆறுதல் கூறமுடியாது. அவரது சாவு தனி மனிதனின் மரணம் அன்று; ஒரு சகாப்தத்தின் முடிவும் அன்று. சரித்திரம் மறக்காத சோக நிகழ்வு; தமிழினத்தின் தேசிய ஆன்மாவை உசுப்பிவிட்ட நிகழ்வு. சுதந்திர வேட்கையைக் கொழுந்துவிட்டெரியச் செய்த நிகழ்வு.

சங்கர் அண்ணையினது வாழ்வுப் பாதை வித்தியாசமானது; தனித்துவமானது. மனிதர்களது இருப்பைவிட மனிதர்களது செயற்பாடுதான் முக்கியமானது என வாழ்ந்து காட்டியவர். அவர் அறிமுகமான நாள் முதல் அவருக்குள் ஓர் அபூர்வ சக்தி இருப்பதைக் கண்டேன். அது அவரது அனுபவத் திரட்சியாகவும் ஆளுமை வீச்சாகவும் எல்லோரையும் ஈர்த்தது. அது எமக்கிடையே ஆழமான நட்பாக வளர்ந்தது. நான் அவரை ஆழமாகவே நேசித்தேன்.

எமது விடுதலை இயக்கம் நெருப்பாறுகளைத் தாண்டிய வேளைகளிலும், புயல்களையும் பூகம்பங்களையும் சமாளித்த வேளைகளிலும், எரிமலைகளை எதிர்த்து நின்று எதிர்நீச்சல் போட்ட வேளைகளிலும் அவர் என்னோடு உறுதுணையாக நின்றார். விதையாக இடப்பட்ட எமது இயக்கம் முளைத்து, துளிர்த்து, பெருவிருட்சமாக எழுந்து நிற்கின்ற ஒவ்வொரு வளர்ச்சிப் பாதையிலும் அவர் உறுதியாகப் பங்கெடுத்தார்.

அவர் கண்ணியமானவர்; நேர்மையுள்ளவர்; இரக்க சிந்தனையாளர்; எல்லாவற்றுக்கும் மேலாக ஓர் இலட்சியவாதி. அந்த இலட்சியவாதியினது இழப்பு ஈடுசெய்யமுடியாத பேரிழப்பு. அந்த இலட்சியவாதியினது வழியிலேயே அவரது குடும்பமும் ஒன்றிப் போயிருந்தது. அந்த வகையில் அவரது உடன்பிறப்புகளில் மூவர் இந்த விடுதலைப் போரிற்குத் தம்மை அர்ப்பணித்திருக்கிறார்கள்.

அவரது மூளையத்தின் மென்மையான இழைகளில் தவழ்ந்த உள்ளத்து உணர்வுகளை நான் அறிவேன். அவரது பசுமையான நெஞ்சத்திற் பற்றியெரிந்துகொண்டிருந்த விடுதலை வேட்கையையும் நான் அறிவேன். அவர் உண்மையில் இறந்து விடவில்லை; எமது விடுதலை வரலாற்றின் உயிர்மூச்சாகத் தொடர்ந்து வாழ்கிறார்.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

**வே. பிரபாகரன்**
**தமிழீழத் தேசியத் தலைவர்,**
**தமிழீழம்.**

# பொருளடக்கம்

# சேரமுன்பே

லெப்.கேணல் இரும்பொறை. முல்லைத்தீவுக் கடலில் நிகழ்ந்த கடற்சமரொன்றில் வீரச்சாவைத் தழுவுகிறார். 18.09.01 அன்று முள்ளிய வளைத் துயிலுமில்லத்தில் வித்துடல் விதைப்பு நிகழ்விற் சங்கரண்ணை யைக் காண்கிறேன். வழமைபோலவே "என்ன 'மை சன்' (My son)" என்கிறார்.

தொலைத்தொடர்புச் சாதனங்களினூடாகச் சங்கரண்ணையைத் தொடர்பெடுக்கும்போதெல்லாம் எனது குரலைக் கேட்டவுடன் 'மை சன்னா' என்றே கேட்பார். ஆம், நான் அவருடைய மகனேதான். தலைவரின் பாதுகாப்பு வியூகங்களைப் பற்றிக் கற்றுத்தந்த தந்தை. காட்டின் நுணுக்கங்களை நுணுக்குக்காட்டியாற் பார்க்க வைத்த பிதா. அடிக்கடி அறிவியல் விடயங்கள் பற்றிக் கூறிச் சிந்திக்க வைத்த அப்பா.

அன்று அவரது பிறந்தநாள். எனது பிள்ளைகள் கூறியே தெரிந்துகொண்டேன். பிள்ளைகளுக்கும் அவருக்கும் அவ்வளவு உறவு இருந்தது.

வீட்டிற்கு வருவதாகக் கூறினேன். "இல்லை பிறந்தநாள் கொண்டாடவில்லை." தானே எனது வீட்டிற்கு வருவதாகக் கூறினார்.

52 ஆவது பிறந்தநாளான அன்று இரவு சங்கரண்ணை மனைவி யுடன் வந்தார். வழமையான அவரது உரையாடல் அன்றும் இருந்தது. பலதும்பத்தும் பேசினோம். பழைய நினைவுகளை மீட்பதிலேயே பெரும் பாலும் நேரம் போய்க்கொண்டிருந்தது. அரசியல், இராணுவம் எனப் பல்துறை ஆய்வுகளைக் கூறிக்கொண்டே இருந்தார்.

மணலாற்று அத்தியாயம் தொடங்கியது. காட்டு வாழ்வை இரை மீட்டுக்கொண்டார். இந்திய இராணுவத்துடனான சண்டைப் படம் கொஞ்ச நேரம் ஓடியது. தாடி வாழ்க்கையை மீண்டும் ஞாபகப்படுத்திக் கொண்டார். தாடியுடனான படமே தனக்குப் பிடித்தது என்பதையும் கூறத் தவறவில்லை.

ஒரு தாக்குதலுக்கு நாங்கள் அன்று தயாராகிக்கொண்டதை மீண்டும் என் கண்முன்னே கொண்டுவந்தார். தாடி வளர்த்திருந்த என்னைச் சீக்கிய இராணுவ வீரன்போல் தலைப்பாகை எல்லாம் அணிவித்து உருவமைத்துத் தான் புகைப்படம் எடுத்துக்கொண்டதை எடுத்துக்கூறி, அப்புகைப்படம் தன்னிடம் தற்போதும் இருப்பதாகக் கூறினார். அப்புகைப்படம் என்னைச் சேரமுன்பே அவர் போய்விட்டார்.

- கேணல் சொர்ணம் -
சிறப்புத் தளபதி
சிறப்புப் படையணி



# வரி

ஒரு கடமையின் நிமித்தம் எமது பிரிவிலிருந்து வேறொரு இடத்திற்குச் சென்றேன். இரண்டு வாரங்களிற் பணி முடிந்து திரும்பி விடுவேன் என நினைத்தேன். எனது ஒரேயொரு வரிச்சீருடையையும் வேறு உடைகளையும் எடுத்துச்சென்றேன்.

நீண்ட காட்டுப் பயணம். பற்றைகள், சேறுகள் என எல்லாப் பகுதியூடாகவும் நடைப் பயணம். இரண்டு வாரங்களே எனச் சென்ற போதும் பணியினின்றும் திரும்ப இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன. வரிச் சீருடையைப் பலமுறை போட்டதால் மோசமாய்ப் பழுதடைந்திருந்தது.

பணிமுடிந்து சங்கரண்ணையைச் சந்தித்தபோது பலதும்பத்தும் பேசினோம். சீருடை விடயமும் வந்தது.

என்னிடம் இருந்த ஒரே வரிச்சீருடையும் பழுதாகிவிட்டது. விடயத்தைச் சொன்னேன். ''மாவீரர் தினத்திற்குப் போடச் சீருடை இல்லை. தைத்துத் தருவீர்களா'' வினயமாகக் கேட்டேன்.

சிரித்தார். ''முயல்கிறேன். என்னட்டையும் மோனை ஒண்டுதான் கிடக்குது. நான் போடுறேல்லை. என்ர 'வித்துடலுக்குத்தான்' வச்சிருக் கிறன்'' சிரித்தபடியே சொன்னார். அன்றைய சந்திப்புக்குப் பிறகு, வரியுடனேயே சங்கரண்ணையைக் கண்டேன்.

*- அ. குழல்வாணன்*
*சிறப்புப் படையணி*

# உணராத இறுதிநாள்

காற்றிரைச்சற் சத்தம் கேட்கக்கூடியதாக இருந்தது. ஆனால் உணர முடியவில்லை. ஓங்கி உயர்ந்த, அடர்ந்த மரங்கள் சோளகக் காற்றுத் தரையைத் தொடுவதைத் தடுத்தன. சங்கரண்ணை நேசித்த, நீண்ட நாட்களாகத் தனது பிரதான உறைவிடமாகப் பயன்படுத்திய இடம் அதுவே. தனது வித்துடல்கூட அப்பகுதியில்தான் விதைக்கப்பட வேண்டுமென விரும்பினார்.

அங்குதான் அவரது முக்கிய ஆவணங்கள், வேலைத்திட்ட இரகசியப் பதிவேடுகள், தனக்கு அவசியமானவை எனப்பட்ட பொருட் கள் எல்லாம் இருந்தன. அவரது அலுவலகம், தங்குமிடம், சந்திப்பிடம் எல்லாமாகச் செயற்பட்ட இடமும் அதுதான்.

காலையில் எனது பெயரைக் கூவியழைக்கும் சங்கரண்ணையின் குரல் கேட்டது. ஓடோடிச் செல்கிறேன்.

அலுமாரிகள் யாவும் திறந்து, உள்ளுடன்களை வெளிக்காட்டி நின்றன. "எல்லாத்தையும் இந்தப் பெட்டியள்ளை அடுக்கோணும் மோனை. எல்லாத்தையும் இடம் மாத்தோணும் மோனை" சங்கரண்ணை யின் வார்த்தைகள் என்னில் ஓர் அதிர்வை ஏற்படுத்தின.

அம்முகாமிற் சங்கரண்ணையின் இறுதிநாள் அன்றுதான் என்பதை நான் எப்படி உணர்ந்திருக்கமுடியும்.

வழமையான கேலிப் பேச்சுகள், சுவாரசியமான கதைகள், பகடிகள். வேலையின் களைப்பை நான் உணரவில்லை. இருவரு மாகப் பொருட்களை அடுக்கினோம். பெட்டிகளை ஊர்தியில் ஏற்ற வேண்டும். வேறொருவரை அழைத்துவர நான் புறப்பட்டேன். அதை என் செய்கையால் உணர்ந்தவர் "என்ன ஐசே, என்னை வயசுபோன ஆள் எண்டோ நினைச்சீர். வாரும் தூக்குவோம்." பெட்டிகளைச் சிரமப் பட்டுத் தூக்கி அடுக்கினோம்.

முடிந்ததும், இடுப்பைப் பிடித்தபடி வழமையான சிரிப்புடன் "என்ன மோனை வயது போயும் என்னைச் சும்மா இருக்க விடுறியள் இல்லை".

என்ன அர்த்தத்தில் கூறினாரோ?

ஐ. சிவலோகன்
சிறப்புப் படையணி

# புதுமை

எனது மாமா தான். நான் இயக்கப் பணியிலிருந்து விடுப்பிற் செல்லும்போது அவரது வீட்டிற்கே செல்வேன். எனது உறவு என்பதற் காகவல்ல; ஓர் ஆசானாக, வழிகாட்டியாக, போராட்ட உணர்வுகளைப் பகிர்ந்துகொள்ளும் போராளியாக அவரைப் பார்ப்பதாலேயேயாகும்.

அவரை அணுகிக் கதைப்பதற்கே பயந்த எனக்கு அவருடைய உறவுக்கப்பால் எப்பொழுதும் அவருடன் கதைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்தியவை அவருடைய சிலேடை யான பேச்சும் அறிவாற்றலும் அவர் தரும் தரவுகளும் போரியல் தொழினுட்பக் கருத்துக்களுமேயாகும்.

1999 ஆம் ஆண்டின் இறுதிப் பகுதி என நினைக்கிறேன். நான் விடுப்பில் மாமா வீட்டிற்கு - சங்கரண்ணையின் வீட்டிற்குச் சென்றேன்.

நான் சென்ற அன்று சங்கரண்ணையும் வீட்டில் நிற்கிறார். அவரது வாகனம் அதை உறுதிசெய்தது. மாமி வரவேற்றுக் கூட்டிச் செல்கிறார். "மருமகள் வாறா" உரத்த குரலில் மாமி. "மருமகள் வந்தால் இண்டைக்கு ஏதாவது ஸ்பெசல் செய்" மாமாவின் குரல் கேட்டது.

"எங்கே மாமா?" மாமியிடம் கேட்டேன். "அந்த மனுசன் விடியற் காலையிலை இருந்து ஏதோ எழுதிக்கொண்டு இருக்கு" என்றா மாமி. மாமி பிள்ளைகளுடன் அளவளாவிக் கொண்டிருந்தேன். ஒரு மணி நேரத்திற்கு மேலாகவே இவ்வாறு அவர்களுடன் அரட்டையடித்துக் கொண்டிருந்தேன். மாமா தனது இருப்பிடத்தை விட்டு வருவதாகத் தெரியவில்லை.

மாமாவின் இடத்திற்குச் சென்றேன். கோவைக் கட்டுக்கள், குறிப்புப் புத்தகங்கள், வானொலி எனப் பலதும் இருந்தன. என்னை முன்னே அமரச் சொன்னார். ஏதோ கோவைகளைப் புரட்டிப் புரட்டிக் குறிப்புக்கள் எடுக்கிறார். நான் பொறுமையை இழக்கிறேன்.

"'மாமா' வீட்டிலை நிற்கேக்கிள்ளையாவது கொஞ்சம் ஓய்வெடுங்க ளேன்" கண்டிப்புடன்கூடிய பாசத்துடன் கேட்டேன்.

"நீண்ட ஓய்வு எடுக்க முதல் செய்யவேண்டியதைச் செய்து போடோணும்" பீடிகை போடும் அவரது வழமை அன்றும் எதிரொலித்தது.

தற்காலிக ஓய்வையே கேட்டேன். இவ்வளவு விரைவாக நீண்ட ஓய்வையே எடுத்துவிட்டீர்களே.

*பிரபாமதி*
*கடற்புலிகள்*



# கடைசிப் பார்வை

20.09.2001. "உன்னை உடனே சயிக்கிளில் வரட்டாம்." சங்கரண்ணையின் முகாமுடன் நேரில் தொலைத்தொடர்புச் சாதனத்தின் ஊடாகக் கதைக்க முடியாது. வேறு ஒரு முகாமூடாக இவ்வறிவிப்பு எனக்குக் கிடைத்தது.

வரச்சொல்வார், பின் வரவேண்டாம் என்பார், இன்று வருவேன் என்பார், பின் வரவே மாட்டார், இப்போதைக்கு உங்கால் இல்லை என்பார், சில மணி நேரங்களில் தோன்றுவார். இது நாம் அவரிடம் கண்ட குணாம்சம்.

நான் தொலைத்தொடர்புச் சாதனத்தை நிறுத்தவில்லை. தொடர்ந்து சிறிது நேரம் இயங்குநிலையில் விட்டுப் பார்த்தேன். வர வேண்டாம் என்று சொல்வார் என்ற எதிர்பார்ப்புடன். வேறு தகவல் வர வில்லை. போகத்தான் வேண்டும்.

கடுமையான யோசனை என்னைப் பற்றிக்கொண்டது. நான் அப்படி என்னதான் செய்தனான்? ஒவ்வொன்றாக மீட்டுக்கொண்டேன். எதுவும் இல்லையே. யாரோ மாட்டி வச்சிட்டாங்கள். எனக்குள் யோசித்துக் கொண்டேன்.

போகவேண்டிய தூரம் நாற்பத்தைந்து கிலோமீற்றர். சயிக்கிள் ஓட்டம். தலை விறுவிறுத்தது. என்ன பிரச்சினையோ என நெஞ்சு படபடத்தது. ஒரே குழப்பம்.

ஓடுறேன் ஓடுறேன். போகவேண்டிய இடம் வரவேயில்லை. எப்படி வரும். மனது இடம் கொடுத்தால்தானே. அடைந்து விட்டேன். சங்கரண்ணை இருக்கிறார்; வேறொருவரும் பக்கத்தில் இருக்கிறார்; நிமிர்ந்து பார்த்தார். எதுவித முகச் சலனமுமின்றி "நில்லும் ஐசே கூப்பிடுறேன்" என்றார்.

ஏதோ சிக்கிப் போட்டுது. நினைத்தபடியே சென்றேன். யோசித்தபடி இருந்தேன்.

சிறிது நேரம் கழிந்து 'வரட்டாம்' கட்டளை வந்தது. கண்மூடி விழிக்கும் போதெல்லாம் ஒரே மின்னலும் நட்சத்திரங்களும் தோற்றமளிப்பது போன்று இருந்தது.

முன்னே நின்றேன். "இருமயிசே" என்றார். உயிரற்ற உடலாக இருந்தேன். "என்ன மாதிரி ஐசே நான் சும்மா வரச் சொன்னனான். நான் உங்கட பக்கம் இப்போதைக்கு வரமாட்டன். அப்போது நீர் வரேக்கிள்ளை மற்றவர் இருந்தபடியால் உம்மை நிக்கச் சொன்னனான். வோக்கியிலையும் உதைச் சொல்ல ஏலாது. சொன்னா தெரியும்தானே. மற்ற பேஸ்காரர் நான் இப்போதைக்கு வரமாட்டேன் எண்டதை மணந்திடுவாங்கள்."

எப்படியெல்லாம்....

அப்பாடா. ஒரு நிம்மதிப் பெருமூச்சுடன் விபரிக்கிறேன். எல்லாத்தையும் அவதானமாகக் கேட்கிறார். "சரி மோனை சாப்பாட்டை எடுத்திட்டு வா"

நான் உணவு எடுத்து வருகிறேன். இருவரும் இருந்து பேசியபடியே உணவு உண்கிறோம்.

"திலீபன்ரை நாள் முடிஞ்சாப் பிறகுதான் வருவன். இந்தா மோனை 300 ரூபா காசு. போகேக்கிள்ளை ஒரு மிதிவெடியும் ரீயும் அடியும். சைக்கிளையும் திருத்தும்" இவைதான் நான் கேட்ட இறுதி வார்த்தைகள்.

அவைதான் கடைசியான வார்த்தைகள். அன்றுதான் கடைசியாக என்னைப் பார்த்தது.

- குழல்வாணன் -
சிறப்புப் படையணி

# இறுதி இரவு

25.09.2001. சங்கரண்ணையின் இறுதி மாலைப்பொழுது. எமது பிரிவுப் பொறுப்பாளர் ஒருவருடனான நீண்ட பேச்சு. வழமைக்கு மாறான சிரிப்பொலிகள். என்னையும் இடை இடையே கூப்பிட்டுச் சிறு வேலைகள் தந்துகொண்டிருந்தார்.

பேசிக் கொண்டே இருந்தார்கள். புறப்பட ஆயத்தமானார்கள். தென்னைகளைச் சுற்றிச் சுற்றி வந்தபடியே தொடர்ந்தது பேச்சு. அரை மணிக்குமேற் சென்றுவிட்டது.

வந்தவர் மோட்டார் சயிக்கிளை உதைத்தார். முடிந்துவிட்டது என நினைத்தோம். மோட்டார் சயிக்கிள் இரைந்துகொண்டிருக்க மேலும் பதினைந்து நிமிடங்கள் பேச்சுக்கள் தொடர்ந்தன.

நாங்கள் புறப்பட ஆயத்தமானோம். ஏறும்போதே "இண்டைக்கு ஒரு வெட்டு வெட்டுவம்" என்றார். எனது மனம் குளிர்ந்தது.

வயிறு குளிரக் குளிர்களி, மிதிவெடி. மூச்சுவிட இடமில்லாமல் உண்டுவிட்டேன்.

நேரம் எட்டைத் தாண்டிவிட்டது. அதுதான் சங்கரண்ணையின் இறுதி இரவு என்பதை யார்தான் உணர்ந்தனர்.

உறுமலுடன் புறப்பட்டது ஊர்தி. முகாமிற்கென வாங்கி வைத்த "மிதிவெடிகள்" மூடிய ஊர்தியினுள் என் மூக்கைத் துளைத்தன. இதை உணர்ந்தோ என்னவோ சங்கரண்ணை கண்ணாடியை அரைவாசி பதித்துக்கொண்டார்.

வழமையான வீதியால் ஊர்தி சென்றது. இருமருங்கும் ஓங்கி வளர்ந்த மரங்கள். அதன் அடர்ந்த கிளைகள் ஒன்றுடன் ஒன்று இணைந்து வீதிக்குக் கூடாரமமைத்திருந்தன. குகையினூடாகச் செல்வது போன்ற உணர்வு.

ஊர்தி நடமாட்டங்கள் ஓய்ந்திருந்தன. மனித நடமாட்டமும் அறவே அற்றிருந்தது. வீதி வெறிச்சோடிக் கிடந்தது. ஆயினும் வழமையான வேகத்திலேயே ஊர்தி.

வெறிச்சோடிய வீதியிலே ஊர்தி வெளிச்சத்தில் உருவங்கள் இரண்டு அசைவது தெரிகிறது. எதிர்த்திசையிலிருந்து வருவது தெரிகிறது. இயக்கச் சீருடை தெரிகிறது. மேலும் அண்மிக்க இரு பெண் போராளிகள் என்பது எமது கண்ணிற்கு உறுதியாகிறது.

ஊர்தி, அவர்கள் அருகே நிறுத்தப்படுகிறது. "எங்கே இந்த நேரத்தில்" கேட்டார் சங்கரண்ணை. "வாகனம் பழுதாகி..." தமது பிரச்சினையைக் கூறினார்கள்.

"சாப்பிட்டாச்சா" சங்கரண்ணை. மௌனம் அவர்கள் நிலையை உணர்த்தியது.

"நான் யார் தெரியுமா" மீண்டும் சங்கரண்ணை. தொடர்ந்தது மௌனம். "நான்தான் சொர்ணம்."

சிரிக்கிறார்கள். "சொர்ணம் அண்ணையின் குரல் எங்களுக்குத் தெரியும்" தொடர்ந்து சிரிக்கிறார்கள்.

சங்கரண்ணையும் அர்த்தத்துடன் சிரிக்கிறார். முகாமிற்கென எடுத்துச் செல்லும் மிதிவெடிப் பாசல் கைமாறுகிறது. அவர்களிடம் கொடுக்கிறார்.

"நான்தான் வேலுப்பிள்ளை பிரபாகரன்" கூறியபடியே பதிலுக்கு எதிர்பாராமல் ஊர்தியை ஓட்டுகிறார்.

என்னைப் பார்த்து "பாவங்கள்" என்றார்.

- *சு. சகுந்தலன்* -
*சிறப்புப் படையணி*

# நினைவு நாள்

இரண்டு நீலவாளிகள் நிறையத் தண்ணீர் நிரப்பப்பட்டிருக்கிறது. கிணற்றிலிருந்து மூன்று வாளி நீர் அள்ளி உடலை நனைக்கிறார். சவர்க்காரம் போடப்படுகிறது. சிறிய குவளையொன்றினால் நீலநிற வாளிகள் ஒவ்வொன்றாக வெறுமையாக்கப்பட்டன.

"தண்ணி இருக்கெண்டாப்போலை வீணாக்கக்கூடாது மோனை. தண்ணி இல்லாத நாட்களை யோசிக்கோணும்" கூறியபடியே குளித்தார்.

மணலாற்றுக் காட்டில், இந்திய இராணுவக் காலப்பகுதியின் நீர்ப்பற்றாமையால், ஈரத்துணியால் உடலைத் துடைப்பதுதான் குளியல் என்பதுபற்றிக் கூறித் தண்ணீரின் அருமையை விளக்கியபடியே அன்றைய குளிப்பு முடிவடைந்தது.

காலைக் கதிரவனின் பொற்கதிர்கள் காட்டு மரங்களை ஊடறுத்து கீற்றுக்களாக எமது பாதையிற் கோலம் போட்டிருந்தன.

சங்கரண்ணை தனது தங்குமிடக் கொட்டிலை அடைகிறார். கூடவே நானும் செல்கிறேன். புறப்படுவதற்கான ஏற்பாடுகளில் ஈடுபடு வதை உணர்கிறேன்.

"நானும் வெளிக்கிடவா." நேரடிப்பதில் எதுவுமில்லை. சில வேலைகளைச் சொல்கிறார். குறித்துக்கொள்ளும்படி கூறுகிறார்.

"திலீபன் என்ன நேரத்திற்கு வீரச்சாவடைந்தவர்" என்னிடம் கேட்டார். நான் தட்டுத்தடுமாறினேன். "திலீபனின் நினைவு நிகழ்ச்சி களுக்குப் போகவேண்டும். மாலை இரண்டு மணிக்கு வருவேன். வேலை எல்லாம் முடித்துவிட்டு வெளிக்கிட்டு நில்."

இப்பொழுது தனியாக வெளிக்கிடப் போவதை உணர்ந்தேன். மாலை திலீபனின் நினைவு நிகழ்ச்சிக்குக் கூட்டிச்செல்லப் போகிறார். உள்ளத்தில் ஓர் உத்வேகம். தேவையானவற்றைக் கேட்டு வாகனத்தில் ஏற்றினேன்.

தியாகி திலீபனின் நினைவு நாளே அவரது நினைவு நாளாகவும் வரும் என்பதை நான் உணர்ந்திருக்கவில்லை.

*- ச. சகுந்தலன் -*
*சிறப்புப் படையணி*

# முந்திவிட்டார்கள்

''தண்ணிக் கான் வைச்சாச்சு அண்ணை''

''இந்தக் கமா (உருமறைப்புத் துணியாலான பை)'' என்று காட்டினேன். ''அதிலேயும் முக்கியமான சாமான்கள் இருக்கு (சற்று யோசிக்கிறார்). அதையும் ஏத்து மோனை'' சங்கரண்ணை சொல்ல நான் அதையும் ஏற்றுகிறேன்.

ஒவ்வொன்றையும் ஏற்றிவிட்டு விபரத்தை அறியக்கொடுக்கும் போதெல்லாம் நன்றி கூறும் அவரின் உதடுகள் வழக்கம்போலவே அன்றும் கூறத் தவறவில்லை.

வாகனத்தில் உள்ள தொலைத்தொடர்புச் சாதனத்தின் அன்ரனா வைச் சரிபார்க்கும்படி கூறுகிறார். ஏற்கனவே சரிபார்த்திருந்தேன். ''பார்த்திட்டேன் அண்ணை'' எனக் கூறுகிறேன்.

கைக்கடிகாரத்தைக் கட்டியபடி அதைச் சரிசெய்துகொண்டு வாகனத்தைச் சுற்றி ஓர் உலா. நான்கு சில்லுகளையும் பார்க்கிறார். அன்ரனாவையும் ஆட்டிப் பார்க்கிறார். மீண்டும் ''நன்றி'' உச்சரிக்கிறார்.

''சிக் என்னமாதிரியண்ணை சீட்டிலை கொளுவவா?'' என்றும் அவருடனேயே உலாவரும் சுரிகுழல் துப்பாக்கி (றைபிள்) பற்றி வினவுகிறேன்.

''இல்லை மோனை. பக்கத்துச் சீற்றிலை என்ரை பக்கம் பிஸ்டல் கிறிப் இருக்கிற மாதிரி வை மோனை''. ''அவசரத்துக்கு எடுத்து அடிக்கக்கூடிய மாதிரி வை மோனை'' சங்கரண்ணை சொல்லிக் கொண்டே சாரதிப் பக்கக் கதவைத் திறக்கிறார்.

சிக்கும் அன்ரனாவும் இயங்குமுன்பு முந்திவிட்டார்களே!

- சு. சகுந்தலன் -
சிறப்புப் படையணி

# தொடர்பில்லாதவிடத்து

எங்குச் சென்றாலும் தொலைத்தொடர்புச் சாதனம் அவர் கையில் இருக்கும். வாகனத்திலும் முகாம்களில் அவரின் மேசையருகிலும் தயார் நிலையிலேயே இருக்கும்.

எவர் வெளியே சென்றாலும் செல்பவர் தொலைத்தொடர்புச் சாதனத்தை எடுத்துச் செல்லவேண்டும். செல்லும் இடத்தை அடைந்தவுடன், அங்கிருந்து புறப்படும்போது, வேலை முடிந்தவுடன் எனக் குறிப்பிட்ட நேரங்களில் தொடர்பெடுத்தே ஆகவேண்டும்.

தொடர்புச் சாதனத்துடன் இருப்பவர் ஆகக்கூடியது இரண்டு முறை கூப்பிடுவதற்குள் சாதனத்தினூடாகக் கதைத்துவிடவேண்டும். இல்லை யேற் பல கேள்விகள், விளக்கங்கள், ஆலோசனைகள், புத்திமதிகளுட னேயே தொலைத்தொடர்புச் சாதனத்தினூடாக உரையாடல் தொடங் கும்.

எந்த நேரத்திலும் சங்கரண்ணையைத் தொலைத்தொடர்புச் சாதனத்தினூடாக அழைத்தால், அவர் தொடர்பில் உள்ள வேளைகளில் இரண்டு அழைப்புகளிற்குள் அவர் குரல் கேட்கும். அவர் தொடர்பில் உள்ளபோது இரண்டு முறைக்குள் தன்னிடம் இருந்து பதில் அழைப்பு இல்லாவிட்டால் "சங்கரண்ணை வீரச்சாவு என நினைக்கவும்" என அவர் அடிக்கடி சொல்லுவார்.

வாகன ஊதியினால் ஒலி எழுப்பிவிட்டுச் செல்கிறார். வாகன இரைச்சலொலி மறைகிறது. நான் எனது வேலையைத் தொடங்குகிறேன். 'பூம்ம்...ம்ம்' விண்ணை அதிரவைக்கும் வெடியொலி காதுகளை அடைத்தது.

திகைப்பினின்றும் விடுபடச் சிறிது நேரம் எடுத்தது. என்னவென்று விளங்கவில்லை. அங்கும் இங்கும் ஓடினேன்.

ஏதோ நினைவு வந்தது. தொலைத்தொடர்புச் சாதனத்தை நோக்கி ஓடினேன். ரூஎயிற் (2,8)... சேரா கிலோ (SK)... ரூஎயிற் (2,8)... சேரா கிலோ (SK)... இரண்டு தடவைகள் சங்கரண்ணையைக் கூப்பிட் டேன். சற்று இடைவிட்டேன். மறுபுறத்திற் பதில் ஏதும் இல்லை. நெஞ்சு திக்கென்றது. அவர் சொல்லும் வார்த்தைகள் ஒரு கணம் மின்னலெனத் தாக்கின.

தொடர்பெடுக்க முடியாத இடத்திற்குச் சென்றிருப்பாரோ? - என்னை நானே தேற்றிக் கொண்டேன்.

ஆனால்! நிரந்தரமாகத் தொடர்பில்லாமற் சென்றுவிட்டாரே.

- *சு. சகுந்தலன்* -
*சிறப்புப் படையணி*



# வாழ்விலும் நிதானம். சாவிலும்...

குட்டியானையின் நடை.

சங்கரண்ணை நடந்து வரும்போது அப்படித்தான் இருக்கும். நிதான நடை - சீரான வேகம் - கம்பீரத் தோற்றம். எத்தனையோ ஆபத்துக்கள் காலடியிற் கிடந்தபோதும் வெற்றிகரமாக அவற்றைக் கடந்துவந்தவர்.

திசை தெரியாக் காட்டிற்குள் திசைகாட்டியின் உதவியுடன் சங்கரண்ணை நடந்தபோது, அங்கே புதைந்து கிடந்த மிதிவெடிகள் வெடிக்கவில்லை. அது அவரின் சாதுரியம்.

ஒருநாள், முல்லைத்தீவுப் பாதையோரம் அவர் நின்றபோது கிபிர் எறிந்த குண்டொன்று வெடிக்க மறுத்து - நிலத்தில் புதைந்தது. அது அவரின் பாக்கியம்.

ஆனால், அன்று மட்டும் அந்தக் கிளைமோர்கள் இரண்டும் ஏன் சரியாக வெடித்தன.

கிளைமோர் வெடித்த அந்த மண்பாதையில் வெடித்த இடத்தி லிருந்து சுமார் 100 மீற்றர் தூரம்வரை அவரது ஊர்தி நிதானமான முறையில் நேராக ஓடி - ஒரு மரத்திலும் மோதாமல் வீதியோரமாக நின்றதே.

வீரச்சாவின்போதுங்கூட அந்தக் குட்டியானையின் நிதானமா! நீண்டகாலமாக அவரைச் சுமந்து திரிந்த அந்த ஊர்தி, அவரது பண்பு களைத் தானும் பெற்று அவருக்குச் செய்த இறுதி வணக்கமா?

உயிரற்ற உடலாக ஊர்தியின் ஓட்டுநர் இருக்கையில் அமைதியாகக் கிடந்த சங்கரண்ணையின் கோலத்தை - அவர் பற்றிய பசுமையான நினைவுகளைப் போலவே - என்னால் மறக்கமுடியாது.

- செல்வராசா -



# நீண்ட ஓய்வு

சொந்தப் பெயர், ஊர், வேறு தனிப்பட்ட விடயங்கள் எதுவாயினும் சகபோராளிகளுக்குத் தெரியப்படுத்தக் கூடாதென்பது கண்டிப்பாகப் பின்பற்றப்படவேண்டிய ஒன்று. விடுதலைப் புலிகளின் ஆரம்பச் செயற்பாடுகளில் இது ஒரு கட்டுப்பாடுங்கூட.

இரகசியப் பாதுகாப்பிற்காக, உறவினர் எதிரியின் பாதிப்பிற்குள் சிக்காது இருக்க, பிரதேச, சாதி, மத வேறுபாடுகள் தவிர்க்கப்பட இயக்கப்பெயர் இயக்கத்தில் இணையும்பொழுது போராளிகளுக்குச் சூட்டப்படுகிறது.

இயக்கத்தின் முதன் மாவீரன் லெப். சங்கர் அவர்களின் இயக்கப் பெயரான 'சங்கர்' என்பதையே தனது இயக்கப் பெயராக ஏற்றுக் கொள்கிறார்.

முதன் மாவீரன் பெயருடன் இணைந்து, காந்தி தேசத்தின் தவறான போக்கிற்கு எதிராக மக்கள் எழுச்சியை ஏற்படுத்திய, அற வழியில் தன்னை ஆகுதியாக்கிய தியாகி திலீபனின் நினைவு நேரத்தில் இந்த மண்ணில் வித்தாகிய புதுமை சாவிலும் ஓர் அர்த்தத்தைப் புகட்டியுள்ளது.

*சி. நிர்மலன்*
*சிறப்புப் படையணி*

# சாவுக்கு முன்

சங்கரண்ணையின் குறிப்புப் புத்தகத்தில், அவரது வீரச்சாவு நிகழ்விற்குச் சில நாட்களுக்கு முன்பு, அவரது கையெழுத்தில் எழுதப்பட்ட சில வரிகள்.

சாவினை அடைவதற்கு -
எந்த வீதியினூடா வாசல்களினூடாக நாமும்
பிரயாணஞ் செய்ய வேண்டியுள்ளதோ,
அந்த வீதியைப்பற்றி எமக்குக் கூறுவதற்கு -
இந்த வாசல்களினூடாகச் சென்றும்
பல்லாயிரக் கணக்கானோரில் ஒருவராவது திரும்பி
வராதது - ஆச்சரியமானதல்லவா?



இராஜா
வைத்திலிங்கம்



சொர்ணரத்தினம்
(மனோன்மணி)



ஜீவானந்தம்



சொர்ணலிங்கம்
(கேணல் சங்கர்)



சிறீதரன்



மனோகரன்
(கப்டன் கரன்)



வசீகரன்
(லெப். சித்தாத்தன்)



உதயகுமார்

# தந்தை



கார்த்திகேசு இராஜா வைத்திலிங்கம், குடும்பத்தில் ஒரேயொரு மகன். வல்வெட்டி யைப் பிறப்பிடமாகக் கொண்டவர். ஆரம்பத் தில் அங்கேயே வசித்தார். 1955 இலிருந்து தொழில் நிமித்தம் வவுனியாவைப் பிரதான இருப்பிடமாக்கிக் கொண்டார்.

ஆரம்பத்திற் பிரத்தியேக வகுப்புக்கள் கொடுக்கும் ஆசிரியராகக் கடமைபுரிந்தார். பின்பு உதவித் தொழினுட்பவியலாளராகப் பணிபுரிந்தார். ஓய்வு பெறும்வரை அத்தொழி லையே மேற்கொண்டு வந்தார்.

அவரின் ஆங்கிலப் புலமை அவரது பிள்ளைகளின் ஆங்கில அறிவு வளர்ச்சியில் முக்கிய பங்கு வகித்தது. அவருடன் ஆங்கிலம் பேசிப் புதிய ஆங்கிலச் சொற் களையும் அறிவையும் தான் வளர்த்துக் கொண்டதாகச் சங்கரண்ணையே பல தடவைகள் கூறியிருக்கிறார். குடும்பத்தில் தகப்பன் பிள்ளை உறவுகூட நட்புடன் கூடியதாகவே இருந் தது.

சிங்கள இனவெறி வவுனியாவின் இயல்பு வாழ்க்கையைப் பாதிக் கத் தொடங்கிய காலம். எல்லைப்புற மாவட்டமான வவுனியாவிலும் சிங் களக் குடியேற்றம் அதன் இனச்சமநிலையில் தாக்கத்தை ஏற்படுத்தி யது. தமிழின உணர்வு பரவலாக முளைவிடத் தொடங்கியது. சிங்கள அரச பயங்கரவாதமும் தனது கொடூரக் கரங்களைத் தமிழின உணர் வாளர்கள் மீது பதிக்கத் தொடங்கியது. தமிழரின் உரிமைபற்றிப் பேசு வது, உரிமைக்காகச் செயற்படுவது எல்லாம் அந்த இரும்புக் கரங்களின் பிடியால் நசுக்கப்பட்டுக் கொண்டிருந்தன.

இராஜா வைத்திலிங்கம் அதற்கு மசியவில்லை. எங்கு நின்றா லும் தமிழரின் உரிமை பற்றிப் பேசத் தயங்குவதில்லை. தனது மனத் திற் பட்டதைப் பளிச்செனப் பேசுவார். அரச இராணுவ, பொலிஸ் நடமாட்டங்கள் சர்வசாதாரணமாகக் காணப்பட்ட காலமென்பதால் அவர் நிற்குமிடத்தைத் தவிர்த்துச் சென்றவர்களும் உண்டு.

விடுதலைப் போராட்டத்தில் அவரது பிள்ளைகள் பதித்துச் சென்ற வரலாறுகள், அவரது இன உணர்வை வெளிப்படுத்தி நிற்கின்றன.

பிள்ளைகள் போராளிகளாக உள்ளபோது, தனது வீட்டிற்கு வரும் தன் பிள்ளைகளின் தோழர்களுடன் இயல்பாகப் பழகிக்கொள்ளும் தன்மை போராளிகள் பலரையும் கவர்ந்துள்ளது. போராளிகள் பலருக் கும் குளிப்பு, தேநீர், சாப்பாடு, ஓய்வு எனப் பலவற்றிற்குமான ஓர் அரவணைப்பு இல்லமாகவே அவர் இருந்த வீடு திகழ்ந்தது.

“ஐ ஆம் மிஸ்ரர் ராஜா வைத்திலிங்கம். யூ ஆர் மிஸ்ரர்...” (I am Mr.Rajah Vaithilingam. You are Mr....) எனத் தொடங்கும் அவரது உரையாடல், பேசிக்கொண்டிருக்கும் போராளிகள் தம்மை மறந்து கேட்குமளவுக்குச் செல்லும். ஆழமான கருத்துகளும் நகைச் சுவையும் மிகுந்தவையாக இருக்கும். தனது வாழ்க்கை வரலாற்றி லிருந்து அரசியல், போராட்டம் என விரிந்துசெல்லும்.

ஓயாத அலைகள் ஒன்று முல்லைத்தீவை வெற்றிகொண்ட சமர். அச்சமருக்குச் சில நாட்கள் முன்பு சாவைத் தழுவுகிறார். சமரைப் பற்றிய கமுக்கம் அவரது சாவு நிகழ்வை எவரும் அறியாத வகையில் மௌனமாக நிகழ்த்தி வைத்தது.

- குகா. பா. இந்திரா. சி.சோ. பாநு.
சி. நிர்மலன். சண்முகம். க.சி. மணியம்

# தாய்



தாயாரின் பெயர் கணபதிப்பிள்ளை சொர்ணரத்தினம். மனோன்மணி என்றும் அழைக்கப்பட்டுவந்தார்.

பருத்தித்துறையிற் பலராலும் அறியப் பட்டவர்களுள் ஒருவரான சக்கடத்தார் கணபதிப்பிள்ளையின் மகள். அவரது தாயார் வல்வெட்டித்துறையைச் சேர்ந்தவர்.

சங்கரண்ணையின் குடும்பத்தைத் தாயாரே நிர்வகித்து வந்தார். பிள்ளை களின் கல்வி, அவர்களின் தேவைகள் அனைத்திலும் அவரே முக்கிய பங்கு வகித்துவந்தார்.

தமிழ், ஆங்கிலம், சிங்களம் ஆகிய மூன்று மொழிகளிலும் தேர்ச்சியுள்ளவர். வாசிப்புப் பழக்கம் அவரின் சிறப்பம்சம் ஆகும். வர லாற்று நூல்கள், வரலாற்றுக் கதைகள், விடுதலைப் போராட்ட வரலாறு கள் எனப் பல்வகைப் புத்தகங்களையும் ஆழமாகப் படிப்பது மாத்திர மல்லாமல் அவற்றைத் தனது பிள்ளைகளிற்கும் சுவைபட ஊட்டி, அறிவு வளர்ச்சிக்கு அடிப்படையாக விளங்கினார்.

மகாபாரதம், இராமாயணம் போன்ற இதிகாசக் கதைகளையும் வேங்கையின் மைந்தன், பொன்னியின் செல்வன் போன்ற வரலாற்றுக் கதைகளையும் வீர சிவாஜியின் வரலாறு போன்ற வரலாறுகளையும், படித்தும் பிள்ளைகளுக்குச் சிறு வயதில் புகட்டியும் அறிவூட்டுவதில் பெரும்பங்கு வகித்தார்.

தாயாரின் வாசிப்புப் பழக்கம், பிள்ளைகளுக்கும் பத்திரிகை வாசிப்பில் ஆர்வத்தை ஏற்படுத்தியது. சங்கரண்ணையில் இப்பழக்கம் நன்கு பதிந்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

புத்திக்கூர்மை, அறிவாற்றல், துணிவு ஆகிய குணாம்சங்களை ஒருங்கே கொண்டிருந்த புதுமைப் பெண்ணாகவே விளங்கினார். அறி வூட்டலில் மட்டுமல்ல பிள்ளைகளை விளையாட்டுக்களில் ஊக்குவித்துப் பங்கேற்கவைக்கும் தன்மையிலும் முன்னின்றார். சிறுவயது முதல், இளைஞர்களான பின்பும் சரி, பிள்ளைகள் ஏதாவது விளையாட்டுக்களிற் பங்கேற்பின் அம்மைதானத்தில் தானும் நின்றுகொள்வார்.

வவுனியா மாவட்டத்திற் சிங்களக் குடியேற்றங்கள் முளையெடுக் கத் தொடங்கிப் படிப்படியாக வவுனியா தெற்குச் சிங்கள உதவி அர சாங்க அதிபர் பிரிவு உருப்பெற்றுக்கொண்டது. பாடசாலைகளும் தமிழ், சிங்களப் பாடசாலைகள் என வவுனியா மாவட்டத்தின் பல்வேறு இடங் களில் உருவெடுத்தன. இன முரண்பாடுகள் அப்போதே ஆரம்பித்து விட்டன. பொது நிகழ்வுகள், விளையாட்டுப் போட்டிகள் போன்றவற்றில் இன முரண்பாடுகள் தலைதூக்கிச் சிறிதளவான வன்முறைகளாக வெடித்து மறைந்து கொண்டிருந்தன.

பாடசாலைகளிற்கிடையே இடம்பெற்ற விளையாட்டுப் போட்டி ஒன்றில் தமிழ், சிங்களப் பாடசாலைகள் என அனைத்தும் கலந்து கொண்டன. பிள்ளைகளும் முன்னணி விளையாட்டு வீரர்கள். விளை யாட்டுப் போட்டியில் இன முரண்பாடு தலைதூக்கியது. அப்பிரதேசம் எங்கும் அது விரிந்து செல்லக்கூடிய நிலைமை தோன்றியது. சுற்றாடல் சிங்களக் குடியேற்றங்களைக் கொண்டிருந்ததுடன் தனித்தமிழ்க் குடும்ப மாகத் தமது குடும்பம் இருந்ததாலும் பிள்ளைகள், விளையாட்டில் திறமையானவர்களாக இருந்ததாலும் தமக்குப் பாதிப்பு வரக்கூடும் என உணர்ந்தார். முன்னெச்சரிக்கை நடவடிக்கையில் ஈடுபட்டார். வீட்டை அலங்கோலப்படுத்தினார். வீட்டில் இருந்த சில படங்களைப் போட்டு உடைத்தார். இனவாதிகள் சிலரின் தாக்குதலுக்கு வீடு உள்ளானதாகப் பொலிஸ் நிலையத்தில் முறைப்பாடு செய்யப்படுகிறது. வீட்டிற்குப் பொலிஸ் பாதுகாப்பு. அத்துணிச்சலான, பயமில்லாத செயற்பாடு பிள்ளைகளுக்கு வழிகாட்டியாக அமைந்தது.

தாயின் வழிகாட்டல் பிள்ளைகளுக்குப் பெரிதும் உதவியது. பிள்ளைகளும் தாயின் மீது அதீதப் பற்றை வைத்திருந்தனர்.

17.03.1978 இல் தாயாரை இழந்தது அந்தக் குடும்பம். குடும்ப நிர்வாகியை இழந்துவிட்டதென்றே கூறலாம். சங்கரண்ணை அப்பொழுது நாட்டில் இருக்கவில்லை. கப்பலொன்றில் பணியாற்றிக் கொண்டிருந்தார். இடைநடுவில் வரமுடியாத நிலை.

'தாயிற்சிறந்ததொரு கோவிலுமில்லை' என்ற முதுமொழியைத் தாயாரின் படத்தின் பின்புறம் எழுதி அப்பொழுது அனுப்பியிருந்தமை சங்கரண்ணையின் வாழ்வில் தாயாரின் தாக்கத்தைப் பிரதிபலித்து நிற்கிறது.

*- குகா. பா. இந்திரா. சி. நிர்மலன்*



# மூத்த சகோதரர்

ஜீவானந்தம், யாழ் பருத்தித்துறைக் காட்லிக் கல்லூரியின் சிறந்த மாணவர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர். மருத்துவப் படிப்பிற்காகப் பல்கலைக்கழகத்திற்குத் தெரிவானவர். MBBS பட்டம் பெற்ற இவர், திருமணத்தை முடித்துக்கொண்டு உயர் கல்வி பயில இலண்டன் பயணமானார்.

உயர் வைத்திய பட்டப்படிப்புக்களைப் பூர்த்திசெய்து தற்பொழுது வைத்திய நிபுணத்துவ ஆலோசகராக ஐக்கிய இராச்சியத்தில் (United Kingdom) பணிபுரிந்து வருகிறார்.

முன்னர் பொருளாதாரரீதியாக நடுத்தர வசதியுடைய குடும்பமாக இருந்தது அக்குடும்பம். ஜீவானந்தம் அவர்கள் வைத்தியப் பட்டம் பெற்றுத் திருமணம் செய்து சற்று வசதிபடைத்தவராக வாழ்ந்து வருகிறார்.

*- குகா. பா. இந்திரா. சி. நிர்மலன் -*



# சங்கரண்ணையின் பிறப்புச் சான்றிதழ்

T.2622/17.12.75

Application No. and Date: 52151 — 28.10.71

Registration B. Of 2nd Sec. Secy. paper Orig. & Dup. B., T., & E. 8/79

CEYLON

ENGLISH TRANSLATION

No.: 5049

CERTIFICATE OF BIRTH

Serial No.: Nº 649586

Province: Northwestern — District: Kurunegala

Division: Magul Othota Korale

| | |
|---|---|
| 1. Date and Place of Birth | Eighteenth day of September 1949, Galgodewatte, Nikaweratiya |
| 2. Name | Sornalingam — |
| 3. Sex | Male |
| 4. Name and Surname of Father | Karthigesu Rajah Vythilingam |
| 5. Name and Maiden Name of Mother, and Race | Ganapathi pulle Manonmani, Ceylon Tamil |
| 6. Rank or Profession, and Race of Father | Irrigation Overseer, Ceylon Tamil |
| 7. Were Parents Married? | yes |
| 8. Name and Residence of Informant, and in what capacity he gives information | Karthigesu Rajah Vythilingam, Nikaweratiya, father |
| 9. Informant's Signature | This is the signature of Karthigesu Rajah Vythilingam sgd/ Illegibly |
| 10. When Registered | Seventeenth day of October 1949 |
| 11. Signature of Registrar | sgd/ Illegibly |
| 12. Name, if added or altered after Registration of Birth | |
| 13. Date of addition or alteration | |

I do hereby certify that the foregoing is a true copy of a birth registration entry filed of record in this office.

# தம்பி சிறீதரன்



இவர் சங்கரண்ணைக்கு அடுத்துப் பிறந்த சகோதரர். பிறப்பி லேயே மூளை வளர்ச்சி குன்றியவரா கக் காணப்பட்டார். ஏழு வயதின் பின்பே பேசத் தொடங்கினார். இவ ரைக் குணப்படுத்துவதற்குப் பெரும் முயற்சி மேற்கொண்டு இயலாத நிலையில் கைதடி மனவளர்ச்சி குன்றியோர் பாடசாலையிற் சேர்க்கப் பட்டார்.

ஓயாத அலைகள் மூன்று நட வடிக்கையில் வலிகாமத்திற் சில பகுதிகள் புலிகளால் விடுவிக்கப்ப - ட்டிருந்தவேளை கைதடிப்பிரதேசமும் விடுவிக்கப்பட்டிருந்தது. அப்பிர தேசத்தின் மீது சிங்கள இராணுவம் கோர எறிகணை வீச்சை மேற் கொண்டது. எறிகணைகள் கைதடி முதியோர் இல்லம், மனவளர்ச்சி குன்றியோர் பாடசாலை ஆகியவற்றின் மீதும் வீழ்ந்தன. பல உயிர்கள் குடிக்கப்பட்டன. உடல்கள் சிதைந்து சின்னபின்னமாகின. சிறீதரனும் அதில் ஒருவராகச் சாவைத் தழுவிக்கொண்டார். உடல் எடுத்துவர முடியாமல் அங்கேயே அடக்கம் செய்யப்பட்டது.

இக்காலத்திற் சங்கரண்ணை வீட்டில் இருக்கவில்லை. அப் போதும் ஓயாத அலைகள் மூன்றின் வேலைகளில் ஈடுபட்டிருந்தார்.

*குகா. பா. இந்திரா -*

# தம்பி மனோகரன் (கப்டன் கரன்)



மனோகரன் என்ற இயற்பெயரைக் கொண்டவர். விடுதலைப் புலிகள் அமைப்பில் கரன் என அழைக் கப்பட்டு வந்தார்.

வவுனியா மகாவித்தியாலயத்தில் தனது கல் வியைப் பெற்றார். பாடசாலை வாழ்க்கையிற் பாட சாலையின் சிறந்த விளையாட்டு வீரர்களில் ஒருவராகத் திகழ்ந்தார். குறிப்பாக உதைபந்தாட்டத்திற் பாடசாலையின் ஒரு நட்சத்திரமாகவே திகழ்ந்தார்.

பாடசாலை வாழ்க்கையின் பின்பு, வவுனியாவில் விளையாட்டுக் கழக உதைபந்தாட்ட அணிகளின் முக்கிய விளையாட்டு வீரனாகத் திகழ்ந்தார். குறிப்பாக வவுனியா 'யுனைட்டட்' கழகத்திலும் பின்பு 'ஜொலிபோய்ஸ்' விளையாட்டுக் கழக உதைபந்தாட்ட அணியிலும் இருந்தார். "ஜொலிபோய்ஸ்" சிறந்த அணியாகத் திகழ்வதற்கு இவரது பங்கு முக்கியமானதாகக் கருதப்பட்டது. உதைபந்தாட்டத்திற் சிறந்த நடுத்தர வரிசை விளையாட்டு வீரனாக முத்திரை பதித்திருந்தார்.

மன்னார் பேசாலை மீன்பிடி இலாகாவிற் சிறிது காலம் பணியாற் றினார். சங்கரண்ணை வெளிநாட்டிலிருந்து வந்ததும் வாங்கிய மீன்பிடி 'ரோலர்' களைச் செயற்படுத்துவதிலும், 4 ஆம் கட்டை மன்னார் வீதியில் அமைக்கப்பட்ட பண்ணையை மேற்பார்வை செய்வதிலும் கவனம் செலுத்தினார்.

1983 ஆம் ஆண்டு ஏற்பட்ட இனக்கலவரத்தின் பின், சிங்களக் காவற்றுறை மற்றும் இராணுவக் கெடுபிடிகள் அதிகரித்ததைத் தொடர்ந்து இந்தியாவிற்குச் சென்ற கரன், விடுதலைப் புலிகளின் செயற்பாட்டில் தன்னையும் ஈடுபடுத்திக்கொண்டார்.

புலிகள் அமைப்பின் விநியோகச் செயற்பாடுகள் ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் மிக மிக இரகசியமான செயற்பாடுகளாக அவை இருந்தன. அப்பணிக்காகப் படகு ஒன்று கட்டும் பணியிற் கரன் ஈடுபடுத்தப்பட்டார். 'கடற்புறா' என்ற அந்தப் படகின் பிரதான இயக்குநரும் கரனே.

புலிகளின் செயற்பாடுகளில் இரகசியமான சிலவற்றிற் கரன் அவர்கள் குறிப்பிடத்தக்க பங்கை ஆற்றிவந்தார். 'கடற்புறா' விடுதலைப் புலிகள் அமைப்பின் ஆரம்ப விநியோக வரலாற்றிற் குறிப்பிடத்தக்க பங்கை ஆற்றியது.

இலங்கை இந்திய ஒப்பந்தம் ஏற்பட்டு இந்திய இராணுவம் எமது மண்ணிற் கால் பதித்திருந்தது. ஒப்பந்தத்திற்கு மதிப்பளித்து இந்திய மண்ணில் அமைந்திருந்த விடுதலைப் புலிகளின் அலுவலகங்கள் தமிழீழ மண்ணிற்கு மாற்றப்பட்டுக் கொண்டிருந்தன.

சென்னையில் அமைந்திருந்த எமது பிரதான அலுவலகத்தின் ஆவணங்கள் 'கடற்புறா' படகு மூலம் தமிழீழத்திற்கு எடுத்துவரப்பட்டன.

அன்று கடற்புறாவின் பயணத்தை மேற்கொள்ளச் சென்னையில் இருந்த தனது குடும்பத்தவரிடம் விடைபெற்றபோது, "எனக்குக் காலம் சரியில்லை. நல்ல தலைவர் ஒருவர் இருக்கிறார். தலைவர் இருக்கும் வரை தமிழீழத்தில் தலைவரின் கட்டுப்பாட்டில் வாழவேணும்" என்றார்.

'கடற்புறா" தமிழீழக் கரையை நோக்கிய தனது பயணத்தை மேற்கொண்டது. சிங்களக் கடற்படை இடைமறித்தது. படகில் இருந்தவர்கள் கைதாகிறார்கள். இதுவோர் ஒப்பந்த மீறலாகும். சிறிலங்காக் கடற்படையிடம் இருந்து இந்திய இராணுவம் பொறுப்பேற்கிறது. இலங்கை அரசின் அழுத்தத்தால் இந்திய இராணுவம் பின்வாங்குகிறது. லெப்.கேணல் குமரப்பா, லெப்.கேணல் புலேந்திரன் உட்பட பன்னிரு வேங்கைகள் 'சயனைட்' உட்கொண்டு வீரச்சாவைத் தழுவிக்கொள்கிறார்கள்.

கரனும் அதில் ஒருவர். கப்டன் கரன் திருமணமாகிச் சில ஆண்டுகளே ஆகியிருந்தன. இரு பிஞ்சுக் குழந்தைகள். இவற்றையெல்லாம் உதறிவிட்டுப் போராட்டம், விடுதலை என்ற நெஞ்சுறுதியுடன் இந்த மண்ணில் வித்தாகிவிடுகிறார். 05.10.1987 இல் உள்ளத்தை நெகிழவைக்கும் இந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

*- குகா. பா. இந்திரா. சி. நிர்மலன் -*



தம்பி மனோகரனின் (கப்டன் கரன்) திருமணப் பதிவின்போது, இடமிருந்து வலம் சங்கரண்ணை, தம்பி சிறிதரன், குகா, மனோகரன், தந்தை, தம்பி உதயகுமார்.





சிறைப்படுத்தப்படுவதற்குச் சில நாட்களுக்கு முன்பு கடற்புறாவிற் கப்டன் கரன்.

# தம்பி வசீகரன்(லெப்.சித்தா)



வசீகரன் என்ற இயற்பெயரையும் புலிகள் இயக்கத்திற் சித்தாத்தன் என்ற பெயரையும் கொண்டவர். சங்கரண்ணையின் குடும்பத்திற் புலிகள் அமைப்புடன் முதலில் தொடர்பை ஏற்படுத்தியவர்.

வவுனியா மகாவித்தியாலயத்தில் தனது கல்வியை மேற்கொண்ட சித்தாத்தன், விளை யாட்டில் திறமையானவராக விளங்கினார். குறிப்பாக உதைபந்தாட்டத்திற் பாடசாலையி லும் சரி, பின்பு விளையாட்டுக் கழகங்களில் விளையாடும்போதும் சரி இவரது திறமை பிர காசித்தது.

'ஜொலிபோய்ஸ்' விளையாட்டுக் கழகம் வவுனியா மாவட்டத்தின் சிறந்த உதைபந்தாட்டக் கழகமாகத் திகழ்ந்த வேளை, சிறந்த முன் வரிசை விளையாட்டு வீரனாக விளங்கிப் புகழ் பெற்றார்.

எழுபதுகளின் இறுதியில் இவருக்கு விடுதலைப் புலிகள் இயக் கத்துடனான தொடர்பு ஏற்பட்டது. தலைவர் பிரபாகரன் அவர்களுடன் தொடர்பு ஏற்பட்டது. மூத்த உறுப்பினரும் மத்திய குழு உறுப்பினரு மான மாவீரன் கப்டன் பண்டிதருடன் எழுபதுகளின் இறுதியில் உறவினர் வீடொன்றிற்குக் கிணற்று வெடிமருந்து வாங்கச் சென்றதிலிருந்து இவருக் கும் புலிகள் இயக்கத்திற்குமான தொடர்பு குறித்த சந்தேகம் உறவினர் களுக்கு ஏற்பட்டது.

விடுதலைப் புலிகளின் 'அரச பயங்கரவாதமும் ஆயுதப் புரட்சி யும்' என்ற புத்தகத்துடன் கைதுசெய்யப்பட்ட சித்தா, அனுராதபுரச் சிறை யில் வைக்கப்பட்டுப் பின் விடுவிக்கப்பட்டார்.

1983 இல் வெளிநாடு செல்வதாகக்கூறி இந்தியா சென்று விடு தலைப் புலிகள் அமைப்பில் இணைந்து கொண்டார்.

அடிப்படைப் பயிற்சி, விசேட பயிற்சி, தலைவர் அவர்களின் மெய்ப்பாதுகாவலர், பயிற்சி முகாம் பொறுப்பு என இயக்க வாழ்வு தொடர்ந்தது.

1985 ஆம் ஆண்டு மன்னார் சிங்களக் காவற்றுறை மீதான விடு தலைப் புலிகளின் பாரிய தாக்குதல் சித்தாவை மன்னார் மண்ணில் தடம்பதிக்க வைத்தது. மன்னார் மாவட்டத் தளபதியாயிருந்த லெப்.கேணல் விக்டர், லெப்.கேணல் ராதா ஆகியோருடன் பல வேலைத் திட்டங்களிற் பணியாற்றினார்.

மன்னார்த் தீவின் அரசியற் பொறுப்பாளராக இருந்து மக்கள் உறவை வலுப்படுத்தியவர். இராணுவ வேவு, ஆளணி திரட்டுதல், நிதி சேகரிப்பு, சமூக விரோதச் செயல்களைக் கட்டுப்படுத்தல் எனப் பல்வேறு செயற்றிட்டங்களை முனைப்புடன் நிறைவேற்றியவர்.

அரச உயர் அதிகாரிகள், திணைக்களத் தலைவர்கள், இளைஞர் அமைப்புக்கள், கோவிற் சபைகள் எனப் பலருடனும் நெருங்கிய உற வைப் பேணியவர்.

மன்னார்த் தீவுப் பகுதியிற் சிங்கள இராணுவச் சுற்றிவளைப்பால் வீரச்சாவடைந்த போராளிகள் இருவரது வித்துடல்கள் இராணுவத்தால் மன்னார் வைத்தியசாலையில் வைக்கப்பட்டபோது இரவோடிரவாக அவற்றை மீட்டுப் புலிகளின் கட்டுப்பாட்டுப் பகுதிக்கு அனுப்பிவைத்து எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தியவர்.

மேற்படி போராளிகளது வீரச்சாவிற்குப் பதிலடி கொடுக்கும் முக மாக மன்னார்க் கோட்டை இராணுவ முகாமிலிருந்து புறப்பட்டு வந்த இரு இராணுவ 'ட்ரக்' வண்டிகளைத் தகர்த்துப் பதினெட்டு இராணுவத்தின ரைக் கொன்ற தாக்குதலுக்குப் பல்வேறு ஒழுங்குகளைச் செய்து வெற் றிக்குப் பக்கபலமாக நின்றவர்.

1985 இல் தென்னியங்குளத்திற் புலிகளின் பயிற்சி முகாம் நிறைவு நிகழ்வில் லெப்.கேணல் ராதாவுடன் கலந்துகொண்டார். அங்கு வருகை தந்த பொதுமக்களுக்குப் 'பார்' இலகு இயந்திரத் துப்பாக்கி குறித்து மிக எளிமையாக விளக்கி ஆயுத அறிவை ஊட்டியமையை ஒன்றரைத் தசாப்தத்திற்கு முன் நிகழ்த்தப்பட்ட ஒரு தீர்க்கதரிசன நிகழ் வென்றுகூடக் கூறலாம்.

1986 ஆம் ஆண்டு, தேசவிரோதக் கும்பல் ஒன்றுடன் மோதல் எதுவுமின்றி ஆயுதங்களைக் களையும் நிகழ்வொன்றில் லெப்.கேணல் ராதாவிற்குப் பக்கபலமாகச் செயற்பட்டார்.

நாவற்குழி இராணுவ முகாம் மீதான பாரிய இரகசியத் தாக்குதலுக்கான நடவடிக்கையின்போது வெடிமருந்து நிரப்பிய 'பவுசர்' தற்செயலாக வெடித்துச் சிதறியது. 14.02.1987 இல் லெப்.கேணல் பொன்னம்மான் உட்படப் பத்து வேங்கைகள் வீரச்சாவைத் தழுவினர். லெப். சித்தாத்தனும் அதில் ஒருவன். குடும்பத்திற் சகோதரன் முதற் களப் பலியானான். செய்தியை மாத்திரம் கேட்கும் நிலையே சங்கரண்ணைக்கு இருந்தது. சங்கரண்ணை நடுக்கடலில் இயக்கப் பணியிற் தம்பியின் வீரச்சாவு நிகழ்ச்சிக்குக்கூடக் கலந்துகொள்ள முடியாத நிலையில் இருந்தார்.

*- குகா. பா. இந்திரா. சிசோ. பானு.*
*சி. நிர்மலன். அ. சுரேஸ் (அமுதன்)-*



லெப். சித்தாத்தனின் வித்துடல்

# கடைசித் தம்பி



உதயகுமார் என்ற இயற்பெயரைக் கொண்டிருந்தார். சங்கரண்ணைக்கும் இவருக்கும் இடையே இருபது வயது வேறுபாடு. இதனால் இவர்மீது கூடிய கரிசனையைச் சங்கரண்ணை வைத்திருந்தார்.

சங்கரண்ணை கப்பலிற் பணியாற்றிய காலத்தில் வெளிநாட்டு நகரங்களின் சரித்திர முக்கியமான இடங்கள், வேலைசெய்யும் கப்பலின் படங்களெனப் பல்வேறு படங்களையும் விளக்கக் குறிப்புக்களையும் தம்பியாருக்கு அனுப்பி அறிவூட்டுவதில் அக்கறையாக இருந்தார்.

1978 இல் தாயார் இறந்தபின் 1979 இல் கப்பலாற் சங்கரண்ணை வந்தபொழுது தம்பி உதயகுமாரின் கல்வியில் அக்கறை கொண்டார். வவுனியா மகாவித்தியாலயத்திற் கல்வி பயின்று கொண்டிருந்தவரை யாழ். பரியோவான் கல்லூரியிற் சேர்த்தார்.

போராட்டச் செயற்பாடுகள், உதயகுமாரையும் அதன்பால் ஈர்த்துக் கொண்டன. விடுதலைப் புலிகள் அமைப்பில் இணைந்துகொண்டார். சுதன் என்ற இயக்கப் பெயரிற் போராளியாகச் செயற்பட்டு வந்தார்.

உடல்நிலைப் பாதிப்பு, சுதனை விடுதலைப் போராட்ட வாழ்வினின்றும் விலகிக்கொள்ளச் செய்தது. விடுதலைப் புலிகள் அமைப்பிலிருந்து விலகி சிகிச்சை நிமித்தம் கொழும்பு சென்றிருந்தார்.

தேசவிரோதிகளாற் சங்கரண்ணையின் சகோதரன் என அடையாளம் காணப்பட்ட உதயகுமார் கொலைசெய்யப்பட்டமை குடும்பத்தின் மேலுமொரு வேதனையான சம்பவமாகும்.

- குகா. சி. நிர்மலன் -

ஹாட்லிக் கல்லூரி,
பருத்தித்துறை.

# பிரவேச விண்ணப்பம்

1. (i) பெயர் ... சோமலிங்கம் ... Somalingam. V
   (ii) மற்றப் பெயர்கள் ...
2. (i) தந்தை பெயர் ...
   (ii) தந்தை தொழில் ...
3. (i) மாணவரின் வீட்டு விலாசம் ...
   (ii) தங்குமிடத்திலிருந்து இக்கல்லூரியின் தூரம் ...
   (iii) மாணவர் மத்தியான போசனம் அருந்துமிடம் ...
4. (i) பிறந்த திகதி ... 1949ம் ...
   (ii) பிறப்பத்தாட்சிப் பத்திரம் இணைத்தல் வேண்டும் ...
5. (i) சாதி (தமிழ் பேசும் மாணவரானால்) ...
   (ii) சமயம் ... சைவசமயம் ...
6. (i) மாணவர் சேர விரும்பும் வகுப்பு ...
7. கடைசியாகச் சேர்ந்திருந்த கல்லூரி ...
8. விண்ணப்பகாரன் கல்லூரி விடுதிச்சாலையில் சேர விரும்புகிறாரா? ... இல்லை ...
9. விண்ணப்பகாரன் தற்போதைய அல்லது பழைய மாணவனின் மகனா அல்லது சகோதரனா? ...
   அவர்கள் பெயர்களும், அவர்கள் படித்த அல்லது படிக்கிற திகதிகளும் கட்டாயமாகத் தரல் வேண்டும்.
   ... 1956ம் ...
10. படிப்பில் விசேஷ திறமைகளிருப்பின், அவற்றைக் குறிப்பிடுக ...
11. விளையாட்டில் விசேஷ திறமைகளிருப்பின், அவற்றைக் குறிப்பிடுக ...
12. நான் கல்லூரியில் சேர்த்துக்கொள்ளப்பட்டால், அதன் விதிகளுக்கமைந்து நடக்கவும், அதிபரின் தீர்ப்பே முடிவான கட்டுப்பாடுடையதென்றும் ஏற்றுக்கொள்ள இத்தால் சம்மதிக்கிறேன்.

வ. சோமலிங்கம் ...
மாணவரின் கையொப்பம்.

13. எனது மகன் / பாதுகாப்புப்பிள்ளை, கல்லூரியில் சேர்க்கப்பட்டால், அவர் கல்லூரி விதிகளுக்கமைந்து நடக்க, என்னால் ஆகக்கூடியதை நான் செய்ய உடன்படுகிறேன். அதிபரின் தீர்ப்பே முடிவான கட்டுப்பாடுடையதென்று ஏற்றுக்கொள்ள நான் சம்மதிக்கிறேன்.

...
பெற்றோர் / பாதுகாவலர் கையொப்பம்.

14. திகதி ... 11. 11. 59. ...

— ooo —

## பாடசாலைக் கல்வி

வல்வெட்டித்துறையைத் தொடக்க வாழ்விடமாகக் கொண்டிருந்த சங்கரண்ணை, தனது கல்வி வாழ்வைப் பொன்னம்பலம் வித்தியாலயத்தில் தொடங்கினார்.

புகழ்பெற்ற கல்லூரிகளில் ஒன்றான பருத்தித்துறைக் காட்லிக் கல்லூரியில் 1959 ஆம் ஆண்டு நான்காவது வகுப்பில் இணைந்தார். க.பொ.த. உயர்தர வகுப்புவரை அங்கேயே பயின்றார். கல்லூரி வாழ்க்கையிற் கல்லூரி விடுதியிலும் கணிசமான காலம் தங்கியிருந்து கல்வியைத் தொடர்ந்தார்.

காட்லி வாழ்வில் பாடசாலையின் மிகப் பிரபல்யமான மாணவனாகத் திகழ்ந்தார். கல்வி, கல்விசார் போட்டிகள், விளையாட்டுக்கள் எனப் பல்துறையிலும் சிறந்த மாணவனாகத் திகழ்ந்தார். சிறு வகுப்புக்கள் முதலே ஆங்கிலப் பேச்சுப் போட்டி, ஆங்கிலக் கட்டுரைப் போட்டி போன் றவற்றில் வடமராட்சிப் பாடசாலைக்கிடையிலான போட்டிகளிற்கூட பல பரிசில்களைப் பெற்றுப் பாடசாலைக்குப் பெயர் வாங்கிக்கொடுத்தார்.

கிறிக்கெட், உதைபந்தாட்டம் ஆகியவற்றிற் பாடசாலையின் முன்னணி வீரராகத் திகழ்ந்தார். விளையாட்டில் இவரது திறமையும் நேர்மை யும் பலராலும் பாராட்டப்பட்டது. அன்று காட்லியின் அதிபராகவும் இலங்கையிலேயே சிறந்த அதிபர்களில் ஒருவராகவும் ஆங்கிலத்தில் புலமை உள்ளவராகவும் விளங்கிய திரு. கே. பூரணம்பிள்ளை அவர் களாற் பகிரங்கமாகப் பாராட்டப்பெற்றுப் பெருமையைத் தேடிக்கொண்ட வர்.

க.பொ.த. சாதாரண தரத்தில் ஆறு பாடங்களில் திறமைச் சித்தியும் இரு பாடங்களில் சாதாரண சித்தியையும் பெற்று க.பொ.த. உயர் தரத்தைத் தொடர்ந்தார். ஆயினும், பல்கலைக்கழக அனுமதியைப் பெற் றுக்கொள்ள முடியவில்லை.

கல்வி, விளையாட்டு இரண்டிலும் முன்னணி நட்சத்திரமாக விளங்கி 1969 இல் தனது பாடசாலைக் கல்வியை முடித்துக்கொண்டார்.



VADAMARADCHY TEACHERS' ASSOCIATION

Inter Collegiate Singing and Declamation Contests

THIS IS TO CERTIFY THAT ............ of ............ College

obtained the

THIRD PLACE

in ............

PRESIDENT

ORGANISING SECRETARY



VADAMARADCHY TEACHERS' ASSOCIATION

ESSAY COMPETITION 1965

ESSAY COMPETITION 1966

*This certificate is awarded to*

V. Sornalingam *of* Hartley College

*for obtaining the* second *place in the*

*Essay Competition in English for* Seniors

V. Rajanayagam.
*President*

*Organising Secretary*

பாடசாலையில் ஆங்கிலப் பேச்சு, கட்டுரைப்
போட்டி போன்றவற்றுக்குக் கிடைத்த சான்றிதழ்கள்

# சிறந்த மாணவன்

விடுதி வாழ்க்கை என்பதே வித்தியாசமானது. பாடசாலை விடுதி வாழ்க்கை என்பது மேலும் ஒருபடி வித்தியாசமானது.

வயதில் வேறுபட்டவர்கள், முதிர்ச்சிப் படிநிலையைப் பூரணப் படுத்தாதவர்கள் ஆகியோர் மத்தியில் நிதானத்தைக் கடைப்பிடித்து ஒத்து வாழ்வதென்பதே முதிர்ச்சிக்கான ஒரு படிநிலைதான்.

கூட்டு வாழ்க்கையைப் பழகிக்கொள்கிறார். எல்லோருடனும் ஒத்துப்போகும் தன்மை, சரியென்பதை நியாயத்துடன் விவாதித்து நிரூபிக்கும் திறன் என்பன எல்லோரும் இவருடன் நன்றாகப் பழகுவதற்கு ஏதுவாயின.

1964 தொட்டு 1968 வரை இவரைப் பார்த்ததற்கும், அண்மையிற் பார்த்ததற்கும் வேறுபாட்டைக் காணவில்லை. தலைமுடியில் மாற்றமில்லை; அவ்வாறே இருந்தது. உடலின் பௌதீகத் தோற்றத்திலும் பெருமளவில் மாற்றமில்லை. தற்போது சற்றுப் பருமன் அவ்வளவுதான்.

க.பொ.த. சாதாரண வகுப்பில் இவரும் இவரது வகுப்புத் தோழர்களும் பாடசாலையிலேயே முன்னணி வகித்தனர். ஆங்கில எழுத்து, உச்சரிப்பு, விஞ்ஞான வினாவிடை போன்ற போட்டிகளில் க.பொ.த. உயர் வகுப்பையே தோற்கடித்தனர்.

இவரது ஆங்கிலத் தேர்ச்சி, அறிவியல் ஞானம், விளையாட்டின் சிறப்புப் போன்றவை பாடசாலையில் இவர் பிரபல்யம் பெற ஏதுவாயின.

பத்திரிகை, சஞ்சிகைகளைப் படித்து, விபரங்களைப் பெற்று பாடசாலைத் தோழர்களுக்கு எடுத்துச் சொல்வது இவரது சிறப்பம்சம்.

ஏனைய வீரர்களைவிட உயரத்தில் குறைந்தவராக இருந்த போதும் உதைபந்தாட்டத்தில் துணிச்சலுடன் பந்தை அடிக்கும் இவரது திறமை மைதான இரசிகர்களை வெகுவாகக் கவர்ந்துவிடும்.

*'பாடசாலைக்குப் பெருமை சேர்த்த சிறந்த மாணவன்.'*

*- குருகுலராஜா -*
*கல்வி அதிகாரி*

**V/VAVUNIYA MAHA VIDYALYAM**

*S. R. Ariaratnam*, B. A. Dip. Ed.
PRINCIPAL.

VAVUNIYA 30th.Dec. 1970

Mr.R.K.Sornalingam , an old boy of Hartly College , Point Pedro , has been an asting teacher of this school for the third term 1970.

He is a very competent teacher of the middle school in Mathematics and General Science . He is always in complete control of his class and the students seem to enjoy his classes thoroughly.

His services in the Extra- Curricular Activities of the school , particularly in the field of sports were commendable . He spared no pains to bring distinction to the school by assisting the Prefect of Games of the school in coaching the soccer teams. He is undoubtedly an outstanding soccer player and had the rare distination of representing the ' All Jaffna Schools' in Cricket and Soccer . He was also the Vice- Captain of the Soccer team.

His amiable qualities won him, the esteem of the staff and students of the school and Ia m glad to say that his services to the school, though for a short period were praiseworthy.

Princiapl.

வவுனியா மகாவித்தியாலய அதிபரின் நற்சான்றிதழ்.

# நிறைவுறாத விருப்பம்

ஒழுக்கமும் ஆங்கிலப் புலமை, நிர்வாக ஆற்றல் எனப் பல் துறைத் திறனும் வாய்ந்த அதிபராகக் கடமையாற்றியவர் திரு. பூரணம் பிள்ளை அவர்கள். பருத்தித்துறைக் காட்லிக் கல்லூரி, யாழ் பரியோவான் கல்லூரி எனப் பிரபல கல்லூரிகளின் அதிபராக இருந்து தமிழ் மாணவ சமூகத்திற்குச் சிறந்த சேவையாற்றினார்.

அவர் காட்லிக் கல்லூரி அதிபராக இருந்தபொழுது அங்கு கல்வி கற்றவர் எங்கள் பெரியப்பா (சங்கரண்ணை). பாடசாலையில் விளை யாட்டிலும், கல்வியிலும் முன்னணி வகித்தவர்களில் ஒருவர். இவரது விளையாட்டு நேர்மை குறித்து அதிபர் பூரணம்பிள்ளை அவர்களாற் பகிரங்கமாகப் பாராட்டப்பட்டவர்.

அதிபர் பூரணம்பிள்ளையின்மீது மதிப்பும் பற்றும் வைத்திருந்தவர். அடிக்கடி அவரைப்பற்றி நினைவுகூர்ந்துகொள்வார். ஆங்கிலக் கல்விக்கு அவர் கொடுக்கும் முக்கியத்துவம், ஆங்கிலத்தைப் போதிக்கும் அவரது சிறந்த ஆற்றல், தான் அவர்மூலம் பெற்ற ஆங்கில அறிவு என எல்லாவற்றையும் எடுத்துக்கூறி எனது ஆங்கிலக் கல்விக்கு வழிகாட்டிய வர்.

ஒழுக்கம் என்ற விடயத்திற் பூரணம்பிள்ளை அவர்களின் கண்டிப்பை அடிக்கடி கூறுவார். பாடசாலை மாணவர்கள் அனைவரும் ஒழுக்கசீலர்களாக வரவேண்டும் என்பதில் முனைப்புடன் செயற்பட்டவர். பாடசாலையில் உள்ள ஒவ்வொரு மாணவரின் பெயரையும் ஞாபகத்தில் வைத்திருப்பவர் என்பதையெல்லாம் பெரியப்பா எடுத்துக்கூறி தனது வளர்ச்சியில் அவரின் பங்கை நினைவுகூருவார்.

பூரணம்பிள்ளை அவர்கள் எங்கிருக்கிறாரோ தெரியவில்லை. எப்படியாவது தொடர்புகொண்டு கதைக்கவேண்டும் என்ற ஆசை கடந்த சில வருடங்களாக இருந்தது. "என்னுடன் கல்வி பயின்றவர்கள் வைத்தியர்கள், பொறியியலாளர்கள், கணக்காளர்கள் என உயர்ந்த வரு மானமுள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆனால் உங்கள் அபிமான மாணவனான நான், "ஒரு போராளியாக பிரபாகரன் படையில் இருக்கி றேன்" என்று கூறிப் பெருமை கொள்ளவேண்டுமெனத் தனது ஆவலை வெளிப்படுத்துவார்.

ஆனால், பூரணம்பிள்ளை அவர்களின் சாவுச் செய்தியையே பெரியப் பாவாற் பத்திரிகையிற் பார்க்கமுடிந்தது. பெரியப்பாவின் விருப்பம் நிறை வேறாத விருப்பமாயிற்று.

- ரதி -
(மகள்)

K. POORANAMPILLAI, B. A. (LOND.)
POST-GRADUATE TRAINED, SELLY OAK, B'HAM
PRINCIPAL, ST. JOHN'S COLLEGE.

PHONE: 293
JAFFNA, CEYLON.

31st, May 1971.

This is to certify that I have known Vaidialingam Seralingam for over twelve years. He was a pupil of mine for over eight years at Hartley College, Point Pedro, where I was Principal till February 1967.

He passed the G.C.E. O.L.Examination of Dec. 1966 in eight subjects, including credit passes in six subjects. He also sat for the G.C.E. A.L. Examination of Dec. 1968 and 1969, and was called for Practical Tests.

He took part in the extra-curricular activities of the College, and represented the College in Cricket and Soccer. He also Captained the College Soccer Team (1968) and played Cricket for the Northern Zone Schools' Team. He won Cricket Colours in 1969, and Soccer Colours in 1966, 1967 and 1968.

He was studious and well behaved. He bears a good character.

Pooranampillai
Principal.

பிரபல்யமான அதிபர்
பூரணம்பிள்ளையின் நற்சான்றிதழ்

# உயர் கல்வி

பாடசாலைக் கல்வியை முடித்துச் சிறிது காலம் வவுனியா மகா வித்தியாலயத்தில் உதவி ஆசிரியராகப் பணிபுரிந்தபின் உயர் கல்வி பயில இந்தியாவிற்குச் சென்றார் சங்கரண்ணை.

தமிழ்நாட்டின் தலைநகராம் சென்னையில், பறங்கி மலைப்பகுதியில் அமைந்திருந்த இந்திய அரசப் பதிவு பெற்ற "கிந்துஸ்தான் எஞ்சினியறிங் சென்ரர்" என்ற பொறியியல் தொழினுட்பக் கல்லூரியில் வானூர்திப் பராமரிப்புப் பொறியியற் கற்கைநெறியில் 1972 ஆம் ஆண்டு தன்னை இணைத்துக்கொண்டார்.

இரண்டு வருடக் கற்கைநெறியின்போது, பல்வேறு வகைப்பட்ட வானூர்திகள், இயந்திரங்கள் போன்றவற்றிற் பயிற்சியைப் பெற்றார். குறிப்பாக அமெரிக்க தயாரிப்பு 'பெல்' உலங்குவானூர்தியின் பராமரிப்புப் பொறியியற் பயிற்சியையும் பெற்றுக்கொண்டார்.

பயிற்சியின்போது கற்பிக்கப்பட்ட பாடங்களிற் சராசரியாக எண்பது வீதப் புள்ளிகளைப் பெற்றுவந்தார். இறுதிப் பரீட்சையிற் சராசரியாக 84.2 வீதப் புள்ளிகளைப் பெற்று கற்கைநெறியின் முதன் மாணவனாகத் தெரிவானார்.

கல்வியில் மாத்திரமல்லாது விளையாட்டுக்களிலும் முன்னணியில் திகழ்ந்தார். கிறிக்கெட், உதைபந்தாட்டம், மெய்வல்லுநர் போட்டி, கரம், டேபிள் டெனிஸ் போன்ற விளையாட்டுக்களிலும் சிறப்புறத் திகழ்ந்தார்.

கற்கைநெறியில் முதன் மாணவனாகவும் விளையாட்டுத் துறையிற் சிறந்தவராகவும் விளங்கியதாற் கல்லூரியின் 1973-1974 வருடத்திற்கான சிறந்த மாணவனுக்கான தமிழ்நாடு ஆளுநரின் விசேட பரிசு வழங்கப்பட்டுச் சங்கரண்ணை கௌரவிக்கப்பட்டார்.

உயர் கல்வியிலும் ஒரு முன்னணி நட்சத்திரமாகவே திகழ்ந்தார் சங்கரண்ணை.



சங்கரண்ணை சிறந்த மாணவனுக்கான பரிசை ஆளுநர்
'ஜா' அவர்களிடம் பெறமுன்பு மாலையிட்டு வரவேற்பது.



'இந்துஸ்தான் என்ஜினியறிங் சென்ரர்'
இல் பயிற்சி நெறியின்போது.



HINDUSTAN ENGINEERING TRAINING CENTRE

APPROVED BY THE GOVT. OF INDIA

MADRAS

1494/D/72

Diploma in Technology

In Aircraft Maintenance Engineering

This Certifies that *V. Sornalingam*

having satisfactorily completed the prescribed course of study in the faculty of AIRCRAFT MAINTENANCE ENGINEERING and having passed in the final examination held in the month of *May* 1974 with *Distinction* ~~class~~ and having completed the prescribed apprenticeship is granted this DIPLOMA IN TECHNOLOGY.

Dated this *Fifteenth* day of *May* 19 74 at Madras.

K. C. G. VERGHESE
DIRECTOR

P. D. XAVIER
CHIEF EXAMINER

Dr. K. S. MURTY
PRINCIPAL

Gram: ELLFIVE

Phone Off { 801389 & 802508
Res. 442640

# HINDUSTAN ENGINEERING TRAINING CENTRE

(RECOGNISED BY THE GOVT. OF INDIA)

40, NORTH PARADE ROAD, CANTONMENT, ST. THOMAS MOUNT, MADRAS-600016

*Director*
Sri. K.C.G. VERGHESE, C. Engg., A.M.I.E. (India), M.I.C.E., (U.S.A.) A.M.I.S.E. (India) F.I.C.E.

*Vice-Principal*
Prof. J.N. MATHUR, B.Sc., M.Ae.S.I. (India) A.F.R.Ae.S.(Lond) M.I.E. (India) M.I.A.E., A.M.E. (Rtd. Chief Technical Instructor—Indian Airlines.)

*Principal*
Dr. K. S. MURTHY, M.Sc., (Hons.) Ph. D.

*Asst. Director*
K. C. PHILIP, B.Sc., (Engg.) A.M.I.E.

Date: 5th June 74.

Ref: 1494/D/71.

C E R T I F I C A T E

This is to certify that Mr. V. SORNALINGAM has been a student of our Training Centre for the Aircraft Maintenance Engineering Course during the period '72-74 and that he has successfully completed the above course. He has passed his final examination with Distinction. We found him to be a very hard working, deligent and very trustworthy during his period of study in our Training Centre. He has worked on various types of Aircraft and Engines as well as on Bell Helicopter in our Training Centre. If he is given a chance he will prove himself to be a very deserving and able candidate in the Aeronautical profession.

He has also taken keen interest in extra-curricular activities, sports and games.

He has been awarded a special prize by His Excellency Governor of Tamil Nadu as the Best Student of our Training Centre for the year 1973-1974.

He bears an excellent character.

HINDUSTAN ENGINEERING TRAINING CENTRE
MADRAS-16.

D I R E C T O R.

இந்துஸ்தான் பயிற்சி மையத்தால் வழங்கப்பட்ட நற்சான்றுப் பத்திரம்



HINDUSTAN ENGINEERING TRAINING CENTRE

ST. THOMAS MOUNT, MADRAS-16

PROGRESS REPORT

NAME Mr. SORNALINGAM.V. Course: A.M.E. II year

REG. No. 1494 Rank : 1

| SUBJECTS | Total Marks | Marks Obtained | Remarks |
|---|---|---|---|
| 1 Aircraft Hydraulics ... | 100 | 94 | |
| 2 Aircraft Instruments ... | " | 90 | |
| 3 Aircraft Construction ... | " | 73 | |
| 4 Aircraft Electricity ... | " | -- | |
| 5 Aircraft Materials ... | " | 76 | |
| 6 Gen Engineering ... | " | -- | |
| 7 Aircraft Compass ... | " | -- | PASSED |
| 8 Aircraft Legislation ... | " | -- | |
| 9 Aero Engine ... | " | 88 | |
| 10 Theory of Flight ... | " | -- | |
| 11 Type Air Frame (Tigermoth) ... | " | -- | |
| 12 Type Engine (Gypsy Major) ... | " | -- | |
| 13 Oral ... | 200 | -- | |
| 14 Practical ... | 100 | -- | |
| TOTAL ... | 500 | 421 | |
| AGGREGATE % | | 84.2 | |

No. of Working Days for the Term 80

No. of Days Attended : 80

No. of Days Absent : 0

Fine : Nil.

(Seal)

GENERAL PROGRESS IN STUDIES

VERY GOOD / ~~GOOD / SATISFACTORY / UNSATISFACTORY~~

Signature of Chief Instructor

N.B. : If a student is absent for more than 30 days he will be terminated from the course as per the D. G. C. A. rules.

இந்துஸ்தான் பயிற்சி மையத்தின் இறுதிப் பரீட்சையில் 84.2 வீதச் சராசரி பெற்றுச் சித்தியடைந்ததைக் காட்டும் சான்றிதழ்

# மொழிகளில்...

"Friendship has no nationalities" பெரியப்பா (சங்கரண்ணை) அடிக்கடி கூறும் வார்த்தைகள். ஸ்பானிஷ், கிறீக் நண்பர்கள் மூலம் அவ்விரு மொழிகளிலும் தேர்ச்சியுள்ளவராகப் பெரியப்பா இருந்தார். பிரெஞ்சு மொழியை விளங்கிக்கொள்வார்.

கிறீக் மொழியில் ஆங்கிலம் போல் குறைந்தளவு எண்ணிக்கையி லேயே எழுத்துக்கள் உள்ளன. தமிழில் இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்கள் இருப்பதாகக் கிறீக் நண்பர் ஒருவருக்குத் தெரியப்படுத்தி யிருந்தாராம். அவர் அதைப்பற்றிக் கடுமையாக யோசித்துவிட்டு, உண்மையில் இருநூற்று நாற்பத்தேழு எழுத்துக்கள் இருக்கிறதா என ஆச்சரியத்துடன் கேட்டாராம். ஆம் என்று பெரியப்பா கூற அவ்வளவு எழுத்துகளும் உங்களுக்குத் தெரியுமா? என ஆர்வமும், ஆச்சரியமும் பொங்கக் கேட்க அதுதான் தமிழ், அவன்தான் தமிழன் என்றாராம் பெரியப்பா.

இதேபோல் முதன்முதற் பிரான்சிற்குச் சென்றபோது, பிரெஞ்சு மொழி தெரியாதாம் பெரியப்பாவிற்கு. கடை ஒன்றிற்குச் சென்று ஆங் கிலத்தில் உரையாடினாராம். கடைக்காரர் ஏதோ எல்லாம் கூறினாராம். ஒரே சிரிப்பாம் தனக்கு. கடைக்காரரும் விழுந்து விழுந்து சிரித்தாராம். பின்பு தன் தேவையைச் சைகைப் பாசைமூலம் கூற எல்லாவற்றையும் தந்தாராம். அப்படியே அவருடன் நட்பு உருவானதாம். பின்பே கடைக் காரர் தனக்கு ஆங்கிலம் தெரியும் என்பதைக் கூறியதுடன், ஏதாவது உங்களுக்குத் தேவையெனில் நீங்கள் பிரெஞ்சில் கதையுங்கோ. எங் களுக்கு ஏதாவது உங்களிடம் இருந்து தேவையெனின் உங்கள் மொழி யில் பேசுவோம் எனப் பிரெஞ்சு வழமையைக் கூறினாராம்.

ஜப்பானியர்களில் தனக்கொரு அபிமானம் என்று கூறுவார். நவீன தொழினுட்பம் உட்பட அனைத்தையும் தமது மொழிக்கே மாற்றி விட்டார்கள். ஜப்பான் பிரதமர் உட்பட எவரெனினும் ஜப்பானிய மொழி யிலேயே பேசுவார்கள். அதற்காக யாரும் சிரிப்பதில்லை. நாங்கள் தமிழிற் பேசினாற் சில புத்திஜீவிகளுக்கு ஏளனமாக இருக்கிறதே என் பார் பெரியப்பா.

- ரதி -



சிறந்த விளையாட்டு வீரனுக்கான சான்றிதழைப் பெறும் பொழுது

# விளையாட்டுத்துறை

கல்லூரி வாழ்க்கை, உயர் கல்விக் காலம், விளையாட்டுக்கழகக் காலம் எனப் பல காலகட்டங்களிற் சங்கரண்ணையின் விளையாட்டுத்துறைத் திறமை பிரகாசித்துக் காணப்பட்டது.

காட்லிக் கல்லூரியிற் கிறிக்கெட், உதைபந்தாட்டம் ஆகியவற்றிற் சிறந்த விளையாட்டு வீரராகத் திகழ்ந்தார்.

கிறிக்கெட்டில் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கான அணி, 16 வயதிற்குட்பட்டவர்களுக்கான அணி, பாடசாலை அணி எனத் தனது திறமையைப் பறைசாற்றி நின்ற சங்கரண்ணை, வட பிராந்தியப் பாடசாலைக் கிறிக்கெட் அணியிலும் அங்கம் வகித்தார்.

16 வயதுக்குட்பட்டவர்களுக்கான காட்லிக் கல்லூரிக் கிறிக்கெட் அணியில் அங்கம் வகிக்கும்போது கண்டியில் வேறொரு பாடசாலையுடனான சுற்றுப் போட்டி ஒன்றில் தன்னால் பிடிக்கப்பட்ட பந்தின் ஏந்துகை தவறானது எனத் தானே வெளிப்படுத்தி ஆட்டமிழந்தவரை மைதானத்திற்குள் அழைத்தமை, பாடசாலை மட்டத்தில் மாத்திரம் அன்றி கொழும்புப் பத்திரிகைகளாலும் பாராட்டப்பட்டமை இங்கு குறிப்பிடத்தக்கது.

கிறிக்கெட்டில் சிறந்த சுழல் பந்து வீச்சாளராகப் பாடசாலை மட்டத்தில் திகழ்ந்த சங்கரண்ணை, வட பிராந்தியப் பாடசாலைத் தெரிவு அணியிலும் சிறப்பாகச் செயற்பட்டார். 1969 ஆம் ஆண்டு காட்லிக் கல்லூரி கிறிக்கெட் நிறப்பட்டியை வழங்கிச் சங்கரண்ணையைக் கௌரவித்தது.

காட்லிக் கல்லூரியின் உதைபந்தாட்ட அணியிற் பல வருடங்கள் தொடர்ந்து விளையாடி முன்னணி விளையாட்டு வீரராகத் திகழ்ந்தார். 1968 ஆம் ஆண்டு பாடசாலை அணியின் தலைவராகச் செயற்பட்டார். 1966, 1967, 1968 ஆகிய மூன்று வருடங்களிலும் உதைபந்தாட்டத்திற்கான பாடசாலைக் கௌரவ நிறப்பட்டியைத் தொடர்ந்து பெற்றார். 1967 ஆம் ஆண்டு யாழ் மாவட்டத்திற் சிறந்த உதைபந்தாட்ட அணியாக விளங்கிய காட்லி அணி, கலந்து கொண்ட பன்னிரண்டு போட்டிகளிற்

பதினொன்றில் வெற்றிபெற்றது. அறுபத்தி மூன்று வருடங்களின் பின் யாழ் சம்பத்திரிசியார் கல்லூரியை அவர்களது மைதானத்திலேயே வெற்றி கொண்டது. யாழ் பாடசாலைகள் உதைபந்தாட்டக் குழு நடாத்திய போட்டியில் முதலாவது, இரண்டாவது இடங்களைப் பெற்றது. மகாஜனா, யாழ் மத்திய கல்லூரி போன்றவற்றை வெற்றி கொண்டது போன்ற சிறப்பம்சங்களும் இதிலடங்கும்.

அந்த வருடம் நடைபெற்ற போட்டிகளிற் காட்லி அணியினராற் போடப்பட்ட மொத்தம் 38 'கோல்களில்' 20 'கோல்களை' சங்கரண் ணையே போட்டுப் பாடசாலை வரலாற்றில் ஒரு சாதனையை நிகழ்த்தி னார்.

உயர் கல்வி பயின்ற தமிழ்நாடு கிந்துஸ்த்தான் பொறியியற் பயிற்சி மையத்திலும் விளையாட்டுத்துறையில் முன்னணியில் திகழ்ந்தார். 1972 ஆம் ஆண்டு தனிநபருக்கான மேசை டெனிஸ் விளையாட்டில் இரண்டாவது இடத்தையும் கரம் விளையாட்டில் முதலாவது இடத்தை யும் பெற்றதுடன் வெற்றி பெற்ற கிறிக்கெட் அணியிலும் அங்கத்துவம் பெற்றிருந்தார்.

1973 ஆம் ஆண்டு வெற்றி பெற்ற உதைபந்தாட்ட அணியிற் பங்கேற்றார். வெற்றிபெற்ற கிறிக்கெட் அணியின் தலைவராகவும் இடம் பெற்றார். பயிற்சி மையத்திற் சிறந்த மாணவனாகவும் திகழ்ந்தார்.

1974 ஆம் ஆண்டு பயிற்சி மையத்தில் நிகழ்ந்த மெய்வல்லுநர் போட்டியில், ஈட்டி எறிதலில் முதலிடத்தைப் பெற்றார். அதே ஆண்டு இவர் தலைமை தாங்கிய கிறிக்கெட் அணியே முதலிடத்தைப் பெற்றது. அத்துடன் அவர் அங்கத்துவம் வகித்த உதைபந்தாட்ட அணியும் முதலி டத்தைப் பெற்றது.

வவுனியாவிற் சங்கரண்ணை நின்ற காலத்தில் விளையாட்டுத் துறையிற் பெரிதும் பங்கேற்றார். பாடசாலை வாழ்க்கையை முடித்துச் சிறிது காலம் வவுனியா மகாவித்தியாலயத்தில் (1971 ஆம் ஆண்டுக் காலப்பகுதியில்) உதவி ஆசிரியராகக் கடமையாற்றிய காலகட்டத்திற் பாடசாலையின் விளையாட்டுத்துறைப் பொறுப்பாசிரியராகவும்

உதைபந்தாட்டப் பயிற்சி ஆசிரியராகவும் செயற்பட்டு பாடசாலையின் விளையாட்டுத்துறை முன்னேற்றத்திற் பங்குகொண்டார்.

வவுனியா விளையாட்டுக் கழகங்களிலும் சங்கரண்ணையின் பங்கு அதிகமாகவே இருந்தது. பாடசாலை வாழ்வை முடித்து உயர்கல்விக்குச் செல்லும்வரை 1971 ஆம் ஆண்டுக் காலப்பகுதியில் வவுனியா மாவட்ட உதைபந்தாட்டப் போட்டியில் மாவட்டத்தின் வெற்றி அணியாகத் தெரிவு செய்யப்பட்ட உதைபந்தாட்ட அணியின் அங்கத்தவராகவும் வவுனியா தெற்கு உதவி அரச அதிபர் பிரிவில் இடம்பெற்ற உதைபந்தாட்டப் போட்டியில் வெற்றிக் கேடயத்தைச் சுவீகரித்த 'யுனைட்டட்' விளையாட்டுக் கழகத்தின் முக்கிய விளையாட்டு வீரனாகவும் விளங்கினார். வவுனியா மாவட்ட விளையாட்டு ஒருங்கமைப்புக் குழுவால் நடத்தப்பட்ட கிறிக்கெட் சுற்றுப்போட்டியில் இவர் அங்கம்வகித்த 'யுனைட்டட்' அணி, மாவட்டத்தில் இரண்டாவது சிறந்த அணியாகத் தெரிவுசெய்யப்பட்டது. மாவட்டத்தின் 1971 ஆம் ஆண்டின் சிறந்த துடுப்பாட்ட வீரனாகச் சங்கரண்ணை தெரிவுசெய்யப்பட்டார்.

பொறியியற் கல்வியை இந்தியாவில் முடித்து மீண்டும் வவுனியா வந்த சங்கரண்ணை, 1974 ஆம் ஆண்டு வவுனியா தெற்கு விளையாட்டு ஒருங்கமைப்புக் குழுவால் நடாத்தப்பட்ட கிறிக்கெட் சுற்றுப்போட்டியிற் கலந்துகொண்டார். இவர் கலந்துகொண்ட 'யுனைட்டட்' அணி, முதன்மை வெற்றியணியாகத் தெரிவுசெய்யப்பட்டது.

1975 ஆம் ஆண்டு, வவுனியா மாவட்ட வல்லுநர் போட்டியின் உதைபந்தாட்டத்தில், இணை வெற்றியணியாகச் சங்கரண்ணை அங்கம் வகித்த வவுனியா தெற்கு தமிழ் உதவி அரசாங்க அதிபர் பிரிவு அணி தெரிவு செய்யப்பட்டது. 'ஜொலிபோய்ஸ்' விளையாட்டுக் கழகம் நடாத்திய உதைபந்தாட்டச் சுற்றுப்போட்டியில், இவர் அங்கத்துவம் வகித்த 'ஜொலிபோய்ஸ்' அணி இரண்டாவது இடத்தைப் பெற்றது.

கிறிக்கெட்டிலும் 1975 ஆம் ஆண்டு, சங்கரண்ணை அங்கம்வகித்த 'ஜொலிபோய்ஸ்' அணி, சிறந்த அணியாகத் தெரிவுசெய்யப்பட்டது. அச்சுற்றுப்போட்டியின் சிறந்த துடுப்பாட்ட வீரராகச் சங்கரண்ணையே தெரிவுசெய்யப்பட்டார்.

1976 ஆம் ஆண்டு சிறிலங்கா விளையாட்டுத்துறை அமைச்சினால் நடாத்தப்பட்ட உதைபந்தாட்டச் சுற்றுப்போட்டியிற் சங்கரண்ணை அங்கம் வகித்த 'ஜொலிபோய்ஸ்' விளையாட்டுக் கழகம் இரண்டாவது இடத்தைப் பெற்றது.

இதன் பின்பு கப்பலில் தொழில் பெற்றுச்சென்ற சங்கரண்ணை, அத்தொழில் முடித்து மீண்டும் வவுனியா திரும்பியதும் வவுனியாவின் விளையாட்டுத்துறையை ஊக்குவிப்பதிற்குப் பெரும்பங்காற்றினார். குறிப்பாக 'ஜொலிபோய்ஸ்' விளையாட்டுக் கழகத்தின் செயலாளராகத் தெரிவுசெய்யப்பட்ட சங்கரண்ணை, தனது சொந்தப் பணத்திற் சிங்கப்பூரிலிருந்து விளையாட்டு உபகரணங்களைப் பெற்று, மேற்படி கழகத்திற்கு வழங்கி விளையாட்டில் முன்னணி வகிக்க ஏதுவானார்.

சஙகரண்ணையின் விளையாட்டுத்துறைச் செயற்பாடு விடுதலைப் புலிகள் அமைப்பிற்கு வந்தபின்பும் தொடர்ந்ததென்றே கூறலாம்.



ஹாட்லிக் கல்லூரி 16 வயதிற்குட்பட்டோருக்கான கிறிக்கெட் அணியிற் சங்கரண்ணை.

# நேர்மையின் இலக்கணம்

யாழ்ப்பாணத்தின் புகழ்பெற்ற கல்லூரிகளில் ஒன்று வடமராட்சியின் முன்னணிக் கல்லூரியான காட்லிக் கல்லூரி.

இலங்கையிலேயே பிரபல்யமான அதிபர்களில் ஒருவர், நேர்மை, ஒழுக்கம் இவற்றிற்கெனத் தனித்துவமான வரலாற்றைக் கொண்டவர் பூரணம்பிள்ளை. அவர் காட்லிக் கல்லூரியின் அதிபராக இருந்தகாலத்தில் விளையாட்டுக்களில் குறிப்பாகக் கிறிக்கெட்டில் காட்லிக் கல்லூரி சிறப்புற இருந்தது.

கிறிக்கெட் ஆட்டத்திற்காகக் கண்டி செல்கிறது காட்லி அணி. சங்கரண்ணையும் அதில் அங்கத்தவரானார்.

கண்டியின் முன்னணிப் பாடசாலை அணியுடனான மோதல் கண்டியின் மையத்தில் அமைந்துள்ள பிரபல்ய மைதானத்தில் பெருந் தொகையான பார்வையாளர்கள் இடையே நடைபெற்றது.

போட்டியோ மிக விறுவிறுப்பாக நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. கண்டியணியே வெல்வதற்கான வாய்ப்புகள் அதிகம் இருந்தன.

காட்லி அணி பந்துத் தடுப்பில் ஈடுபட்டிருக்கிறது. சங்கரண்ணை “சிலிப்” என்ற நிலையெடுத்து மைதானத்தில் நிற்கிறார். எதிர்த்தரப்பின் சிறந்த துடுப்பாட்ட வீரர்களில் ஒருவர் துடுப்பாடிக்கொண்டிருக்கிறார்.

துடுப்பாட்ட வீரர் அடித்த பந்து சங்கரண்ணையின் கைகளுக்கு எட்டிவிட்டது. நிலத்துடன் சேர்த்துப் பிடித்துக்கொள்கிறார்.

நடுவரின் கைவிரல் காட்டப்படுகிறது. துடுப்பாட்ட வீரர் ஆட்டமிழந்து விட்டார் என அர்த்தம். எதிரணியின் நம்பிக்கை நட்சத்திரம் ஆட்டமிழந்து மைதானத்தை விட்டு வெளியேறுகிறது. பார்வையாளர்கள் மத்தியில் எதுவித சலனமுமற்ற மயான அமைதி.

சங்கரண்ணை, கையிற் புற்களுடன் சேர்த்துப் பிடித்த பந்துடன் காட்லி அணித்தலைவரை நோக்கிச் செல்கிறார். சிரித்த முகத்துடன் ஏதோ எடுத்துக்கூறுகிறார்.

இருவரும் நடுவரை நோக்கிச் செல்கின்றனர். பிடிக்கப்பட்ட பிடி நிலத்துடன் சேர்த்துப் பிடிக்கப்பட்டதெனவும் அதற்கு ஆதாரமாகக் கையில் இருந்த புற்களையும் எடுத்துக் காட்டுகிறார் சங்கரண்ணை. காட்லி அணித்தலைவரும் அது பிழையான பிடி எனவும் ஆட்டமிழந்த வரை மீள அழைக்கவேண்டும் எனவும் எடுத்துக் கூறுகிறார்.

நடுவரோ அறிவித்த முடிவை மீளப் பெறமுடியாதெனவும் விரும்பி னாற் காட்லி அணித்தலைவர் சென்று ஆட்டமிழந்தவரை மீள அழைத்து வரமுடியும் எனக்கூறுகிறார்.

ஆட்டமிழந்த துடுப்பாட்ட வீரர் மீள அழைக்கப்பட்டு, தொடர்ந்து ஆடச் சந்தர்ப்பம் வழங்கப்படுகிறது.

பார்வையாளர் அனைவரும் எழுந்து நின்று கைதட்டிச் சங்கரண் ணையையும் அணியினரையும் பாராட்டுகின்றனர்.

ஆட்டம் வீறு பெறுகிறது. முன்னைய நிலைமை மாறுகிறது. காட்லி அணி வெற்றி பெறுகிறது.

மீண்டும் மைதானத்திற் கரவொலி. காட்லி வீரர்கள் மைதானத்தைவிட்டு வெளிவரும்வரை ஒலித்து நின்றது பார்வையாளர் களின் கரவொலி. தமது அணி தோல்வியைத் தழுவியபோதும், காட்லி அணியின் நேர்மை அவர்கள் மனத்தைத் தொட்டிருக்கவேண்டும்.

கொழும்புப் பத்திரிகைகளிற்கூட, அடுத்த நாள் அச்செய்தி முக்கியத்துவத்துடன் பிரசுரமாகியது.

அணியினர் பாடசாலை திரும்பியதும் பாடசாலையின் காலை ஒன்றுகூடலின்போது, சங்கரண்ணை அழைக்கப்பட்டு ஆசிரியர், மாணவர் களுக்கு முன்னால் அதிபர் பூரணம்பிள்ளை அவர்களாற் கௌரவிக்கப் பட்ட நிகழ்வு பிரபல்யம் பெற்ற ஒரு விடயமே.

- *சசிக்குமார்*

*குட்டிசிறி பீரங்கிப் படையணி*

## உதைபந்தாட்டச் சுற்றுப் போட்டிகளில் வெற்றிபெற்ற அணியிற் சங்கரண்ணை இடம்பெற்றதற்கான சான்றிதழ்கள்


Vavuniya South Tamil Division

1971

This is to certify that Mr. R. P. Sornalingam of United Sports Club has participated in the Knock-out Football Tournament conducted by the Ministry of Sports ... and secured the Champions place in the tournament

'யுனைட்டட்' விளையாட்டுக் கழகம்


VAVUNIYA DISTRICT INTER D. R. O. DIVISION

SPORTS FESTIVAL - 1971.

This certificate is awarded to

... D. R. O. Division for being a member of the Volleyball / Football team that were Champions / Runners-up in the Inter D. R. O. Division Tournaments & Sports Festival organised by the Ministry of Sports.

வவுனியா தெற்கு தமிழ் பிரிவு அணி


VAVUNIYA DISTRICT SPORTS MEET.

TRACK AND FIELD

Conducted by

The Ministry of Sports and G. A. Vavuniya

This is to certify that ...
representing the ...
won the ... Place in ...
at the Annual Sports Meet held on 3rd & 4th June 197...

G. A. Vavuniya

வவுனியா தெற்கு தமிழ் பிரிவு அணி


INTER - CLUB SOCCER & CRICKET TOURNAMENT

197 .

Organised by

JOLLY BOYS SPORTS CLUB - VAVUNIYA.

"NOTHING VENTURE, NOTHING WIN"

'ஜொலி போய்ஸ்' அணி


Vavuniya South Tamil Division Sports Association

197 6

Certificate of Merit.

This Certificate is awarded to V. Sornalingam

of the JOLLY BOYS Sports Club for obtaining

the Runner Up place in the SOCCER

tournament / ~~Athletic Meet~~ sponsored by the Ministry of Sports.

Assistant Government Agent
V. S. T. D.

Sports Officer
V. S. T. D.

'ஜொலி போய்ஸ்' அணி

## கிறிக்கெட் சான்றிதழ்கள்



VAVUNIYA DISTRICT SPORTS ASSOCIATION

This is to certify that bearer V. Somalingam of Unites Vidyalayam/Sports club participated in the Finals of the Best Batsman (Cricket) Tournament conducted during the year 1971, and emerged Champions/Runner up.

சிறந்த துடுப்பாட்ட வீரர்

1974

Certificate of Merit.

This Certificate is awarded to V. Somalingam of the United Sports Club for Attaining the Champions place in the Softball Cricket tournament / Athletic Meet sponsored by the Ministry of Sports.

முதலிடம் பெற்ற 'யுனைட்டட்' அணியில் ஒருவர்

Organised by

JOLLY BOYS SPORTS CLUB - VAVUNIYA.

" Most Important Thing In A Game, Is, Not To Win, But To Take Part, Like wise, Most Important Thing In Our Lives, Is, Not The Triumph, But The Struggle "

This Certificate Is Awarded To Mr. V. Somalingam of Jolly Boys S.C in expression of our sincere thanks, for having very sportingly taken - part in this tournament and for attaining the Championship place in the

முதலிடம் பெற்ற 'ஜொலி போய்ஸ்' அணியில் ஒருவர்

INTER - CLUB, SOCCER & CRICKET TOURNAMENT

1975.

Organised by

JOLLY BOYS SPORTS CLUB - VAVUNIYA.

" Most Important Thing In A Game, Is,
Not To Win, But To Take Part,
Like wise, Most Important Thing In Our Lives, Is,
Not The Triumph, But The Struggle "

This Certificate Is Awarded To Mr. V. Somalingam of Jolly Boys S.C in expression of our sincere thanks, for having very sportingly taken - part in this tournament and for attaining the Best Batsman place in the cricket tournament.

" NOTHING VENTURE, NOTHING WIN "

President. Hony. Secretary.

சிறந்த துடுப்பாட்ட வீரர்

ஹாட்லிக் கல்லூரியில் 1967 ஆம் ஆண்டு உதைபந்தாட்ட அணியில் அங்கம் வகிக்கும்போது, அவ்வணியினாற் போடப்பட்ட முப்பத்தெட்டுக் கோல்களில் இருபதைச் சங்கரண்ணையே போட்டிருந்தார். இவ்விபரம் படத்தின் பின்புறம் அவரது கையெழுத்திலேயே காணப்படுகிறது.



{ Best Team Hartley Ever produced }

Coach : Mr. C. J. thiravi
capt : selva
V. capt : Rathin

3 * Beat Vathiri Bombers 4-1
1 * Beat V.V.T. Blues 3-1
3 * Beat Old Boys XI 4-2.
0. * Beat Vailnri Diamonds. 3-0

1 * Beat Skandavarodhaya College 2-0
2 * Beat Jaffna Central [J.S.S.A. Runners up] 3-1
1. * Beat Jaffna College 2-0.
0 * Lost to St. Johns College. 2-3
2 * Beat Mahajana College [J.S.S.A. champions 4-2] 6/3 in 66.
2. * Beat Nelliady Central 4-1
1 * Beat St. Patrick's College [After 63 years on their grounds] 1-0
4. * Beat Vadamaradchi selected Team 6-3.
I scored 20 of the 38 goals scored by our team

Seated : Atputs. Nithy. Rathin. selva. sorny. satha
Standing : Sara. Sivaram. Ram. Lux. Valli. sree. Ben

'ஜொலி போய்ஸ்' உதைபந்தாட்ட அணியில் தம்பியரான கரன், சித்தா ஆகியோருடன் அங்கம் வகித்திருப்பது.



○ - சங்கரண்ணா △ - சித்தாத்தன் □ - கரன்

# கிறிக்கெட்டிற் சாதனை

1968 ஆம் ஆண்டு. நான் ஒரு சிறுவன், இரண்டாம் வகுப்பு மாணவன். பரியோவான் கல்லூரி விளையாட்டிலும் கல்வியிலும் மிக உயர்ந்த இடம் வகித்த காலம். கிறிக்கெட் விளையாட்டைப் பொறுத்த வரை பல வருடங்களாகப் பரியோவான் கல்லூரி அணி, எவராலும் வெல்லப்படமுடியாத அணியாகத் திகழ்ந்தது.

பருத்தித்துறைக் காட்லிக் கல்லூரியின் கிரிக்கெட் அணியிற் சங்கரண்ணை இடம்பெற்றிருந்தார். வழமைபோல் அவ்வருடமும் காட்லிக் கல்லூரிக் கிரிக்கெட் அணி, பரியோவான் அணியுடன் மோதியது. வெற்றி பெறுவது நிச்சயம் என்பதிற் பரியோவான் அணி உறுதியோடிருந் தது.

பரியோவான் இரண்டாவது இனிங்சினை ஆடவேண்டும். வெற்றி பெறுவதற்கு மிகக் குறைந்த எண்ணிக்கையேவேண்டும். அவ்வெண்ணிக் கையைப் பெறுவதற்குப் பரியோவான் அணிக்கு எவ்வித சிரமமும் இருக்காது என்பதே பார்வையாளர்கள் எல்லோரதும் கருத்தாக இருந்தது.

மைதானத்தில் நிலைமை மாறியது. சொர்ணி என அன்று அன் போடு அழைக்கப்பட்ட சங்கரண்ணையின் பந்து வீச்சுத் திறமை பரியோவான் துடுப்பாட்டக்காரரைத் திணறடிக்க வைத்தது. பலர் பூச் சியத்துடன் வெளியேற்றப்பட்டனர். வெற்றி பெறுவதற்கான சிறுதொகை ஓட்டங்களைப் பெறமுடியாமற் பரியோவான் அணியினர் களத்திலிருந்து அப்புறப்படுத்தப்பட்டனர்.

பல ஆண்டுகளாகவே தோல்வியைக் கண்டிராத பரியோவான் அணியினர் தோல்வியைத் தாங்க இயலாது கண்கலங்கி நின்றனர்.

வெற்றியடைந்த அணியைச் சேர்ந்தவராகவும் வெற்றிக்கான மூலகர்த்தாவாகவும் சங்கரண்ணை விளங்கியபோதும் எதுவித இறுமாப்புமின்றி ஒரு விளையாட்டு வீரனுக்குரிய பெருந்தன்மையுடன் தோல்வி கண்ட அணியைச் சேர்ந்த ஒவ்வொருவரையும் தேற்றிய காட்சி என் கண்முன்னே இன்றும் பசுமையாக நிற்கிறது.

*- சி. நிர்மலன் -*
*சிறப்புப் படையணி*

இந்துஸ்தான் பொறியியற் பயிற்சி மையத்திற் பல்வேறு விளையாட்டு களுக்கெனச் சங்கரண்ணைக்குக் கிடைத்த சான்றிதழ்கள்.

| |
|---|
| 1972 இல் டேபில் டெனிசில் இரண்டாவது இடம். |
| 1972 இல் கிறிக்கெற் அணியின் உறுப்பினர். |
| 1972 இல் கடும் போட்டியில் முதலிடம். |
| 1973 இல் வெற்றிபெற்ற உதைபந்தாட்ட அணியின் உறுப்பினர். |
| 1973 இல் வெற்றிபெற்ற கிறிக்கெட் அணித்தலைவர். |
| 1974 இல் ஈட்டி எறிதலில் முதலிடம். |
| 1974 இல் முதலிடத்தைப்பெற்ற கிறிக்கெட் அணியின் தலைவர். |
| 1974 இல் முதலிடத்தைப்பெற்ற உதைபந்தாட்ட அணியில் உறுப்பினர். |

**HINDUSTAN ENGINEERING TRAINING CENTRE**

ST. THOMAS MOUNT :: MADRAS-16

ANNUAL SPORTS MEET 1974

**CERTIFICATE OF MERIT**

This is to certify that *Sornalingam*
Class *A. M. E. - II* year was a member of *A.M.E. Group Foot Ball T*eam placed *First* in the Annual tournament conducted.

HINDUSTAN ENGINEERING TRAINING CENTRE MADRAS-16.

SPORTS SUPERINTENDENT. DIRECTOR.

முதலிடம் பெற்ற உதைபந்தாட்ட அணியில் உறுப்பினர்.



1970 இல் வவுனியா மகாவித்தியாலயத்தில் உதைபந்தாட்டப் பயிற்சி ஆசிரியராக இருந்தபோது



1971 இல் 'யுனைட்டட்' கழக உதைபந்தாட்ட அணிக்குத் தலைமை ஏற்றிருந்தபோது.

# வெற்றிகளால் துள்ளுவதுமில்லை தோல்விகளால் துவள்வதுமில்லை

1976-77 ஆம் ஆண்டுக் காலப்பகுதியில் வவுனியாவில் யுனைட்டட், ஜொலிபோய்ஸ், சான்டோஸ் ஆகிய கழகங்கள் முன்னணி வகித்தன. உதைபந்தாட்டச் சுற்றுப்போட்டிக்காக ஒவ்வொரு கழகமும்... 'ஏ', 'பீ' என இரு பிரிவுகளை அமைத்திருந்தது. அரை இறுதிப் போட்டியில், ஜொலிபோய்ஸ் 'ஏ' உம் சான்டோஸ் 'பீ' உம் ஒரு போட்டியிலும் மறு போட்டியில் சான்டோஸ் 'ஏ' உம் ஜொலிபோய்ஸ் 'பீ' உம் மோதும் நிலை. சொர்ணி (சங்கரண்ணை) ஜொலிபோய்ஸ் இன் பயிற்றுநர்.

இறுதிப் போட்டியில், இரண்டு 'ஏ' அணிகளும் மோதும்நிலை வரும். வவுனியா உதைபந்தாட்ட விசிறிகளின் எதிர்பார்ப்பு.

ஜொலிபோய்ஸ் 'ஏ' உம் சான்டோஸ் 'பீ' உம் மைதானத்தினுள் இறங்கின. வவுனியாவின் உதைபந்தாட்ட ரசிகர்களே அங்குத் திரண் டிருந்தனர். ஜொலிபோய்ஸ் 'ஏ' சிரமமின்றி வென்றுவிடும் என்பதே எல் லோரது எதிர்பார்ப்பும்.

விளையாட்டு முடியும் நேரம் நெருங்கியது. எவரும் கோல்கள் போடவில்லை. எவரும் எதிர்பாராதது. மேலதிக நேரம் வழங்கப்பட் டது. அதிலும் அதே நிலை.

இறுதியில் பனால்ரி உதைகள் வழங்கப்பட்டு முடிவு தீர்மானிக்கப் பட இருந்தது. இரு அணியினரும் நான்கு கோல்களைப் போட்டுச் சமநிலையில் இருந்தார். சான்டோஸ் 'பீ' ஆதரவாளர், மைதானத்தில் ஒரே கூத்தும் கும்மாளமும்.

மேலும் ஐந்து பனால்ரி உதைகள் வழங்கப்பட்டன. எவரும் எதிர்பாராதது நடந்தது. சான்டோஸ் 'பீ' ஐந்து கோல்கள் ஜொலி போய்ஸ் 'ஏ' நான்கு கோல்கள்

மைதான மூலையில் மரத்தடியில் ஜொலிபோய்ஸ் 'ஏ' அணியினர் தாரை தாரையாகக் கண்ணீர் சொரிந்தவண்ணம் இருந்தனர்.

மனத்தைக் கல்லாக்கி வந்தார் சொர்ணி. ஒவ்வொருவராகத் தேற்றி கட்டியணைத்துச் சென்ற காட்சி, மைதானத்தையே கலங்க வைத்தது.

சொர்ணி, வெற்றிகளால் துள்ளுவதுமில்லை. தோல்விகளால் துவள்வதுமில்லை.

-க.சி.மணியம்-



மெய்வல்லுநர் போட்டிப் பரிசளிப்பு நிகழ்வொன்றில்



பணியாற்றிய கப்பல்களிற் சங்கரண்ணை

## விமான நிறுவனங்களில் தொழில் முயற்சி

WARDAIR Canada LTD

October 16, 1974

P.O. Box 926, Edmonton, Alberta,
T5J 2L8

Mr. V. Sornalingam,
Hindustan Eng. Trg. Centre,
40, North Parade Road,
St. Thomas Mount,
MADRAS 600016.

Dear Mr. Sornalingham,

FA

FLAMINGO AIR LINES

AIR MAURITIUS

1 Sir William Newton Street, Port Louis, Mauritius. P.O.Box 60 cable : AIRMAURITIUS Port Louis Tel: 2-1286

October 16, 1974

PS.2.2(a)/324
RW/LDW
15th October 1974

Philippine Airlines P. O. BOX 954 MANILA, PHILIPPINES: CA

AIR PACIFIC

16 VICTORIA PARADE SUVA—BOX 112 G.P.O. SUVA FIJI—TELEPHONE 25661—TELEGRAMS

Mr. V. Sornalingam,
Hindustan Engineerin
Training Centre,
40 North Parade Road

ETHIOPIAN
AIRLINES S.C.

P. O. BOX
CABLE:

April 10, 1974

CAL

中華航空公司

CHINA AIRLINES
HEAD OFFICE

oct.

Mr. V. Sornalingam
No. 11, Irrigation Bungal
Vavuniya, SRI LANKA

POLYNESIAN Airlines Ltd.

Cables "POLYNESIAN"
Telephone 740
PLEASE ADDRESS ALL CORRESPONDENCE TO GENERAL MANAGER . P. O. BOX 599 . APIA . WESTERN

Hong Kong Air International

22nd October, 1974.

8th April, 1974.

IRANIAN HELICOPTERS AVIATION COMPANY

P. O. BOX TEHRAN IRAN

வேலை விண்ணப்பத்திற்கு விமான நிறுவனங்களிலிருந்து அனுப்பப்பட்ட பதிற் கடிதங்கள்

大 韓 航 空
KOREAN AIR LINES

CABLE ADDRESS "KOREANAIRLINES"
TELEX: "HJTRANS 23635"
CPO BOX 864 SEOUL, KOREA
TEL. 23-0681, 28-8231

Mr. V. Sornalingam
Hindustan Engg.
Training Centre,
40, North Parade Rd.,
St. Thomas Mount
Madras - 60016

Flugfélag Íslands HF
ICELANDAIR
MEMBER OF I.A.T.A.
REYKJAVIK, April 4th 1974.

CP Air

Grant McConachie Way
Vancouver International Airport Central
Vancouver, Canada V7B 1V1
Tel (604) 273-6211

April 18, 1974

QANTAS
AUSTRALIA'S OVERSEAS AIRLINE
QANTAS JET BASE SYDNEY (KINGSFORD SMITH) AIRPORT MASCOT 2020
TELEPHONE 670 011
PLEASE QUOTE REFERENCE 99A JK/70/258
11 April, 1974

SWISSAIR
Schweizerische Luftverkehr AG S.A. Suisse pour la Navigation Aérienne Swiss Air Transport Company Ltd.

Telex : 52407
Telegramm : SWISSAIR ZURICH
Telephon : 01-812 12 12
Int./extension:
Bearbeiter/Originator :

Mr. V. SORNALINGAM
Hindustan Engg. Training Centre
40, North Parade Rd.
St. Thomas Mount
M a d r a s
India

Ihr Zeichen / votre réf. / your ref.
Ihr Schreiben vom / votre lettre de / your letter of
Unser Zeichen / notre réf. / our ref. PBI/SCH/
Datum / date / date 9.4.74

Dear Mr. Sornalingam,

Thank you for your letter applying for a position with our company. We see from its contents that you would be particularly interested in working for Swissair in Switzerland i. e. Zurich/Kloten, Geneva or Basle.

Unfortunately we are not free in our choice of foreign personnel and have to comply with official regulations. According to the present regulations we cannot consider applications from foreign nationals.

In countries abroad, our representatives are competent for local employment. Should you be interested in working for Swissair outside Switzerland, please contact our representation in the country of your choice.

Yours sincerely,

S W I S S A I R
Personnel Service Ground Personnel

வேலை விண்ணப்பத்திற்கு, தங்கள் நாட்டுக் குடியுரிமை உடையவர்களுக்கே இத்தகைய வேலை வழங்கமுடியும் எனக்கூறி, விமான நிறுவனங்களால் அனுப்பப்பட்ட கடிதங்கள்.

# கப்பலில் வேலை

விமானப் பராமரிப்புப் பொறியியற்றுறையிற் பட்டம் பெற்ற போதும் அத்துறையில் தொழில் பெறும் முயற்சி தோல்வியடைய, கப்பல் நிறுவனம் ஒன்றிற் பயிற்சிப் பொறியியலாளராக இணைந்து கொள்கிறார்.

NOTICE OF SELECTION

شركة حنان للشحن المحدودة

V.Sornalingam Esqr.,
11, Irrigation Bungalow,
VAVUNIYA.

4th November, 1976.

HANANS SHIPPING LIMITED.

SHIP AGENTS CHARTERERS BROKERS & CREWING AGENTS

Dear Sir, Ref Our: Your

POST: APP.ENGINEER - MV "YANNIS M"

You have been selected for recruitment in the above capacity and we would be taking action as Crewing Agents on behalf of the owners of the vessel, to have you sign Ship Articles.

It must, however be noted that since final appointment or rejection would be effected by the Ship Owners at their discretion, we would not hold ourselves liable for any loss or damage which you may sustain consequent upon such a decision

After final appointment by our Principals, you may be required to sign a Service Agreement with us for which a Guarantor with an annual income of over Rs. 6000/- would have to be provided by you together with his/her identity card.

It is necessary that you have the following documents ready for travel :-

Valid Passport
Valid Vaccination Certificate
C.D.C./S.R.B.
Rice Ration Book Surrender Endorsement/Certificate
Medical Certificate from Dr. A. E. Wanigesooriya, consultant P & I Association, Ceylinco House Colombo (fee will borne by Ship Owners)
Visa (if necessary)

You are required to sign the appended form in confirmation of your acceptance of the above conditions.

Yours faithfully
HANANS SHIPPING LIMITED

Agents
for: MATHESON ENTERPRISES, S.A.

1976 ஆம் ஆண்டு பயிற்சிப் பொறியியலாளராக நியமிக்கப்பட்டதற்கான நியமனக் கடிதம்.

شركة حنان للشحن المحدودة

**Hanans Shipping Limited**

P.O.BOX
CABLE SHIPCR
COL

SHIPS AGENTS CHARTERERS BROKERS & CHEWING AG

9th November 1976.

SEAFARERS APPOINTMENT LETT

Ref: Yours:-
Ours:-

V.Sornalingam Esqr.,
11, Irrigation Bungalow,
Vavuniya.

Dear Sir,

POST OF APP/ENGINEER - mv "YANNIS M"

We have pleasure in informing you that the owners of the vessel M/s Matheson Enterprises S.A. Greece are agreeable to recruit you as APP.ENGINEER and their general terms are indicated below:-

| | | |
|---|---|---|
| DURATION | : | ONE YEAR |
| REMUNERATION | : | POUNDS 25/- PER MONTH PLUS O.T. AND EXTRA POUND 0.30 PER HOUR |
| OTHERS | : | AS PER OUR SERVICE AGREEMENT |
| AIRFARE | : | FULL COST TO BE BORNE BY YOU |

It should be clearly noted that notwithstanding the Articles signed with the Shipping Officer, Colombo, you may be required to sign an Agreement with the Emplo on assuming duties and that such Agreement may contain additional or varied clause which may be binding on you.

If you agree to accept this appointment under the conditions laid down above, please confirm same by signing the Agreement given below. .

Yours faithfully,
HANANS SHIPPING LIMITED.

As Agents
for: M/s MATHESON ENTERPRISES S
GREECE.

சங்கரண்ணைக்கான மாதக் கொடுப்பனவு குறித்த கடிதம்



கப்பலில் தொழில் புரியும்போது பல்வேறு துறைமுகங்கள், நகரங்கள், பிரசித்திபெற்ற இடங்கள் போன்றவற்றிற்குச் சங்கரண்ணை சென்றுவரும் வாய்ப்புக் கிட்டியது.





பணியாற்றிய கப்பலிற் சங்கரண்ணை



அரபு நாடொன்றில் ஒட்டகத்திற் சங்கரண்ணை



குளிர் நாடொன்றிற் சங்கரண்ணை



வெளிநாட்டில் அழகிய பூங்கா ஒன்றிற் சங்கரண்ணை



கிரேக்கப் போர்வீரனின்
சிலையின் முன்பாக



நூதனசாலை ஒன்றின் முன்பாக



வெளிநாட்டில் நின்றபோதும் சொந்த மண்ணைச் சுட்டிக்காட்டியபடி சங்கரண்ணை

PIRAEUS,
GREECE,
29 th September, 1977.

VESSEL : M/V " YANNIS - M "
NRT : 4027
GRT : 6923
ENGINE : 4160 BHP. HARIMA - SULZER.

CERTIFICATE OF SERVICE

This is to certify that Mr. VAIDIALINGAM SORNALINGAM has served as an APPRENTICE ENGINEER on the above vessel from 12 th November 1976 to 29 th September 1977.

His superiors found him to be very hard working and trustworthy. He is honest and his conduct is very good.

Wish him good luck.

M/V YANNIS M

THE MASTER.

எம்.வீ. 'யானிஸ்' என்ற கப்பலிற் பொறியியலாளராகச் செயற்பட்டதற்கான சான்றிதழ்

# அமீர் பண்ணை

சங்கரண்ணையின் உறவினர் அமிர்தலிங்கம் பராமரிக்க வாய்ப் பில்லாததால் தமது பண்ணையைச் சங்கரண்ணையிடம் கொடுத்தார்.

அப்பண்ணை மிகப் பிரபல்யம் பெற்ற பண்ணைகளில் ஒன்றாக மிளிரத் தொடங்கியது. அப்போதைய அரசில் அமைச்சராக இருந்த அமரர் தொண்டமான் அவர்கள், பண்ணையின் சிறப்பை அறிந்து நேரடி யாக அதற்கு வருகை தந்து பண்ணையைப் பார்வையிட்டார்.

உயர் அளவிற் பால்கொடுக்கும் நல்லினப் பசுக்கள் இருந்தமை, அப்பண்ணையின் சிறப்பம்சங்களில் ஒன்றாக விளங்கியது.

இவை அனைத்துக்கும் மேலாக, அங்கு அமைக்கப்பட்டிருந்த உயிர்வாயு உற்பத்தி நிலையம் பலரையும் கவர்ந்ததொன்றாகும்.

உயிர்வாயு உற்பத்திக்கென மாட்டுச்சாணகம் உயிர்வாயு உற்பத் திக் கிடங்கிற்குள் செல்வதற்கென அமைக்கப்பட்ட வடிகாலமைப்பு முறை யும் உயிர்வாயு உற்பத்தி நிலையத்தின் சிறந்த கட்டுமானமும் அப் பண்ணைக்குப் பெருமைசேர்த்திருந்தன.

உயிர்வாயுவின் பயன்பாடுபற்றிப் பெரியளவில் எவரும் அறிந்திராத காலப்பகுதியிலேயே வெளிநாட்டிலிருந்து அதன் வடிவமைப்பிற்கான வரைபடங்களைப் பெற்று, அதற்கேற்பக் கட்டுமானங்களை மேற்கொண்டு உயிர்வாயுப் பயன்பாட்டை இங்கு அறிமுகப்படுத்தியவர் சங்கரண்ணை என்றே கூறலாம்.

உயிர்வாயுவைப் பயன்படுத்தி நீர் இறைக்கும் இயந்திரத்தை இயக்கியமை, பெற்றோமக்ஸ் விளக்கை எரித்தமை, சமையல் அடுப்பிற் குப் பயன்படுத்தியமை எனப் பல்வேறு தேவைகளுக்குப் பயன்படுத்தி ஒரு மாதிரிப்பண்ணையையே செயற்படுத்தி வந்தார்.

தானிய வகைகள், மரக்கறி வகைகள், ஆடு, கோழி எனப் பல்வகை உற்பத்திகளையும் கொண்டிருந்தது அந்தப் பண்ணை.



அமைச்சர் தொண்டமான் பண்ணைக்கு வருகை தந்தபோது
சங்கரண்ணையுடன்



பண்ணையில் நல்லினப் பசுக்கள்



உயிர்வாயு உற்பத்திக் கிடங்கு நிர்மாணவேலை



வீட்டு முற்றத்தில் தம்பியர் கரனும் உதயகுமாரும்



அமீர் பண்ணையில் உயிர்வாயு உற்பத்தி நிலையம்

# தோழன்

தலைவர் அவர்களை நான் முதன்முதற் கண்டவேளை, அவரது சகாவாகவே சங்கரண்ணையைக் கண்டேன். தலைவரின் மெய்ப்பாது காவலர் பணியையும் அவரே ஆற்றினார். வாகனச் சாரதியும் அவரே தான்.

தலைவர் அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்கின்ற நண்பனாய் அவரை உணர்ந்தேன்.

தலைவரின் மெய்ப்பாதுகாப்பாளராக நான் செயற்பட்ட வேளை, அன்போடு பல அறிவுறுத்தல்களைக் கூறிவந்தார். பாதுகாப்பில் அக்கறை யோடு புதிய நடைமுறைகளை அறிமுகம் செய்ய வழிகாட்டியவர்.

அந்நியத் துணையோடு மாற்றுக் குழுக்கள், தலைவர் அவர்களுக் கும் இயக்கத்திற்கும் சேதங்கள் ஏற்படுத்த முனைந்தபோது ஆபத்துக் களை உணர்ந்து தலைவரின் தனிப்பாதுகாப்பிற்கும் இயக்க நலனிற்கு மெனப் புலனாய்வுப் பணியை மேற்கொண்டு நின்றவர்.

தலைவரின் காலத்தில் நாடு விடுதலை பெறவேண்டும் என்று அவர் அடிக்கடி கூறுவார்.

இயக்கத்திற்கு ஏற்பட்ட சோதனையான காலங்களில் எல்லாம் தலைவருடன் கூட இருந்து அவரின் எண்ணக்கருக்களுக்குச் செயல் வடிவம் கொடுத்தவர்.

தலைவர் அவர்கள் புதிய துறைகளின் வடிவங்களை எடுத்துச் சொல்லி உருக்கொடுக்கும் பணியை சங்கரண்ணையிடம் ஒப்படைப்பார். சங்கரண்ணையின் பட்டறிவு, கல்வி, ஆற்றல், பொது அனுபவம் என்பன உருக்கொடுக்கும் பணியைச் செம்மையாக்கின.

சங்கரண்ணையின் நேர்மையும் விசுவாசமும் தலைவர் அவர்களி டம் அவருக்கோர் தனியிடத்தைத் தந்தன.

தலைவரைப் பற்றியும் இயக்க நடைமுறைகளைப் பற்றியும் போராளிகளிடம் இலகுவாகப் பழகி ஆழமாக எடுத்துரைக்கும் தகைமை யுடையவர்.

இந்திய இராணுவக் காலத்தில் தலைவர் அவர்கள் வரித்துக் கொண்ட நடைமுறைகளை முழுமையுடனும் ஆளுமையுடனும் அமுலாக்க வழிசெய்தவர்.

சமர்க்களங்கள் நடைபெறும்பொழுது தலைவருடன் கூட இருந்து கள நிலைவரங்களை அவதானித்துத் தலைவருக்குக் கூறும் சக தோழனாகச் செயற்பட்டார்.

- சொர்ணம் -
சிறப்புத் தளபதி
சிறப்புப் படையணி

# தலைவருடன்...

இற்றைக்குப் பதினைந்து ஆண்டுகளுக்கு முந்திய காலம். தமிழீழ விடுதலைப் போராட்டம் சர்வதேசமயப்பட்டு வந்த அதேநேரத்தில் எமது விடுதலைப் போராட்டத்தின்மீது இந்தியத் தலையீடு நேரடியாகப் பதிந்திருந்தது. இந்திய மண்ணில் எமது நடவடிக்கைகள் பரவியிருந்தன.

சனநெரிசல் மிகுந்த தமிழகத்தின் தலைநகர் சென்னையில் எங்குத் திரும்பினாலும் திரைப்பட விளம்பரங்களும் சினிமா நட்சத்திரங்களின் உருவெட்டுகளுமே நிறைந்திருந்தன. குறுகிய இடைவெளிகளினூடாகக் குதித்துப்பாயும் முச்சக்கர வண்டிகளின் இரைச்சல், வாகனங்களின் அலறல், மனித ஒலிகள் என எல்லாம் ஒன்றாகக் கலந்து காதை அடைக்கும் சத்தப் பூமி.

ஒலி அலைகளின் தொல்லை குறைந்த் பகுதி. சென்னையின் சனநெரிசல் நிறைந்த வியாபாரப் பகுதியினின்றும் சற்று விலகி அமைந்திருக்கும் ஒரு குடியிருப்பு. புலிகளின் செயற்பாட்டிடங்கள் பலவும் காணப்பட்ட பகுதி. அரசியல், மருத்துவம், தொழினுட்பம் எனப் பல்வேறு பிரிவுகளும் அங்கேதான் அமைந்திருந்தன.

தலைவர் அவர்களின் செயற்பாடுகளுக்கான பிரதான களமும் அங்கேயே அமைந்திருந்தது. தலைவர் அவர்களின் சந்திப்பிடமும் அங்குதான் இருந்தது.

தமிழகத்தின் கரையோரங்களிற் புலிகளின் முகாம்கள் பல அமைந்திருந்தன. தமிழீழப் பிரதேசங்களிற்கான பிரதான விநியோக மையங்கள் அங்கிருந்துதான் செயற்பட்டன. ஒரு மையத்தின் பொறுப்பாளி என்ற வகையில் தலைவர் அவர்களைச் சந்திப்பதற்காக அழைக்கப்பட்டேன்.

நீண்ட நேரம் காத்திருந்தேன். அழைப்பு வரவில்லை. சங்கரண்ணையுடன் பேசிக்கொண்டிருக்கிறார் என்பதை அறிந்ததும் இப்போதைக்கு அழைப்பு வராதென்பதை உணர்ந்து கொண்டேன்.

நீண்ட அவ்வுரையாடல்கள் என்னவென்பதை நாம் இதுவரை அறியவில்லை. ஆனால், விடுதலை இயக்கத்தின் அன்றைய வளர்ச்சியைத் தீர்மானிப்பதில் அவை முக்கிய பங்கு வகித்தன. குறிப்பாகத் தமிழ்நாட்டின் நிர்வாக, அரசியல் உயர்மட்டங்களுடன் நியாயத் தர்க்கம் புரிவதிற் சங்கரண்ணையின் பங்கு குறிப்பிடத்தக்கது.

*- ச. பொட்டு -*
*பொறுப்பாளர்,*
*புலனாய்வுத்துறை.*



இந்திய அதிகாரிகள் தலைவரைச் சந்தித்தபோது

# தலைவரின் உயிர்த்தோழன்

திருவண்ணாமலை தமிழகத்தின் வரலாற்றுத் திருத்தலங்களில் ஒன்று அமைந்த ஊர். 1986 இல் முதன்முதற் சங்கரண்ணையைச் சந்தித்த ஊர்.

அறிவு முதிர்ந்த இயல்பு, நிமிர்ந்த கம்பீரத் தோற்றம், மென்மையான அரவணைக்கும் கதைகள், முதற்சந்திப்பிலேயே என் மனத்தில் ஆழப்பதிந்து கொண்டன.

தலைவர் அவர்களின் முகாமில் நானும் அவரும் ஒன்றாக இருந்த சந்தர்ப்பங்கள் பல.

தலைவருடனான நெருக்கத்தை, நட்புறவை நேரிற் கண்டவன் நான். தலைவரின் பல்துறைச் சிந்தனைகளுக்குச் செயல்வடிவம் கொடுத்தவர். தலைவரின் எண்ணத்திலுள்ள தேசக் கட்டுமானத்தின் முக்கிய சிற்பி.

தலைவருடன் மனந்திறந்து பேசும் ஒரு மனிதர். தலைவர் மனந்திறந்து பேசும் ஒரே மனிதர்.

தலைவருக்கு ஏற்பட்ட கடின காலங்கள் ஒவ்வொன்றிலும் உயிர்த் தோழனாகத் தன் பணியாற்றியவர்.

மணலாற்றுக் காட்டிற் சோதனையான காலங்களில் தலைவரின் பாதுகாப்பிற்குக் குறைந்த எண்ணிக்கையிலேயே போராளிகள் நின்ற போதும் தலைவருக்கான பாதுகாப்பிற் கடும் சிரத்தை எடுத்துச் செயற்பட்டவர். அனைத்துப் பிரச்சினைகளுக்கும் முகம் கொடுத்தவர்.

எப்பொழுது சந்தித்தாலும் தலைவரின் பாதுகாப்புப் பற்றியே பேசுவார். இவ்விடயத்தில் அவரின் இதயத் துடிப்பை நான் நன்கறிவேன்.

- ஆதவன் (கடாபி) -
இம்ரான் பாண்டியன் படையணி

# மொழியாற்றலில் தலைவரின் நம்பிக்கை

புலிகள் அமைப்பின் பெரும்பாலான நிர்வாகச் செயற்பாடுகள் தமிழ்நாட்டின் தலைநகராம் சென்னை மாநகரிலேயே இடம்பெற்றன. 1984 ஆம் ஆண்டு எம்மால் எம்.ஓ. (M.O.) எனச் சுருக்கமாக அழைக்கப்பட்ட இராணுவ அலுவலகமும் அங்கேயே செயற்பட்டுவந்தது.

ஆங்கிலத்தில் வெளிவரும் இராணுவ விஞ்ஞான நூல்கள், சஞ் சிகைகள் போன்றவற்றிலிருந்து தேவையான விடயங்களை மொழிபெயர்ப் பது, குறிப்பெடுத்து கட்டுரைகள் வரைவது என்பன அந்த அலுவலகத் தின் வேலைகளிற் குறிப்பிடத்தக்கவையாகும்.

சங்கரண்ணை அந்த அலுவலகத்திற்குத் தனியாகவோ தலைவர் அவர்களுடனோ வந்துபோவார்.

ஒருமுறை சங்கரண்ணை வந்திருந்தார். மொழிபெயர்ப்பு வேலை கள் சம்பந்தமான பேச்சு வந்தது. பலவற்றை மொழிபெயர்க்கிறீர்கள், நான் தரும் ஒரேயொரு வசனத்தை மாத்திரம் மொழிபெயர்க்க முடியுமா எனக் கேட்டார். எல்லோரும் சம்மதம் தெரிவித்தோம்.

'Never in the history of the mankind was so much owed by so many to so few' என்ற வின்சன்ட் சேச்சிலின் வசனத் தைக் கூறி, அதுபற்றி ஒரு குறும் விளக்கமும் தந்தார்.

இரண்டாம் உலக மகாயுத்தத்தின்போது ஜேர்மனியக் குண்டுவீச்சு விமானங்கள் பெரும் கூட்டம் கூட்டமாக இலண்டன் மாநகரத்தின்மீது குண்டுவீச்சைத் தொடராக நடாத்தின. பிரித்தானிய போர் விமானங்கள் பெரும் இழப்புக்களை வானிற் சந்தித்தபோதும் சளைக்காது போரிட்டு இலண்டன் மாநகரைப் பாதுகாத்து நின்றன. இதனால் இலண்டன் சிறிய சேதத்துடன் பெரும் இழப்பிலிருந்து தப்பிப்பிழைத்தது.

இச்சண்டையிற் பங்கேற்றுக்கொண்ட விமானிகளை அப்போதைய பிரிட்டிஷ் பிரதமரான வின்சன்ட் சேச்சில் புகழ்ந்து போற்றிப் பேசிய வசனமே அவ்வசனம் என்ற விளக்கத்துடன் முடித்துக்கொண்டார்.

எல்லோரும் முயன்று மொழிபெயர்த்தோம். எல்லாவற்றையும் பார்த்த அவர் முழுமையாகச் சரியாக யாருமே செய்யவில்லை என்று கூறினார். சரியான மொழிபெயர்ப்பைக் கூறும்படி கேட்டபோது நீங்களே முயலுங்கள் எனக் கூறிச் சென்றுவிட்டார்.

பின்பு அங்கு வருகை தந்த தலைவர் அவர்கள், சங்கரண்ணை தந்த ஒரே ஒரு வசனத்தைக்கூட உங்களால் சரியாக மொழிபெயர்க்க முடியவில்லையே எனச் சிரிப்புடன் கேட்டார். எம்மில் ஒருவர், அதற் கான மொழிபெயர்ப்பைக் கூறும்படி சங்கரண்ணையிடம் கேட்டும் கூறாத படியால் அவருக்கும் தெரியாது போலுள்ளது எனக் கூறினார்.

சங்கரண்ணையின் ஆங்கிலத் திறமைபற்றி நீங்கள் எனக்குச் சொல்லத்தேவையில்லை எனத் தலைவர் அவர்கள் அப்போது கூறியது சங்கரண்ணையின் ஆங்கில மொழியாற்றலில் தலைவர் அவர்கள் வைத் திருந்த நம்பிக்கையினை எடுத்துக்காட்டுகிறது.

- *தினேஸ் மாஸ்டர்* -

# புகைப்படம்

"விடுதலைப் புலிகள்" என்ற பெயரின் கீழ், பல்வேறு இயக்கங்களும் தம்மை மறைத்துக் கொண்டிருந்த காலம். இந்தியாவிற் குறிப்பாகத் தமிழகத்தில் இக்குழப்பம் வலுப்பெற்று இந்திய ஊடகங்கள் கூட இக்குழப்ப மாயைக்குள் அகப்பட்டிருந்தன. அவ்வேளை இந்தியாவின் பிரபல ஆங்கில மாத இதழ்களில் ஒன்றான சண்டே (Sunday) மாத இதழுக்காகப் பிரபலமான நிருபர்களில் ஒருவரான அனித்தா பிரதாப், தேசியத் தலைவர் அவர்களிடம் கண்ட முதலாவது செவ்வி வெளிவந்தது.

தேசியத் தலைவரின்

"இயற்கை எனது நண்பன்."
"வரலாறு எனது வழிகாட்டி."
"வாழ்க்கை எனது தத்துவாசிரியன்." என்ற

கூற்றுக்கள் உட்படத் தேசியத் தலைவரின் தத்துருபமான படமும் பிரசுரமாகியிருந்தது. அப்புகைப்படம் அக்காலத்தில் மிகப் பிரபல்யம் பெற்ற புகைப்படமாக விளங்கியது. தோற்றத்தாலும் மக்கள் தலைவன் என்ற அம்சத்தைப் புடம்போட்டுக் காட்டிய அப்புகைப் படத்தின் புகைப்படப் பிடிப்பாளர் வேறுயாருமல்லர் சங்கரண்ணையேதான்.

- நிர்மலன் -
சிறப்புப் படையணி

# நேர காலம் இல்லை

இந்திய இராணுவ அழுத்தங்கள் அதிகரித்திருந்தன. எங்கு என்ன நிகழுமோ என்பதை ஊகித்தறிய முடியாத நிலையில் மணலாற்றுப் பிரதேசம் எங்கும் இந்திய இராணுவ நகர்வு நடவடிக்கைகள் இடம் பெற்றன.

இந்திய இராணுவத்தைப் புலிப்போராளிகள் எதிர்கொள்ளும் போதெல்லாம் மோதல்கள் வெடித்தன. கைகலப்புச் சண்டை போன்ற மிக நெருங்கிய சண்டைகள். ஒரு மரத்தின் மறைப்பிற் புலிவீரன், அடுத்த மரத்தில் இராணுவ வீரன், எட்டித் தொடலாம். ஆனால், துப்பாக்கிச் சண்டை. இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருந்தது மணலாற்றுச் சண்டை.

தலைவரின் பாதுகாப்பிற் புலிப்போராளிகள் தம்மை வரிந்து கட் டிக் கொண்டிருந்தனர். இரும்புக் கவசமாக அரண் அமைத்து நின்றனர். எந்த இராணுவ அழுத்தத்திற்கும் முகம்கொடுக்க மனவலிமையுடன் காத்துநின்றனர்.

வளையங்களாக அமைந்த காப்பரண் தொகுதிகள், நகர்வு அணிகள், வேவு அணிகள், கண்ணி வெடி-பொறிவெடி வைக்கும் அணி கள் எனப் பல அணிகளும் தமது செயற்றிறனை முடுக்கிவிட்டிருந்தன.

வந்து முட்டிக்கொள்ளும் இந்திய இராணுவம் பலத்த அடிவாங்கி யது. கண்ணிவெடி, பொறிவெடியில் மாட்டிய இந்திய இராணுவம் செய்வ தறியாது பின்வாங்கியது. புலிகளின் பதுங்கித் தாக்குதலை எதிர் கொண்டவர்கள், நகர்வைக் கைவிட்டுச் சென்றனர்.

இவ்வாறாகப் பல புதுப்புது வியூகங்களை வரைந்து செயற்படுத் திக்கொண்டிருந்தார் தலைவர்.

நானும் அப்போது தலைவரின் இடத்திலேயே நின்றேன். சங்கரண்ணையும் அங்கேயே நின்றார். தலைவர் அவர்களின் கொட்டிலிற் சில வேளைகளில் நடுச்சாமத்தில் விளக்கு எரிந்துகொண்டிருக்கும்.

சில வேளைகளில் அதிகாலையில் விளக்கு எரியும். பார்த்தால் தலை வரும் சங்கரண்ணையும் பேசிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் பேசு வதற்குக் காலநேரம் இருப்பதில்லை. முக்கிய விடயங்கள் என்றாற் சங்கரண்ணை தலைவர் அவர்களால் அழைக்கப்பட்டிருப்பார்.

*- கயால்ராஜ் -*
*கட்டளைத் தளபதி*

# செயல் வடிவம் கொடுப்பவர்

தமிழீழப் பிரதேசத்தின் இதயபூமி, இந்திய இராணுவ காலத்திற் புனித பூமி. தலைவர் அவர்களை வனவளத்தாற் பாதுகாத்தது மணலாற்று மண்.

எங்கும் இந்தியப் படைகள். பல்லாயிரம் துருப்புகள் மணலாற்றின் கற்புக்கு அச்சுறுத்தலாகி நின்றன. இந்தியப் படைகளால் துகிலுரியும் படலம் ஆரம்பிக்கப்பட்டது. புலிப் போராளிகள் மூர்க்கமாய்ப் போராடினர். தலைவர் அவர்கள் அவ்வப்போது புதுப்புது வியூகங்களை வகுத்து எதிர்ச்சமர் புரிந்தார்.

அலையென வந்தது இந்திய இராணுவம். ஊடறுத்து நிகழ்த்தப்பட்ட தாக்குதல்கள் அவர்களது முன்னேற்றத்தைத் தாமதப்படுத்தின. நிலைகுலைய வைத்தன. ஆயினும், தம்மாலானவரை பெரும்பலம் கொண்டு மீண்டும் மீண்டும் தாக்கினர்.

தலைவர் முன்னெச்சரிக்கையுடன் தனது தங்குமிடத்தை மாற்றிக் கொள்ள எண்ணினார். அப்போதைய தங்குமிடத்தை இந்திய இராணுவம் அண்மித்தால் வந்தவர்களை முற்றாக அழித்துவிட்டுப் புதிய இடம் போவதென்பதே திட்டம்.

திட்டத்திற்குச் செயல்வடிவம் கொடுக்கும் பணி சங்கரண்ணையின் கைகளில் ஒப்படைக்கப்படுகிறது. புதிய இடத்தைத் தெரிவுசெய்கிறார். பிரதான தேவையான குடி நீருக்குக் கிணறு வெட்டப்படுகிறது. இவை யாவும் மிகவேகமாக மூன்று வாரங்களிற்குள் பூர்த்தியாக்கப்படுகின்றன.

தெரிவுசெய்யப்பட்ட இடம் மிகத் துல்லியமாக உருமறைக்கப்படுகிறது. தலைவர் அவர்களின் அடுத்த கட்டளைக்காக அவர் முன்னே காத்திருக்கிறார் சங்கரண்ணை.

- பிருந்தன் -
படைய அறிவியற் கல்லூரி

# பலமான சிரிப்பு

ஒன்றுகூடல்கள், பயிற்சி முகாம் நிறைவு நிகழ்வுகள், திருமண நிகழ்வுகள் போன்றவற்றிற் பொறுப்பாளர்கள், தளபதிகள் ஒன்றுசேர்ந்து கொண்டாற் சொல்லவாவேண்டும். குளிர்களி, சிற்றுண்டிகள் எமது உள்ளங்களைக் குளிரச் செய்துவிடும். பலதும் பத்தும் எனப் பேச்சுக் கள் வரும். நடந்துமுடிந்த சண்டையைப்பற்றி விளக்குவார் ஒருவர். அங்கு அது நடந்தது இது நடந்தது எனப் பக்கப்பாட்டுப் பாடுவார் இன்னொருவர். குறுக்குக் கேள்விகள் கேட்டுப் பின்னணி இசை வழங்கு வார் மற்றொருவர்.

பொருள் பொதிந்த பேச்சுக்கள், பல்சுவைப் பேச்சுக்களிடை யிடையே சிரிப்பொலிகள் வெடித்துச் சிதறும். அவரைப்பற்றி, இவரைப் பற்றி எனப் பேச்சுக்கள் திசைதிரும்பும். எங்கேயோ புறப்பட்டு, எங்கேயோ சென்று, எப்படி எப்படியோ போகும்.

எங்களுள் ஒருவராகவே இருந்துகொள்வார் சங்கரண்ணை. விடுத்துவிடுத்து விடயங்களைக் கேட்பார். உன்னிப்பாக ஒவ்வொன்றை யும் அவதானிப்பார். எங்கேயோ சென்ற பேச்சைத் தனக்கு வேண்டிய விடயத்திற்குத் திசைதிருப்பிக்கொண்டு வருவார். இடையிடையே தனது கருத்தையும் கூறுவார். கேள்விகள் கேட்பார். பேச்சுக்களில் எம்முடன் ஒன்றிப்போவார்.

எம்மை மறந்து பேச்சுக்கள் போய்க்கொண்டிருக்கும். இடையி டையே சங்கரண்ணையின் சிரிப்புப் பலமாக இருக்கும். "பைம்பல்" களை இரசித்துச் சிரிக்கிறார் எனப் பெரும்பான்மையோர் நினைத்துக் கொள்வோம்.

சங்கரண்ணையின் பலமான சிரிப்புநேரம் பேசப்பட்டவை தலைவர் அவர்களுக்குத் தெரிந்துவிடும். இதைப் பின்பே நாம் அறிந்துகொள் வோம்.

*- கபால்ராஜ் -*
*கட்டளைத் தளபதி*

# வரலாற்றுச் சந்திப்பில்....

விடுதலைப் புலிகள் பலம் குன்றிவிட்டார்கள். இன்னும் சில மாதங்களில் முற்றாக அழிக்கப்பட்டுவிடுவார்கள். யாழ் நகருக்கான A9 பாதையின் பெரும்பகுதி கைப்பற்றப்பட்டுவிட்டது. இன்னும் சில நாட்களில் யாழ்நகருக்கான தரைவழிப் பாதையை இராணுவம் முற்றாகக் கைப்பற்றிவிடும். இன்று நடாத்தப்பட்ட தாக்குதலில் நூற்றுக்கணக்கான புலிகள் கொல்லப்பட்டனர். கிளிநொச்சி மீதான புலிகளின் தாக்குதல் முறியடிக்கப்பட்டது. இராணுவத் தந்திரோபாயமாகக் கிளிநொச்சியி லிருந்து இராணுவம் பின்வாங்கிக் கொண்டது. இவ்வாறுதான் அன்றைய அரச, இராணுவச் செய்திகள் வெளிவந்தன.

சர்வதேசமும் இந்தப் புளுகு மூட்டைகளை நம்பியது. புலிகள் ஒடுக்கப்பட்டுவிட்டார்கள் என எண்ணியது.

ஒட்டுசுட்டானில் வெடித்த வெடிப்பொலி ஆனையிறவைக் கைப் பற்றி நின்றது. ஓயாத அலைகள் மூன்று என்ற பாரிய வெற்றிச்சமர் சர்வதேசத்தையும் உலுக்கியது. யாழ்க் குடா மீதான விடுதலைப் புலி களின் இராணுவ நெருக்குதல் அன்றைய அரசைப் பல நாடுகளுக்கும் இராணுவ உதவிவேண்டி ஓடவைத்தது.

விடுதலைப் புலிகளின் பலம் மீண்டும் உலகறிய வைக்கப்பட்டது. அரசின் பரப்புரைகள் பொய்யாக்கப்பட்டன.

இனப்பிரச்சினைக்குச் சமாதான வழியிலேயே தீர்வு காணவேண் டும் எனச் சர்வதேசம் கருதியது. விளைவு, இனப்பிரச்சினைத் தீர்விற்கு நோர்வே தனது உதவியை வழங்க முன்வந்தது. இதற்காக நோர்வே அரசு தனது சார்பிற் சிறப்புத் தூதுவராக எரிக் சொல்கெய்மை நிய மித்தது.

சமாதான முயற்சிகள் குறித்து தலைவர் அவர்களைச் சந்திக்க விரும்பிய எரிக் சொல்கெய்ம் தலைவர் அவர்களின் அழைப்பை ஏற்று வருகை தந்தார்.

வரலாற்று நிகழ்வான இச்சந்திப்பின்போது தலைவர் அவர்களுடனிருந்தார் சங்கரண்ணை. தமிழீழ விடுதலைப் போரின் வரலாற்று நிகழ்வுகள், தமிழ் மக்களின் அபிலாசைகள், விடுதலைப்போர் கடந்துவந்த பாதைகள், சிங்கள அரசுகளாற் காலாகாலமாக மேற்கொள்ளப்பட்ட அடக்குமுறைகள், விடுதலைப் புலிகளின் சமாதான அறை கூவல்கள் என அனைத்து விடயங்களையும் தலைவர் அவர்கள் எடுத்துக் கூறச் சிறப்புத் தூதுவர் விளங்கிக்கொள்ளும் மொழியிற் சங்கரண்ணை அவற்றை மொழி பெயர்த்தார்.

அன்று ஆரம்பித்த அந்த வரலாற்றுச் சந்திப்பு இன்று பெரு விருட்சம்போன்று விரிந்து, பரந்து வந்துள்ளது.

- சு.ப. தமிழ்ச்செல்வன் -
பொறுப்பாளர்,
அரசியற்றுறை



# பெட்டகம்

உள்ளத்தின் வைப்புச் செப்புகளும் அங்கேதான்.
நெடுங்காலம் பேண வேண்டியவையும் அங்கேதான்.

ஒட்டுமொத்தத்தில் ஒரு சேமிப்புக் கிடங்கு. "கவனமாக இருக்க வேணும் எண்டு நினைக்கிறதைச் சங்கரண்ணையிடம்தான் கொடுத்து வைப்பேன். தேவை ஏற்படும்போது மறக்காமல் தருவார்" சங்கரண்ணை யின் பொருட்கள் குறித்து எப்பொழுதும் தலைவர் அவர்கள் இப்படித்தான் கூறுவார்.

மணலாற்றுக் காட்டில் எப்பவோ தலைவர் அவர்கள் கொடுத்த திசைகாட்டி இப்பவும் புதுப்பொலிவுடன் இருக்கிறது. ஏன் சங்கரண்ணை யிடம் எப்பொருள் பற்றிக் கேட்டாலும் அது தலைவர் அவர்களால் வழங்கப்பட்டதாகவே இருக்கும். அதற்கென ஒரு குறுஞ்சரித்திரமும் அத்துடன் பின்னிப்பிணைந்திருக்கும்.

எந்தப் பொருளெனினும், அதைப் பேணுவது, அவதானமாகக் கையாள்வது – அதில் அவரே அவருக்கு நிகர்.

இந்த விசேட பண்பு தலைவர் அவர்களால் அடையாளம் காணப் படுகிறது. சங்கரண்ணை தலைவர் அவர்களின் பெட்டகமானார்.

- *சி. நிர்மலன்* -
*சிறப்புப் படையணி*

# பொய்க்கவில்லை

1999 ஆம் ஆண்டு, எல்லைப்படையை உருவாக்குவதில் வன்னிப் பெருநிலப்பரப்பு சுறுசுறுப்பாக இயங்கியது.

முள்ளியவளைப் பிரதேசத்திலும் எல்லைப்படைப் பயிற்சி நடை பெற்றுக்கொண்டிருந்தது. பயிற்சி முகாமிற்கான சகல தேவைகளையும் பூர்த்தி செய்யும் வேலை பிரதேசப் போர் எழுச்சிக் குழுவிடம் ஒப்படைக் கப்பட்டிருந்தது.

உணவு சமைக்கும் இடத்தில் நான் போர் எழுச்சிக் குழு உறுப்பி னராகக் கடமையில் நின்றேன். ஊர்தி ஒன்று அங்கு வந்து நின்றது. சங்கரண்ணை, சங்கரண்ணை எனப் பலரும் முணுமுணுத்துக்கொண்டனர்.

சமையற்கூடத்தின் சகல பகுதிகளையும் சுற்றிப் பார்த்தார். சுகா தாரம் பற்றிப் பேசினார். உணவைச் சுவைத்துப் பார்த்தார். மேற்பார்வை செய்யும் என்னை அறிமுகப்படுத்தி வைத்தனர்.

முன்னமே என்னை நன்கு தெரிந்தவர்போல் மிக்க நட்புடன் பேசினார். எனக்கு மட்டில்லா மகிழ்ச்சி. அன்று எனது குடும்பத்தவரு டன் சங்கரண்ணையைச் சந்தித்ததைப் பற்றித்தான் பேசினேன்.

ஒவ்வொரு நாளும் சங்கரண்ணை சமையற்கூடத்திற்கு வருவார். எம்மிருவருக்கும் இடையே நெருக்கம் அதிகரித்தது. சமையல் விடயங் களை மிகவும் உன்னிப்பாகக் கவனிப்பார். இருந்ததை வைத்து இயன்றவரை நல்ல உணவு வழங்கவேண்டும் என்ற கருத்து அவரிடம் காணப்பட்டது.

மிகவும் அந்நியோன்யமாகப் பழகும் அவரது சுபாவம் என்னைப் பெரிதும் கவர்ந்தது. நீண்ட நேரம் பேசுமளவிற்கு எமது உறவு வளர்ந் தது. ஒரு நாள் பேசிக்கொண்டிருக்கும்போது எனது உள்ளக்கிடக் கையை வெளியிட்டேன். தலைவர் அவர்களைப் பார்க்கவேண்டும் என்ற எனது அவா அது

சிரித்தார். சற்று யோசித்தார். மீண்டும் சிரித்தார். சற்று நேரம் கழித்து "நீங்கள் இயக்கத்திற் சேருங்கோ பிறகு பார்ப்பம்" என்றார். நான் எப்படியாவது இயக்கத்திற் சேரவேண்டும் என அன்றே உறுதி யெடுத்தேன். இயக்கத்திற்கு எடுப்பார்களா என்ற கேள்வி என்னுள் இருந்தது; முயன்றேன்.

லெப்.கேணல் தூயவன் அரசறிவியற் கல்லூரிக்கு என்னையும் சேர்த்துக்கொண்டார்கள். இயக்க உறுப்பினரானேன். பயிற்சிக் கல்லூரி யிலிருந்து முள்ளியவளை வந்துகொண்டிருந்தேன். வாகனமொன்று வந்து அருகில் நின்றது.

அது சங்கரண்ணையின் வாகனம். கண்ணாடி பதிக்கப்பட்டது. "என்ன கடைசி பஸ்ஸிலை ஏறிட்டியளாம்" சங்கரண்ணையின் அந்த வார்த்தைகள் இன்னும் எதிரொலித்துக்கொண்டேயிருக்கின்றன.

26.09.2001 அன்று, சங்கரண்ணையின் வீரச்சாவு அறிந்து அவரது வீட்டிற்குச் சென்றேன்.

நேரம் நள்ளிரவை எட்டிவிட்டது. நான் போராளியாகிச் சங் கரண்ணையோடு சென்று பார்க்கலாம் என்ற என் உள்ளக்கிடக்கை அவரது வித்துடலோடு நிறைவேறியது. வித்துடலுக்கு வணக்கம் செலுத்த வந்த தலைவர் அவர்களை நேரிற் பார்த்தேன்.

சங்கரண்ணையின் சொல் பொய்க்கவில்லை.

- *ச. இசையழகன்* -
*அரசியற்றுறை*

எந்தவொரு விடயத்தையும் தலைவரிடம் நாசூக்காகத்
தெரிவித்துவிடுபவர் என்பதால், பொறுப்பாளர் பலர் சில சங்கடமான
விடயங்களை அவர்மூலமாகவே தலைவருக்குத் தெரிவிப்பர்.

- ஏ. ராம்-

ஜெயந்தன் படையணி

சங்கரண்ணைக்கோ, அவரின் ''காதுகளில்'' ஒன்றிற்கோ
கேட்டால் அண்ணைக்குக் கேட்ட மாதிரித்தான்.

- சி. மலரவன் (ஆனந்த்) -

நாம் அண்ணையிடம் நேரிற் கூறத் தயங்கும் விடயங்களை
சங்கர் அண்ணாவின் காதில் போட்டுவிடுவோம்.
அது சேரவேண்டிய நேரத்திற்குப் போய்ச் சேர்ந்துவிடும்.

- இ. குந்தவை -

புலனாய்வுத்துறை

தலைவர் அவர்களது கருத்துக்களுக்கு அவ்வப்போது
உள்ளீட்டு- வெளிப்படுகை ஊடகமாகத் திகழ்ந்தவர்.

- ச. பொட்டு -

பொறுப்பாளர்
புலனாய்வுத்துறை

பொறுப்புகளைப் பகிர்ந்து தலைவரின் நெருக்கடிகளைக்
குறைக்க வேண்டும் என்பதே அவரின் எண்ணமாகும்.

- கேணல் விதுஷா (யாழினி) -

# புலனாய்வுப் பார்வை

அறிந்தவற்றை அறியாதவர்க்கு அறியக்கொடுப்பதும், ஆராய வேண்டியவற்றை அலசி ஆராய்ந்து தெளிவுற எடுத்துக்கூறுவதும் அவருக்கே உரிய பண்புகள்.

அவர்தான் சங்கரண்ணை.

தேடிவருகிறார் எனின், ஏதோ விடயம் அவரது புலன்களைத் தொட்டுவிட்டது என நினைக்கலாம்.

அவரது கைப்பட எழுதிய கடிதம் தென்பட்டாற் புலனாய்விற்கு உதவும் விடயம் புதைந்து கிடக்கும் எனக் கருதலாம்.

அவரிடமிருந்து கிடைப்பதோ வெறும் தகவலன்று ஆராயப்பட்ட ஒரு புலனாய்வுக் கண்ணோட்டத்துடன்கூடிய ஓர் அறிக்கை என்றே கூறலாம்.

சந்திப்புகள் நிகழும் இடங்களில் அசைந்துவரும் அவரது நடையும் பளிச்சிடும். சிரிப்பும் ஏதோ விடயத்தை ஒவ்வொருவருடனும் பரிமாறிக் கொள்வதற்கான அவரது தயார்நிலையையே எடுத்துக்காட்டும்.

என்னைச் சந்திக்கும் ஒவ்வொரு வேளையிலும் புலனாய்வுப் பொறுப்புணர்வுடன் கருத்துக்களைப் பரிமாறுவார். பலரது அன்றுமுதல் இன்றுவரையான செயற்பாடுகளை அலசுவதிலாகட்டும் ஒருவரின் சரியையும் தவறுகளையும் புலனாய்வுக் கண்ணோட்டத்துடன் முன்வைப்பதிலாகட்டும் அவரது பொறுப்புணர்வு வெளிப்படும்.

கிடைத்த தகவல்களை உரியவர்களுக்குக் கொடுக்கவேண்டும் என்ற அவரது துடிப்பும் வேகமும் அவரை எம்மையே தேடிவரவைக்கும் அல்லது எம்மை அழைத்து அவற்றைத் தரவைக்கும். இரண்டும் நிகழாதவிடத்துக் குறிப்புத்துண்டுடன்கூடிய கடிதவுறை எம்மைத் தேடிவரும்.

புலனாய்வுக் கண்ணோட்டம் சங்கரண்ணையுடன் கூடவே சேர்ந்து அசைந்து செல்லும். தலைவர் அவர்களின் புலனாய்வுத் தேவைகளின் ஆரம்ப இயக்குநர் சங்கரண்ணையே. தமிழீழத்தில் β2 (பீற்றா 2) என்ற பெயரில் ஆரம்பப் புலனாய்வுக் கட்டமைப்பை வழிநடத்தியவர் அவர்.

எதிரிகள், துரோகிகள், அந்நியர் எனப் பல்வேறு வகையினரின் பயமுறுத்தல்களினின்றும் தலைவரையும் இயக்கத்தையும் பாதுகாப்பதில் அவரின் அறிவுத்திறமையும் மதிநுட்பமும் பெரிதும் பயன்பட்டன.

விடுதலைப் போரின் பாதுகாப்பை உறுதிப்படுத்தவேண்டிய காலம் அது. புலனாய்வுப் போரின் ஆரம்பகாலம் என்றும் கூறலாம். மக்கள் மீதான புரிந்துணர்வுடன் செயற்படக்கூடிய புலனாய்வு அணியின் அவசியம் உணரப்பட்டபோது சங்கரண்ணையின் புலனாய்வுத் திறனை மதிப்பிட்டு வைத்திருந்த தலைவர் சங்கரண்ணையே அப்பணிக்குப் பொருத்தமானவர் எனக் கருதினார்.

- ச. பொட்டு -
பொறுப்பாளர்
புலனாய்வுத்துறை

# சாதுரியங்கள்

1984 ஆம் ஆண்டுக் காலப்பகுதி. ஒரு பத்திரிகையாளருக்கே யுரிய தோற்றம். தோளில் தொங்கும் துணிப்பை அதை மேலும் உறுதி செய்கிறது. நான் அங்கு தங்கியிருந்தபோது அடிக்கடி வந்து போகிறார். என்னை முன்பின் தெரியாது. அப்பொழுது நான் விடுதலைப் புலிகள் அமைப்பில் இணைந்திருக்கவும் இல்லை. என்னுடன் முதற்சந்திப்பு. எனது ஊர், குடும்ப விபரம், கல்வி என எல்லாவற்றையும் கேட்டறிந்து விட்டார்.

தமிழகத்தில் நான் தங்கியிருந்த இடம் பிரபல்யமானது. 1983 இனக்கலவரத்தை அடுத்து, நாட்டை விட்டு வெளியேறிய பல்வேறு தகைமைகளையும் கொண்ட தமிழர்களால் உருவாக்கப்பட்டு, சர்வதேசத் தலைநகர்கள் பலவற்றிற் கிளைகளை வியாபித்திருந்த தமிழ்த் தகவல் நடுவகத்தின் மையப் பணிமனை. இந்நடுவகத்திற் கடமையாற்றிய பலருக்கும் அப்போதைய சூழலிற் சரியான நோக்குடைய விடுதலை அமைப்பு எது என்பது தெரிந்திருக்காத நிலை. அன்றைய காலகட்டத் திற் செயற்பட்ட பல்வேறு இயக்கங்களின் முக்கிய செயற்பாட்டாளர்கள் பலரும் அப்பணிமனைக்கு வந்து செல்வதுண்டு.

விடுதலைப் புலிகள் அமைப்பிலிருந்து வந்து செல்பவர்களிற் சங்கரண்ணையும் ஒருவர். அதிக நேரம் அப்பணிமனையில் நேரத்தைக் கழிக்கும் விடுதலைப்புலி உறுப்பினரும் அவரேதான்.

அங்கு வரும் ஏனைய இயக்க உறுப்பினர்கள், தமிழக அரசியல் வாதிகள், தமிழகப் புலனாய்வாளர்கள், இந்திய மத்திய அரசுடன் தொடர்புடையவர்கள், இந்திய மத்திய புலனாய்வாளர்கள் எனப் பல் வேறுபட்டவர்களுடன் ஆளுமையுடன்கூடிய அவருக்கே உரிய நட்புப் பேச்சுமூலம் பல்வேறு விடயங்களைக் கறந்துகொள்வார்.

இங்குச் சங்கரண்ணை பெற்றுக்கொண்ட நட்பு இயக்கத் தேவை கள் பலவற்றிற்கு உதவியது. இந்திய அரச நிலைப்பாடு, ஏனைய இயக் கங்களின் செயற்பாடு போன்ற பல்வேறு விடயங்கள் சங்கரண்ணையின் சாதுரியத்தாற் பெற்றுக்கொள்ளப்படுகின்றன. விடுதலைப் போராட்டத் தில் விடுதலைப் புலிகள் தம்மை நிலைநிறுத்திக்கொள்ள இவரது சாதுரியங்கள் பெரிதும் உதவின.

*- ப. மாதவன் மாஸ்ரர் -*
*புலனாய்வுத்துறை*

# பேச்சு வன்மை

ஒப்படைக்கப்படவேண்டிய இந்திய இராணுவக் கைதிகள் வலிகாமத்திலிருந்து தென்மராட்சி நோக்கி அழைத்து வரப்படுகின்றனர். தென்மராட்சியிலும் பல்வேறு இடங்களில் இந்திய இராணுவம் முகாமமைத்து நடவடிக்கைகளை ஆரம்பித்திருந்தது. வலிகாமம் தென்மராட்சி இணைப்புப் பகுதிகளில் ஒன்றினூடாகத் தென்மராட்சியினுள் அவர்களை நகர்த்த வேண்டிய பணி காத்துக் கிடந்தது.

சங்கரண்ணை வெகு சாதுரியமாக அவர்களை வலிகாமத்திலிருந்து தென்மராட்சியின் நுழைவாயில் வரை நகர்த்தியிருந்தார். தென்மராட்சியிலும் வாகனப் பயணம் ஏறக்குறையச் சாத்தியமற்றதாகவே அப்போது இருந்தது. எப்பகுதிக்கும் எந்நேரத்திலும் இந்திய இராணுவம் வரலாம் என்ற நிலை இருந்தது. இந்திய இராணுவ ரோந்து அணிகள் வீதிகளில் எப்பொழுதும் குறுக்கிடலாம்.

ஒழுங்கைகள் ஒழுங்கு செய்யப்படுகின்றன. சங்கத்தானைப் பகுதியை அடையவேண்டும். சங்கரண்ணை குசுகுசுக்கிறார். "கவனம் கவனம்". செல்லும் பாதைகளை அண்டிக் கண்காணிப்பாளர்கள் விடப்படு கிறார்கள். ஒருவாறு கைதிகள் கையளிக்கப்படவேண்டிய பாடசாலை யடியை எவரும் அறியாவண்ணம் அடைந்துவிட்டோம். மாலையாகிவிட் டது.

இந்திய அமைதிப் படை அதிகாரிகளுடன் சங்கரண்ணை கைகுலுக்குகிறார். ஆங்கிலத்தில் ஏதேதோ பேசுகின்றனர். இடையிடையே சிரிக்கிறார்கள். கைதிகளின் விபரங்கள் அடங்கிய ஆவணம் கைமாறுகிறது. விடுவிக்கப்பட்ட கைதிகள் தமது நன்றியறிதலை அவர்களது முகபாவத்தின்மூலம் காட்டிக்கொண்டனர். விடுதலைப் புலிகளின் நிலைப்பாட்டை அங்குக் குழுமியிருந்த இந்திய இராணுவ அதிகாரிகள், சிப்பாய்கள் அனைவருக்கும் ஏதோ ஆணித்தரமாகக் கூறியதைச் சங்கரண்ணையின் குரல், முகபாவம், சைகைகள் என்பவற்றினூடாக விளங்கிக் கொண்டேன்.

கையளி பு நிகழ்வு முடிவுற்றது. மைம்மற்பொழுதாக இருந்தது. இருள் சூழ்ந்து கொள்ளச் சில நிமிடங்களே இருந்தன. எல்லோரும் புறப்பட ஆயத் மானார்கள். எனது நிலை சிக்கலானது. நான் வாகனத்துடன் கண்டி வீதியின் தென்புறம் செல்லவேண்டும்.

இரவுவேளையாதலாற் போகும் வழியில் இந்திய இராணுவத்தாற் பாதிப்பு ஏற்பட வாய்ப்புண்டு. விடயத்தைச் சங்கரண்ணையிடம் கூறினேன்.

சங்கரண்ணை அதிகாரிகளிடம் சென்றார். ஏதோ எடுத்துச் சொன்னார். அவர்கள் தலையசைத்துச் சம்மதம் தெரிவித்தனர். ஏதோ கையாற் காட்டிப் பேசினார். அதிகாரி இரு கைகளின் விரல்களையும் விரித்து அசைத்து அசைத்து ஏதோ கூறினார்.

என்னிடம் வந்தார் சங்கரண்ணை. இவ்வளவு பேரையும் விட்டிருக்கிறோம். உங்கள் பாதுகாப்பை உறுதி செய்வதாகக் கூறு கிறார்கள். இரவு முகாமிலேயே தங்கும்படியும் விடிய அவர்கள் அனுப்பி வைப்பார்கள் எனவும் தெரிவித்தார். ஆணித்தரமாகவும், சாதுரியமாகவும் பேசி அவர்களைச் சம்மதிக்க வைத்துள்ளேன் யோசிக்கவேண்டாம் எனக் கூறிச்சென்றார்.

இரவு முகாமிலேயே தங்கினேன். விடிந்ததும் சங்கரண்ணை கூறியபடி என்னை அனுப்பி வைத்தார்கள்.

- சி. சோ. பானு -
குட்டிசிறி பீரங்கிப் படையணி

# வரலாற்றுத் திருப்புமுனை

ஊடகங்கள் செய்திகள்மூலம் மக்களுக்கு உண்மை நிலைகளைப் புடம் போட்டுக் காட்டுகின்றன. மக்களின் எழுச்சியைப் பிரதிபலிக்கின்றன. மக்களை எழுச்சியுறச் செய்கின்றன. குறிப்பாகப் போராட்டச் சூழலில் ஊடகங்கள் ஆற்றும் பணி அளப்பரியது. மக்களை அரசியல்மயப் படுத்துகின்றன. மக்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமைகின்றன. போராட்டத்தின் பல்வேறு பரிணாமங்களையும் மக்கள் அறிந்துகொள்ள வழிவகுக்கின்றன.

1987 ஆம் ஆண்டு தமிழீழப் பிரதேசத்தின் பிரதான செய்தி ஊடகங்கள் ஈழமுரசு, முரசொலி ஆகிய பத்திரிகைகளாகும். இவ்விரு பத்திரிகைகளும் தமிழ் மக்களுக்கு அன்றாடம் போராட்டச் செய்திகளை எடுத்துச் செல்வன. போராட்ட வழிகாட்டிகளாகவே திகழ்ந்தன. அன்றாடச் செய்திகளைச் சுமந்து யாழ் நகரில் இருந்து அச்சாகி வெளிவந்த இவ்விரு பத்திரிகைகளும் உண்மை நிலைவரங்களை எடுத்துக்காட்டி மக்களுக்கு உணர்வூட்டியதுடன் மக்களின் உணர்வுகளையும் பிரதிபலித்தன.

இப்பிரதிபலிப்புக்கள், இந்திய அமைதிப்படைக்கு எதிரான மக்கள் போராட்டம் விரிவாக்கம் பெற்று வருவதை உணர்த்தியது. தமக்கெதிராக உருவாகி வரும் மக்கள் எழுச்சியை முறியடிக்கக் குறுக்கு வழியைக் கையாள்வதற்கு அமைதிப்படை கங்கணம் கட்டியது.

அமைதிப்படையினர் சதி நகர்வொன்றை மேற்கொண்டனர். அதிகாலைவேளை மேற்படி இரு பத்திரிகைக் காரியாலயங்களையும் முற்றுகையிட்ட அமைதிப்படை, இரு காரியாலயங்களையும் குண்டு வைத்துத் தகர்த்துவிட்டது.

இக்குண்டு வெடிப்பால் ஏற்பட்ட வெடிப்பொலி யாழ் நகரையே உலுக்கியது. தமிழ் மக்களின் நரம்பு மண்டலத்தை முறுக்கேற்றியது. தமிழ் மக்களின் கருத்துச் சுதந்திரத்தை நசுக்க முற்பட்டமை தலைவரின் மனத்தில் ஆழமான வடுவை ஏற்படுத்தியது.

சங்கரண்ணையை அழைத்தார் தலைவர் அவர்கள். நடந்தவற்றை நேரிற் சென்று பார்த்துச் சகல விபரங்களையும் பெற்று நிலைமைகளை ஆய்ந்து தரும்படி கூறுகிறார்.

மிக நுண்ணியமாக விபரங்களைத் திரட்டுகிறார். சகல விபரங்களையும் கேட்டறிந்துகொள்கிறார். முழுமையுடன் தலைவரைச் சந்திக்கிறார்.

ஒரு வரலாற்றுத் திருப்பு முனை ஏற்படுகிறது.

*- ப. மாதவன் மாஸ்ரர் -*
*புலனாய்வுத்துறை*



# யுத்தக் கைதிகள்

அது இந்தியப் படையினர் யாழ்க் குடாவைத் தமது கட்டுப்பாட்டிற் கொண்டுவருவதற்காகப் பலமான தாக்குதல்களை முடுக்கிவிட்டிருந்த வேளை. எங்கும் சரமாரியாகச் செல்கள் வீசப்பட்டன. விடுதலைப் புலிகளும் இந்திய இராணுவமும் முட்டுப்படும் இடமெல்லாம் சண்டை வெடித்தது. ஏறக்குறைய யாழ்க் குடாநாட்டின் பெரும் பகுதி இந்திய இராணுவத்தின் கட்டுப்பாட்டில் வந்துவிட்டது. புலிகளின் கட்டுப்பாட்டில் எப்பகுதியும் இல்லை என்ற நிலையேயிருந்தது.

ஆங்காங்கே புலிகளின் அணிகள் இந்தியப் படையுடன் தீவிரமான மோதலில் ஈடுபட்டிருந்தன. இந்திய இராணுவம் சாரிசாரியாகச் சகல பகுதிகளிலும் குவிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. ஊரெழுப் பகுதியில் இரு தரப்பிற்குமிடையிற் கடும் மோதல் மூண்டது. யுத்தத்தின் போக்கில் அங்கு ஒரு திருப்பம் ஏற்படுகிறது. இந்தியப் படையினர் யுத்தக் கைதிகளாக்கப்படுகின்றனர்.

எங்கும் இந்திய இராணுவத்தினர், எங்கும் செல் வீச்சுக்கள். எப்படி யுத்தக் கைதிகளைப் பாதுகாப்பாக வைத்திருப்பது என்பது கேள்விக் குறியாக இருந்தது. யுத்தக் கைதிகளைப் பாதுகாப்பாக வைத்திருக்கும் பொறுப்பு சங்கரண்ணையிடம் ஒப்படைக்கப்படுகிறது.

“யுத்தக் கைதிகள் கொடுமைப்படுத்தப்படுகிறார்கள். யுத்தக் கைதிகள் கொலை செய்யப்படுகிறார்கள்” என்ற பொய்யான செய்திகள் எல்லா ஊடகங்களுக்கும் அன்றைய இந்திய அரசால் வழங்கப்படுகிறது. இப்பொய்ப்பிரச்சாரத்தை முறியடிக்கவேண்டிய தேவை வலுப்பெறுகிறது. யுத்தக் கைதிகளுக்கு எவ்வித ஊறும் நேராமலும் எங்கும் பரவி வரும் இந்திய இராணுவத்தின் கண்களிற் படாமலும் பாதுகாக்கும் பொறுப்பு சங்கரண்ணையிடம் விடப்பட்டது. மிகுந்த எச்சரிக்கையடைகிறார்.

எவரது அறிவுக்கும் எட்டாத வகையில் ஒரு வீட்டில் வைத்துப் பூட்டுகிறார். அவர்களை எப்படியாவது பாதுகாத்து எதுவித பாதிப்புமின்றி ஒப்படைத்து உண்மை நிலையைத் தெளிவுபடுத்த வேண்டும் எனக் கங்கணங்கட்டிக்கொள்கிறார்.

கைதிகளை விடுவிப்பதற்கான ஏற்பாடு ஒழுங்கு செய்யப்படுகிறது. தென்மராட்சிக்கு அவர்களை நகர்த்தவேண்டும். இந்தியப் படைகளின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு நகர்த்தவேண்டும். ஒருவாறாக வாகனமொன்றில் ஏற்றப்பட்ட கைதிகள், யாழ்க்குடாவின் சிறப்பம்சமான ஒழுங்கைகளின் உதவியால் நகர்த்தப்பட்டுக்கொண்டிருந்தனர்.

பார ஊர்தி எளிதிற் செல்லமுடியாத பாதைகளூடாகத் தட்டுத்தடு மாறி வந்துகொண்டிருந்தது பார ஊர்தி. புன்னாலைக்கட்டுவன் பகுதி. இந்திய இராணுவத்தின் நடமாட்டம் அங்கும் காணப்பட்டது. ஒழுங்கை ஒன்றினூடாகப் பார ஊர்தி வந்துகொண்டிருந்தது. குன்றும் குழியுமாக இருந்த பாதையில் மழை நீர் ஆங்காங்கே தேங்கி நின்றது. மழை நீர் தேங்கி நின்ற பள்ளத்தில் இறங்கிய பார ஊர்தியை வேகப்படுத்தி எடுக்க முடியாத நிலை. வேகப்படுத்துவதால் ஏற்படும் சத்தம் இந்திய இராணு வத்தின் காதுகளிற் கேட்டுவிடும் என்ற அச்சம். காலதாமதமும் செய்ய முடியாது.

வேறு வழி தென்படவில்லை. பார ஊர்தியிலிருந்து யுத்தக் கைதிகளை இறக்கிக்கொண்டு நடையிற் கிளம்புகிறார்கள். சப்பாத்துப் போட்டு நடந்தே பழக்கப்பட்டவர்கள். வெறுங்காலுடன் நடக்கப் பெரும் பாடுபடுகிறார்கள். கால்கள் கொப்புளித்துக் கொள்கின்றன. நடக்கமுடி யாமல் விழுகிறார்கள். நிலத்தில் இருந்து கொள்கிறார்கள். தூக்கி யும் கைத்தாங்கலாகவும் சங்கரண்ணையின் முயற்சியால் அடுத்து எமக் காகக் காத்துநிற்பவர்களை அடைகிறோம்.

*- சியாகி -*
*லெப்.கேணல் ராதா விமான*
*எதிர்ப்புப் படையணி*

# கைகளை உயர்த்தினோம்

தலைவர் அவர்களின் திட்டமிடலில் மணலாற்றின் பாதுகாப்பு வியூகங்கள் வகுக்கப்பட்டன. சிறுசிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுப் பாதுகாப்பு ஏற்பாடுகள் முடுக்கிவிடப்பட்டன. ஒரு பகுதிக்கு எனது தலைமையில் நான்குபேர் அமர்த்தப்பட்டோம். பகுதிகளைப் பார்வையிட்டு மதிப்பீடு செய்வது சங்கரண்ணை.

தலைவர் அவர்களிடம் சென்றேன். எனது அலுவல்களை முடித்தபின் சங்கரண்ணை அழைக்கப்பட்டார். என்னுடன் சென்று எனது பகுதியைப் பார்க்கும்படி சங்கரண்ணையைத் தலைவர் அவர்கள் பணிக்கிறார்.

சங்கரண்ணை எம்முடன் புறப்படுகிறார். பழைய பாதையால் அழைத்துச் சென்றால், தடயங்கள் சங்கரண்ணையின் கண்களிற் பட்டு விடும். சிக்கலாகிவிடும்.

புதிய பாதையால் அழைத்துச் செல்கிறோம். பற்றைக் காடுகளினூடாகக் குனிந்தும், தவழ்ந்தும் நகர்கிறோம். பழைய பாதைகளைத் தாண்டிச் செல்லவேண்டிய சந்தர்ப்பங்கள் வந்தபோது, முன்னால் ஒருவரை அனுப்பித் தடயங்களை மறைத்துவிட்டு அப்பகுதிகளைக் கடக்கிறோம்.

ஒருவாறு எமது இடத்தை அடைந்துவிட்டோம். எல்லாவற்றையும் துருவித் துருவிப் பார்த்தார். கேள்விகளாற் சல்லடை போட்டார். சிரித்துச் சிரித்துப் பல கோணங்களிற் கதைத்தார். எதையாவது வாய் தடுமாறிச் சொல்லிப்போடுவமோ? மிக எச்சரிக்கையாகவே பேசினோம்.

இறுதியிற் குறிப்பெழுதத் தொடங்கினார். குறிப்பைக் குறிப்பால் உணர்த்தி எழுதினார். நாம் கைகளை உயர்த்திக் கொண்டோம்.

- குட்டி -
ஜெயந்தன் படையணி

# உணவு தேடலில் இரகசியம்

உணவைப் பெறுவதையும், சேமிப்பதையும் பிரதான நடவடிக்கைகளாக மேற்கொள்ளவேண்டிய காலம்.

"உப்பில்லாப் பண்டம் குப்பையிலே" என்ற பழமொழி பொய்ப்பிக்கப்பட்டது. உப்பில்லாமல், எத்தனையோ நேர உணவுகளை அமிர்தமென உண்டிருக்கிறோம்.

போராளிகளுக்கு உணவைப் பெறுவதே பெரிய திட்டமிடலுடன் கூடிய, பலர் சம்பந்தப்படுத்தப்பட்ட ஓர் இராணுவ நடவடிக்கைக்குச் சமமான செயற்றிட்டமாக நிறைவேற்றப்பட வேண்டியிருந்தது.

போராளிகளைப் பட்டினிச் சாவினின்றும் காக்க உயிரைப் பணயம் வைத்து உணவை எடுத்துவரவேண்டியிருந்தது.

உணவைப் பெறுவது எமது நடவடிக்கைகளில் மிகப் பலமான ஒரு நடவடிக்கையாக இருந்தது. எதிரி எமது பிரதேசத்தை அடையாளங்காண வழிவகுத்துவிடும். எமது நகர்வுகளைக் கோடிட்டுக் காட்டிவிடும். பதுங்கித் தாக்குதல் போன்ற நடவடிக்கைகளுக்கு உள்ளாக்கி உயிரிழப்புக்களுக்கு வழிவகுத்துவிடும். எமது நெருங்கிய ஆதரவாளர்களுக்குச் சிக்கல்களைத் தோற்றுவித்துவிடும். ஒட்டுமொத்தத்திலேயே எமது நடவடிக்கைகள் முடக்கப்பட்டுவிடலாம்.

இச்சூழலில் வவுனியாப் பிரதேசத்தில் தலைவருக்கான செயற்பாட்டிடம் அமைக்கும் பாரிய பணியோடு இடத்தைப்பற்றிய இரகசியம் கசியா வண்ணம் பார்க்கவேண்டிய பெரும் பொறுப்பும் இருந்தது.

இவை அனைத்திற்கும் மேலாக, உணவுப் பொருட்களைப் பெறுவதற்குப் பல பொதுமக்களைச் சம்பந்தப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம். இதனால் ஏற்படக்கூடிய இரகசியக் கசிவைத் தடுப்பதில் வெற்றிகண்டவர் சங்கரண்ணை.

பலரும் பார்க்கத்தக்கவாறு வேண்டிய திசைக்கு எதிர்த்திசையில் உணவை நகர்த்துவது, பலரும் கேட்கத்தக்கவாறு தவறான தரவு களைப் பேசுவது - இவை அவரின் கைவந்த கலைகள். இவற்றின் மூலம் ஒரு பாரிய நடவடிக்கையைச் சிறப்பாகச் செயற்படுத்தி வெற்றி கண்டார்.

*- மணிவண்ணன் -*
*கிட்டுப் பீரங்கிப் படையணி*



# அவ்ரோ

விசுவமடுக் காட்டுப் பகுதியில் "அன்பு" என்னும் பெயரில் பெண் போராளிகளுக்குரிய முகாம் இருந்தது. இந்திய இராணுவத்துடனான சண்டை தொடங்கிச் சில மாதங்களே ஆகியிருந்தன. பெரிய அளவிற் காடுகளில் இந்திய இராணுவம் இறங்கிக்கொள்ளாத காலகட்டம்.

'அன்பு முகாமில்' இருந்து சில கிலோமீற்றர் தூரத்தில் ஆண் போராளிகளின் முகாம் இருந்தது. அது சங்கரண்ணையின் முகாமுங்கூட. சங்கரண்ணை இடையிடையே எமது முகாமிற்கு வந்து செல்வதுண்டு. துருவித் துருவிக் கேள்விகள் கேட்பதும் எல்லாவற்றையும் அவதானமாக நோட்டமிடுவதும் எல்லோருக்கும் தெரியும்.

அவரது ஆழமான கேள்விகளுக்குச் சொல்லப்படும் பதில், அவதானிக்கப்படும் விடயங்கள் யாவும் தலைவர் அவர்களுக்கு அப்படியே போய்விடும் என்பதும் எல்லோருக்கும் தெரிந்ததே.

இலங்கை இராணுவத்தினருடனான மோதல்கள் முற்றுப்பெற்றுச் சில காலமே ஆகியிருந்தது. அச்சண்டைகளை அப்போதும் மறக்கமுடிய வில்லை. இலங்கை இராணுவம் வேவுச் செயற்பாட்டிற்கு 'அவ்ரோ' விமானத்தையும் பயன்படுத்தியது.

சங்கரண்ணை முகாமிற்கு வந்துவிட்டால், 'அவ்ரோ' கிசு கிசு எனச் செய்தி பரவும். தடயம் அழிப்பவர்கள் தடயம் அழிப்பார்கள். வெட்டையில் உடுப்பைக் காயப்போட்டவர்கள் தூக்கிக்கொண்டு ஓடி வருவார்கள். தண்ணீர் கொதிக்க வைப்பவர் மூசிமூசி எரிப்பார். அடுப்படியில் நிற்பவர் புகைவராமற் பார்த்துக்கொள்வார். இவ்வாறாக முகாமே உசார் நிலையை அடைந்துவிடும்.

சிறு கொட்டில் ஒன்று போடப்பட்டுக் கூரை வேய்தல் வேலை இடம்பெற்றுக்கொண்டிருந்தது. கூரை வேய்தலில் ஈடுபட்டவர்களுக்கு 'அவ்ரோ' தகவல் வந்துவிட்டது.

கொட்டிலடிக்கு நானும் சிலரும் சென்றோம். கூரையில் நின்றவர் எம்மை எச்சரிக்கும் நோக்குடன் " 'அவ்ரோ' நடமாட்டம் இருக்கு" என்றார். 'இரகசிய' நகர்வுமூலம் சங்கரண்ணை கொட்டிலினுள் வந்திருப்பதை அவர் காணவில்லை.

" 'அவ்ரோ' இந்தா நிற்குது பாருங்கோ" என்றாரே.

- சூட்டி நொய்லின் -
முன்னாட் போராளி

# திசைதிருப்பற் கதைகள்

தற்போதைய சூழ்நிலை அப்போது இல்லை. தற்போது பரந்த பிரதேசம் எமது பூரண கட்டுப்பாட்டில் இருக்கிறது. பல்வேறு வசதிகள் படைத்த பல்வேறு முகாம்கள், பல இடங்களிற் குறிப்பிட்ட பயிற்சியிற் சம்பந்தப்பட்டவரைத் தனிமைப்படுத்தி வைத்திருக்கப் போதிய இடவசதி, பயிற்சிகள், தயார்ப்படுத்தல்கள், ஒத்திகைகள், சம்பந்தப்பட்டவர்களைத் தவிர வேறு எவருக்கும் தெரியாதபடி செய்யக்கூடிய வாய்ப்புகள் எல்லாமே இருக்கின்றன.

அன்றோ நிலைமை வேறு. இந்திய இராணுவச் செயற்பாட்டால் தலைவர் அவர்களைச் சூழ்ந்த பிரதேசங்களிலேயே எல்லாப் பிரதான செயற்பாடுகளும் அமைந்தன. எத்தயார்ப்படுத்தலாக இருந்தாலும் சரி, எப்பயிற்சியாக இருந்தாலும் சரி, எச்சந்திப்பாக இருந்தாலும் சரி பலரது பார்வைக்கு உட்பட்டுவிடும்.

இச்சூழலில் இரகசியத்தைக் காப்பது சிக்கல் நிறைந்ததாகக் காணப்பட்டது. தலைவர் அவர்களின் செயற்பாட்டு வெற்றி, இரகசியப் பாதுகாப்பிலேயே பெரிதும் தங்கி இருந்து வருகிறது. அதனால் அக் காலப்பகுதியிலும் இரகசியப் பாதுகாப்பில் தலைவர் அவர்கள் பெரிதும் கவனமெடுத்தார். இதற்கு உறுதுணையாகச் செயற்பட்டவர் சங்கரண்ணை.

இரகசியங்கள் கசியாவண்ணம் ஏற்பாடுகளை மேற்கொண்ட போதும் சிலரின் சில ஊகங்கள் கசிவுக்கு வழிசெய்துவிடும். இதைத் தவிர்ப்பதற்குத் தலைவர் அவர்களும் அவருடன் இருந்த சங்கரண்ணை அவர்களும் திசைதிருப்பற் கதைகளைத் தயார்செய்வார்கள்.

திசைதிருப்பற் கதைகளை முன்னின்று பரப்புபவர் சங்கரண்ணையே. திசைதிருப்பற் கதைகள் அன்றைய காலகட்டத்தில் இரகசியப் பேணுகைக்குப் பெரிதும் உதவின.

*- மா. சீத்தா (விசாலி) -*
*புலனாய்வுத்துறை*

# கீறிக் கிழிக்க முடியாது

காடுகளும் அவற்றையண்டிய சிறு கிராமங்களுந்தான் - எமது நடமாட்டப் பிரதேசங்கள். காட்டின் எல்லைப்புறத்தே அமைந்திருக்கும் சிறு குடிசைகளிற்றான் புலிகளின் பிரதான தொடர்பாளர்கள் இருந்தனர். மக்கள் நடமாட்டப் பிரதேசங்களுக்குள் நாம் பிரவேசிப்பதாயின் இக்குடிசைகளின் சைகைகளே எமக்கு வழிகாட்டிகளாயின.

கிணற்றடியில் கப்பி தொங்கவிடப்பட்டிருக்கும். கட்டையில் வெள்ளை உடை தொங்கினால் இந்திய இராணுவ நடமாட்டம் உள்ளதை எடுத்துக்காட்டும். நிற உடை தொங்கினால் எதுவிதப் பிரச்சினையும் இல்லை. இது ஒருவகைச் சைகை. காட்டை அண்டிய தோட்டத்தில் வெருளியின் கையில் வெள்ளைத் துண்டெனில் பிரச்சினை இல்லை. இப்படிப் பல்வேறு சைகைகள்.

புலிப்போராளிகள் பாதுகாப்பாக மக்கள் நடமாட்டப் பிரதேசங்களினுள் பிரவேசிப்பதிலும் வேண்டிய உணவுப் பொருட்களைக் கொள்வனவு செய்வதிலும் இந்தச் சிறு குடிசை வாசிகளின் பங்கு ஒரு வரலாற்றுப் பங்களிப்பே.

இச்சிறு குடிசைவாசிகளின் உதவியுடன் கிராமங்களுக்கு மட்டுமல்ல பெரிய நகர்களுக்கே சென்றுவரவேண்டிய பணிகள் இருந்தன. சைகைகளும் குறிகளும் என்னைக் காட்டை அண்டிய மக்கள் நடமாட்டப் பகுதிகளுக்குட் பிரவேசிக்க வைக்கும். அக்குறியீடுகள், சைகைகளை அறிந்து என்னைக் கானகத்திலிருந்து வெளியனுப்பி வைக்கும் பொறுப்பு சங்கரண்ணையுடையதே.

நான் ஏன் வெளியே சென்று வருகிறேன் என்பது ஏனைய போராளிகளுக்குத் தெரியக்கூடாத விடயம். பல அணிகளைத் தாண்டிச் செல்லவேண்டும். அவர்களைச் சமாளிக்கும் பொறுப்பு சங்கரண்ணையுடையது. மறைப்புக் கதைகள் கூறுவது அவருக்கே உரிய கைவந்த கலை. நானும் கூடவே நிற்பேன். கேட்பவர்களுக்கு அவர் கூறும்

கதை அடக்க முடியாத சிரிப்பை எனக்குக் கொண்டுவரும். ஆனால் அதை அடக்கிக்கொண்டு அவர் சொல்வதை ஆமோதிக்கும் ஒரு சிரிப்பை உதிர்ப்பேன்.

ஒருமுறை மருத்துவ ஆலோசனை. அடுத்தமுறை மருத்துவப் பரிசோதனை. பின்பு சத்திர சிகிச்சை எனக் கேட்பவர்கள் கீறிக் கிழிக்க முடியாதபடியான பதில்கள்.

- ம. அனோஜி -
முன்னாள் போராளி



# தேசவிரோதிகள்

அப்போது வடகிழக்கு மாகாண சபையின் ஆட்சியிலிருந்த ஈ.ம.பு.வி. முன்னணியினர் EPRLF "தன்னார்வத் தொண்டர்படை" (VOLUNTEER FORCE) என்ற பெயரில் இந்திய இராணுவத்தின் ஆதரவோடு தமிழ் இளைஞர்களைக் கட்டாயப்படுத்திப் பிடித்துச்சென்று படையொன்றை உருவாக்கினர். போலியான தமிழீழத் தனியரசுப் பிரகடனமும் பொம்மையாட்சியும் தமிழ்த் தேசியத்தைக் களங்கப்படுத்தின.

EPRLF இன் படைகளின் அடாவடித்தனங்களுக்கு எதிராக மக்களின் ஒன்றுபட்ட ஆதரவுடன் புலிகள் தாக்குதலைத் தொடுத்தனர். தமிழீழத்தின் பல்வேறு பகுதிகளிலும் தேசவிரோதிகளுக்கெதிரான நடவடிக் கைகள் தீவிரமடைந்தன. சண்டையின்போது கைதுசெய்யப்பட்டவர்களும் சரணடைந்தோரும் தேச நலனைக் கருத்திற்கொண்டு தேவைப்படும் தக வல்களைப் பெறுவதற்காகத் தடுத்துவைக்கப்பட்டனர்.

தடுத்து வைக்கப்பட்டவர்களிடமிருந்து தகவல்களைப் பெறும் பணி சங்கரண்ணையின் கண்காணிப்பின்கீழ் நடைபெற்றது. சங்கரண்ணை மதி நுட்பத்துடனும் தந்திரத்தோடும் மிகச் சாதுரியமாகப் பயனுள்ள பல தரவுகளைப் பெற்றார். எமது விடுதலைப் போருக்கு ஏற்படவிருந்த மிகப்பெரிய பின்னடைவு சங்கரண்ணையின் தரவுகளால் தடுக்கப்பட்டது. சமூக விரோதப் படையின் கட்டமைப்பு ஆணிவேருடன் பிடுங்கி எறியப்பட்டது.

*- பிருந்தன் -*
*படைய அறிவியற் கல்லூரி*

# கமீட்டுடன்

இந்திய இராணுவத்தை நாட்டிலிருந்து வெளியேற்றுவேன் என்ற வாக்குறுதியை முன்வைத்துப் பிரேமதாஸா ஜனாதிபதி தேர்தலில் வெற்றி பெற்றார். இந்திய அரசியலில் ஏற்பட்ட மாற்றத்தால் வி.பி.சிங் இந்திய பிரதமரானமை பிரேமதாஸாவிற்கு வாய்ப்பாக அமைந்தது. இந்திய இராணுவம் வெளியேறத் தொடங்கியது.

விடுதலைப் புலிகளுடன் பிரேமதாஸா அரசு பேச்சுக்களைத் தொடங்கியது. மணலாற்றுப் பகுதியில் இலங்கை இராணுவ உலங்கு வானூர்திகள் தரையிறங்கின. விடுதலைப் புலிப் பிரதிநிதிகள் பேசுவதற் காகக் கொழும்பு சென்றனர். பேச்சு நடந்த காலத்திற் சங்கரண்ணையும் கொழும்பில் தங்கியிருந்தார்.

இந்திய இராணுவம் தமிழீழ மண்ணிலிருந்து வெளியேறிய பின் யாழ்க் குடாநாடு மீண்டும் புலிகளின் பூரண கட்டுப்பாட்டில் வந்தது.

பிரேமதாஸா அரசுடனான பேச்சின்போது சிறிலங்காவின் அரசப் பிரதிநிதியாக ஏ.சீ.எஸ். கமீட் யாழ்ப்பாணம் வருகிறார். அவர் தங்கியி ருந்த வீட்டுக்குச் சென்ற சங்கரண்ணை தலைவரைச் சந்திப்பதற்கு அவரை அழைக்கிறார். தலைவரின் அழைப்பாற் கமீட் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறார். சங்கரண்ணை சாதுரியமாகப் பாதுகாப்புச் சோதனைகளை முடித்துவிட்டுக் கமீட்டைத் தலைவரிடம் அழைத்துச் சென்றார்.

தலைவரை நேரிற்கண்ட சிறிலங்காவின் முதலாவது அரச உயர் பீடப் பிரதிநிதி கமீட் மகிழ்ச்சியோடு தமது பேச்சுக்களைத் தொடர்ந்தார்.

- மலரவன் (ஆனந்) -
தலைமைச் செயலகம்

# ஆளுமை

வன்னியின் கேந்திர முக்கியத்துவம்வாய்ந்த மையப்பகுதி மாங் குளம். அங்கிருந்த சிங்களப் படைத்தளம் 1990 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் முற்றாக அழிக்கப்பட்டு, அந்நகர் விடுதலைப் புலி களின் கட்டுப்பாட்டிற் கொண்டுவரப்பட்டது.

வெற்றிக்களிப்பிலிருந்த அவ்வேளை அந்நிய மருத்துவர் இருவர் புலிகளின் மருத்துவ ஒழுங்குகளைப் பார்வையிட வருகை தந்தனர். மருத்துவ ஒழுங்கமைப்புகளை முழுமையாகக் காட்டவும் முடியாது. செயற்பாட்டின் உச்சக்கட்டத்தைக் காட்டவும் வேண்டும்.

மணலாற்றுப் பகுதியில் அமைக்கப்பட்டு வந்த மருத்துவ நிலை யம் ஒன்றைக் காட்டும்படி பணிக்கப்பட்ட நாம் யாழ்ப்பாணத்திலிருந்து புறப்பட்டோம். மாங்குள முகாம் தகர்ப்பிற் பங்கேற்று விழுப்புண்ண டைந்து தேறிவரும் போராளிகள் தங்கியுள்ள முகாமொன்றைக் காட்டி விட்டு மணலாறு சென்றோம்.

நாயாற்றுப் பாலத்தை அடைந்தவுடன் எம்மை அழைத்து வந்த போராளி சங்கரண்ணையுடன் தொடர்பை ஏற்படுத்துகிறார். நீண்ட நேரத் தொலைத்தொடர்பு உரையாடல். அதிகாலை ஐந்து மணிக்கு உழவு இயந்திரம் வருமெனவும் நாயாற்றிலேயே தங்கும்படியும் சங்கரண்ணை தெரிவிக்கிறார்.

சரியாக அதிகாலை ஐந்து மணிக்கு உழவு இயந்திரம் வருகிறது. மழையினால் வெள்ளக்காடாகக் காணப்பட்ட பரப்பை ஊடறுத்துச் சென் றது உழவு இயந்திரம். வெள்ளம் தணிந்த பகுதியை அடைந்ததும் எமக்காகக் காத்திருந்த 'பிக்கப்' ஊர்தி எம்மைச் சுமந்துகொண்டு சங்க ரண்ணை இருந்த முகாமை அடைந்தது.

வழமையான சிரிப்புடன் எம்மை உற்சாகமாக வரவேற்றார் சங்க ரண்ணை. அம்முகாமில் அன்றைய இரவைக் கழித்தோம். சோவெனப் பெய்துகொண்டே இருந்தது மழை. இரவு முழுவதும் மழை. விடிந்ததும் தணிந்துகொண்டது.

எல்லோரையும் தயாராகுமாறு தெரிவித்தார் சங்கரண்ணை. மழைக்கவசம் எல்லோருக்கும் வழங்கப்பட்டது. ஓர் அறிவுறுத்தல் வகுப்பையே நடத்தினார். காட்டை ஊடறுத்துத் திசைகாட்டியின் உதவியுடன் நடந்தே செல்லவேண்டும் எனவும் ஒரு மணிநேரம் நடக்கவேண்டும் எனவும் தான் முன்னாற் செல்வதாகவும் தனது காலடியைப் பார்த்து ஒருவரின் பின் ஒருவராக மெதுவாக வரும்படியும் காலடிகளை மாற்றி வைக்க வேண்டாம் எனவும் மிதிவெடிகள் உள்ள ஆபத்தான பகுதி எனவும் விளக்கிக் கூறினார்.

உண்மையிலேயே பயந்துவிட்டேன். எம்முடன் வந்தவர்களுக்கு ஏதாவது நடந்துவிட்டால்... கடுமையாக யோசித்தேன். எங்களுடன் வந்த மணலாற்றைத் தெரிந்த போராளியிடம் விடயத்தைக் கூறினேன். அவர் மெதுவாகவே கூறினார். "இது சங்கரண்ணையின் விளையாட்டு. போகுமிடத்திற்கு ஒழுங்கான வாகனப் பாதையே இருக்கு" எனக்குச் சங்கரண்ணையின் செயல் பளிச்சிட்டுக்கொண்டது.

பேசாமற் சங்கரண்ணையைத் தொடர்ந்தோம். வருகை தந்த இருவரும் சங்கரண்ணையின் அடிகளைத் தேடித் தேடி அவதானமாகத் தமது பாதங்களை வைத்து நடந்ததைப் பார்த்தபோது எமக்குச் சிரிப்பு வந்தது. சிரமப்பட்டு அடக்கிக்கொண்டோம்.

எச்சரிக்கை உணர்வு இரகசிய இடத்தைப் பாதுகாக்கும் என்பது உறுதி. அதேவேளை வந்தவர்கள் மனம் கோணாமல் நடந்துகொண்ட விதம், அவரின் ஆளுமையைப் பிரதிபலித்தது.

*- க.சாந்தி -*
*மருத்துவப் பிரிவு,*
*அரசியற்றுறை*

# விழித்திருக்கும் காதுகள்

தொடர்ந்து பல மணி நேரம் ஒரே இருக்கையில் அமர்ந்து எழுதும் பணி பல நாட்களாகவே நடந்தது.

வேலையின் பல விடயங்கள் குறித்தும் அடிக்கடி சங்கரண்ணை யைக் கேட்கவேண்டும்.

தன்னைத் தேடி வராமலிருக்க, தானே அருகில் நாற்காலியைப் போட்டு இருந்துகொண்டார்.

எங்களது வேலையை வேகப்படுத்த, அடிக்கடி கேள்விகள் கேட்டு வேலையின் போக்கை நெறிப்படுத்த அருகிலேயே இருந்துகொண்டார். எங்களால் எங்கும் அசைய முடியவில்லை. சங்கரண்ணையைத் தூக்கம் பற்றிக்கொண்டது. அவரின் தூக்க "இசையை" கேட்டபடியே எமது வேலைகளைத் தொடர்ந்தோம்.

சாப்பாட்டிற்கான மணி ஒலித்தது. சங்கரண்ணையின் தூக்கத் தைத் தட்டியதாகத் தெரியவில்லை. இருந்திருந்து பார்த்தோம். தூக் கம் தொடர்ந்தது. எனக்கோ வயிற்றைக் கிள்ளியது பசி. போவோமா? வேலை செய்துகொண்டிருந்த மற்றைய போராளியைச் சைகையாற் கேட் டேன். சங்கரண்ணையைச் சுட்டிக்காட்டிச் சைகையால், "ஆளை என்ன செய்வது?" என்றான். "விட்டிட்டுப் போவோம்" என்றேன். "சரியில்லை" என்றான். சிரித்துவிட்டு அமைதியாக இருந்துவிட்டோம்.

வேலையைத் தொடர்ந்தோம். சற்று நேரம் செல்ல விழித்துக் கொண்டார் சங்கரண்ணை. "சாப்பாட்டு மணி அடித்து விட்டதா?" கேட்டார். "ஆம்" என்றோம்.

மூவரும் சாப்பாட்டு அறையை அடைந்தோம். அவரவருக்குரிய சாப்பாட்டுத் தட்டை எடுத்துச் சென்று சுத்தம் செய்தோம். உணவைப் போட்டு இருக்கைகளில் அமர்ந்தோம். எனக்கு நேர்முன்னால் உள்ள இருக்கையிற் சங்கரண்ணை.

சாப்பிட ஆரம்பித்து விட்டோம். சற்று நேரத்தில் என்னைப் பார்த்துச் சிரித்தார். ஏதோ மாட்டிவிட்டேன் என்பது மட்டும் விளங்கியது.

"என்னை விட்டிட்டுச் சாப்பிட வர இருந்தனிதானே?' சங்கரண்ணை கேட்டார். எனக்குப் பலத்த ஆச்சரியம். கூட இருந்து வேலை செய்தவனைப் பார்த்தேன். மீண்டும் சிரித்தோம்.

"ஒவ்வொருவரையும் இப்படித்தான் மதிப்பிடுகிறேன்" என்றார் சங்கரண்ணை.

என் தவறு என்னைச் சுட்டது.

*- இனியவன் -*
*முன்னாள் போராளி*

# பீச் கிறாப்ட்

கண்ணுக்கெட்டிய தூரத்தில், அழகிய விரிப்புப் போல வெண் மணற்றரை. அதில் பட்டுத்தெறிக்கும் சூரியக் கதிர்கள் எமது தோட்டத் தின் தென்னோலைகளைப் பளபளக்க வைத்தன.

சோலையான தென்னை மரங்கள், இயற்கையான நிழல், கடலலை களில் தவழ்ந்துவரும் குளிர்ந்த காற்று இவைதான் எமது தங்குமிடத்தின் அணிகலன்கள்.

கடற்காற்று வயிற்றுப் பசிமூலம் நேரத்தை உணர்த்திவிடும். கையில் தட்டுடன் எல்லோரும் செல்கிறோம். வழமைபோல சங் கரண்ணையும் “எனக்கு இண்டைக்கு சரியாப் பசிக்குது” வயிற்றைத் தடவியபடி, எல்லோரையும் விலத்தி முன்செல்கிறார்.

தட்டுகளிற் சோறு போடப்படுகிறது. பூசணிக்காய்க் கறி “இது தான் வழங்கல்” போடுபவர் சொல்கிறார். “கத்தரிக்காய்க் குழம்பு, பயற்றை வெள்ளைக்கறி இது தோட்டத்தான்” தொடர்ந்தார் போடுபவர்.

பசி. அவசர அவசரமாகச் சோற்றைப் பிசைகிறார் சங்கரண்ணை. முதல் உருண்டை வாய்க்குள் அனுப்பப்படுகிறது.

ம்... ம்... ம்... ஆகாயத்தில் சத்தம் கேட்கிறது. தூரத்தில் “பீச் கிறாப்ட்” (வேவு விமானம்) வட்டமிடுகிறது. மிக உயரத்தில் இருந்து நுண்ணிய வேவுத்தரவுகளைப் பெறக்கூடியது.

பிசைந்த கையை உடனேயே நீருற்றிக் கழுவுகிறார். சட்டைப் பையினின்றும் திசைகாட்டி வெளிக்கொணரப்படுகிறது. வேவு விமானத் தின் திசை நோக்கெடுக்கப்படுகிறது. பசி போய்விட்டது போல் நின்று யோசிக்கிறார்.

- குழல்வாணன் -
சிறப்புப் படையணி

# யூ.ஏ.வீ.

கடற்கரைக் காற்றை எப்பவும் உணரமுடியும். தென்னோலைகளின் சலசலப்பு காற்றின் வேகத்தைக் குறித்து நிற்கும்.

தோட்டத்தில் தொட்டந்தொட்டமாகத் தகரக் கொட்டகைகள் உள்ளன. ஊர்திகள், உந்துருளிகள் நிறுத்தும் கொட்டகை சங்கரண்ணையின் நூற்றி எண்பது பாகைப் பார்வையிலேயே உள்ளது.

இதைத் தாண்டித்தான் எவரும் வெளிச்செல்ல முடியும். செல்பவரின் கண்களில் முதலிற்படுபவை கவனத்தை ஈர்க்கும் வகையிற் தடித்த எழுத்துகளில் எழுதப்பட்ட U.A.V என்ற ஆங்கில எழுத்துக்கள்.

இறுதிக் கொட்டகையான ஊர்திக் கொட்டகையில் இருந்து பல மீற்றர் தூரத்தில் முகாமின் வாயில் இருந்தது.

அங்கும் அதே எச்சரிக்கை எழுத்துக்கள். யூ.ஏ.வீ. அதாவது மனிதன் இன்றி இயங்கும் வேவு விமானத்தின் ஆங்கில விரிப்பின் முதல் எழுத்துக்கள்தான் யூ.ஏ.வீ.

முகாமினுள் வருபவர்களாயினும் சரி, முகாமில் நின்று புறப்படுபவர்களாயினும் சரி இந்த அறிவிப்புத் தகரத்திற்கு ஒரு நிமிட மௌன வணக்கம் செலுத்தியே ஆகவேண்டும்.

உந்துருளி எனினும் சரி, ஊர்தி எனினும் சரி எவ்வாறான அவசரமெனினும் ஒரு நிமிடம் நிறுத்தி யூ.ஏ.வீ. ரீங்காரத்தை அவதானித்த பின்தான் நகர முடியும்.

இதை எங்கள் யூ.ஏ.வீ. உம் அவதானிக்கத் தவறுவதில்லை.

- *குழல்வாணன்* -

*சிறப்புப் படையணி*

# கறந்துவிட்டார்

சங்கரண்ணையின் படையணியிலிருந்து வேறு ஒரு படையணிக்கு விசேட பணிக்காகச் சென்று இரண்டு மாதங்கள் பணியாற்றிவிட்டு மீண்டும் சங்கரண்ணையின் முகாமிற்குத் திரும்பினேன்.

கடந்த இரு மாதங்களோ நீண்ட நடை, காடு, மேடுகள்... களைப்பு இல்லாத நேரமே இல்லை. நடப்பதற்கு நேர காலம் இல்லை. குளிப்பது எப்போது என்று தெரியாது.

எனது பணியைப் பொறுப்பேற்கும் எமது பிரிவுப் போராளி வருகிறார். எனது பணி விடயங்களை ஒப்படைக்கிறேன். பணியின் கடுமையைக் கூறுகிறேன். காலணிகள் பிய்ந்துவிட்டன. சீருடை கிழிந்துவிட்டது. அவற்றை வீசிவிட்டேன் என்று விபரிக்கிறேன்.

"நீ தொலைந்தாய்" வந்த போராளி சொல்கிறார். "கிழிந்தாலும் பிய்ந்தாலும் அந்தாளிட்டைக் காட்டாமல் ஏன் எறிஞ்சனி" வந்தவர் தொடர்ந்தார்.

பய உணர்வு தொற்றிக்கொள்கிறது. யோசனையுடன் முகாமை நோக்கிய எனது பயணம் தொடர்ந்தது.

பகலில் இரை தேடும் பறவைகள் தமது உறைவிடத்தை அடைந்து கூடிக்குலாவிக் குரலெழுப்பி ஓய்ந்த நேரம்.

இரவில் இரை தேடுபவை முற்றாக இருள் கவ்வாததால் பொறுமையாகத் தமது மறைவிடத்தில் காத்திருக்கின்றன.

கானக முகாமினுள் கால் வைக்கிறேன். முன் குடிசை. சங்கரண்ணையை அவரது இருக்கையிற் கண்டவுடன் நெஞ்சு திக்கென்றது. உடலெல்லாம் பயத்தின் அறிகுறி எழுந்தது.

என்னைக் கூப்பிட்டார். "வா மோனை எங்களை மறந்திட்டாய் போலை" எனக் கூப்பிட்டுக்கொண்டே எழும்பிவந்து எனது தோள்களில் தட்டியபடி அழைத்துச் சென்றார். "இரு மோனை கதைப்போம்" இருக் கையைக் காட்டி அமரச் சொன்னார்.

எல்லாம் குழம்பப் போகுது என நினைத்தேன். "குளிக்கேல்லை அண்ணை" என இழுத்தேன். "பரவாயில்லை மோனை கொஞ்சம் இரு கதைச்சிட்டுப்போய் குளி" சிரிச்சுக்கொண்டே சொன்னார்.

"நல்ல கஸ்ரமாய் இருந்திருக்குமே. உடுப்பெல்லாம் போட்டடிச் சுப் பழுதாகி இருக்குமே" சங்கரண்ணை கேட்டார். "மாட்டியாச்சுது" நினைத்துக்கொண்டேன். உண்மையைச் சொல்லுவம் என நினைத்தேன்.

"பழுதாய்ப் போய் அண்ணை எறிஞ்சுபோட்டன்" சொல்லி முடிக்கு முன் "பரவாயில்லை எல்லாம் நீற் பண்ணுவம்" அவரது பதில். அப்பாடா என் நெஞ்சம் குளிர்ந்தது.

தொடர்ந்தன அவரது நுணுக்கமான கேள்விகள். "பொறுப்பாளர் எப்படி? பொடியளோடை என்ன மாதிரி? சாப்பாடு எப்படி? என்னமாதிரி பொடியள் வேலையைக் கவனமாகச் செய்யிறாங்களோ?" என் பதிலுக்குப் பல குறுக்குக் கேள்விகள் எழுந்தன.

முழுமையாகவே என்னிடம் இருந்து கறந்துகொண்டார்.

- குழல்வாணன் -
சிறப்புப் படையணி

# ஏமாற்று

காட்டு முகாமொன்றில் இருக்கின்றார் சங்கரண்ணை. வேலைத் திட்டத்திற்காக அவரை எதிர்பார்த்து வேறு முகாமிற் பொறுப்பாளர் ஒருவர் காத்திருக்கிறார். சங்கரண்ணை கடக்கவேண்டிய பாதை அன்றைய நிலையிற் பாதுகாப்பற்றது. எதிர்பார்த்திருப்பவர் தொலைத் தொடர்புமூலம் காத்திருப்பதை அறியக் கொடுக்கிறார். தொலைத் தொடர்பின் மறுமுனையில் இருந்த சங்கரண்ணை சற்றுக் காலதாமத மாகித் தனது சங்கேதப் பெயரைக் குறிப்பிட்டு அன்று நேரிற் சந்திப்பார் என்கிறார். தொலைத்தொடர்பு உரையாடல் முடிவடைகின்றது. ஆனால் அன்று முகாமிலிருந்து புறப்படவில்லை.

எதிர்பார்த்திருப்பவர் அடுத்த நாள் மீண்டும் சந்திப்புப் பற்றிக் கேட்கிறார். சங்கரண்ணையே தொலைத்தொடர்பு சாதனத்தில் தனது சங்கேதப் பெயரைக் குறிப்பிட்டு அவர் வருவதில் தாமதமாகும் என்பது டன், இப்போதைக்குச் சந்திக்கமாட்டார் என்றும் கூறுகிறார். அத்துடன் தனது முகாமில் நிற்பவர் ஒருவரின் சங்கேதப் பெயரைக்கூறி அவரிடம் கடிதம் கொடுத்து அனுப்பியுள்ளதாகவும் அதில் குறிப்பிட்டுள்ளபடி செயற் படும்படியும் தொலைத்தொடர்பை எடுத்தவரிடம் கூறுகிறார். உண்மையில் அப்படி எவரிடமும் கடிதம்கொடுத்து அனுப்பவில்லை.

இத்தொலைத்தொடர்பு உரையாடல் முடிந்த சில மணி நேரத்தில் அவரது ஊர்தி தயாராக்கப்படுகிறது. ஒன்றன்பின் ஒன்றாகப் பொருட்கள் ஏற்றப்படுகின்றன. பாரவூர்தி அல்ல, 'பாத் பைண்டர்'. பாரவூர்திக் குரிய சுமைகளின் அளவு என்று சொல்லலாம். உறுமிக்கொண்டு கிளம் பியது வாகனம். கரடுமுரடான பாதை, நீர் அரித்தோடிய பள்ளங்கள், கிடங்குகள், கிரவற்பிட்டிகள், மணற்றரைகள் என எல்லாவற்றையும் கடந்துசென்றன ஊர்தியின் சில்லுகள்.

மக்கள் நடமாட்டமுள்ள பகுதியுள் சென்றது ஊர்தி. ஒழுங்கை கள், பிரதான வீதிகள் எனப் பல பாதைகளையும் கடந்து செல்ல வேண்டிய முகாமை அது அடைந்தது.

சங்கரண்ணை முதல் நின்ற முகா்மிலிருந்து ஒருவர் வருவார்; சங்கரண்ணையின் கடிதம் வரும் என எதிர்பார்த்திருந்தவர்களுக்கு முன்னாற் சங்கரண்ணை நின்றார்.

"எல்லாம் ஒரு 'டைவேட்' (Divert) தான். வோக்கியிலை எல்லாம் கதைக்கக்கூடாது" என்று தொடங்கினார் சங்கரண்ணை.

- சி. ஈழவன்
முன்னாட் போராளி



# ஊடுருவல் முறியடிப்பு

சங்கரண்ணையின் வீரச்சாவிற்குச் சில நாட்களுக்கு முன் காட்டிற் பயிற்சி ஒன்றில் ஈடுபட்டிருந்த எமது படையணிப் பெண் போராளிகள் சங்கரண்ணையின் விசேட முகாமொன்றிற்குப் பாதைமாறிச் சென்றுவிட் டார்கள். அங்கு நின்ற போராளிகளால் விடயம் சங்கரண்ணைக்குத் தெரியப்படுத்தப்பட்டது. அவர்கள் எமது படையணியைச் சேர்ந்தவர்களா என்பதைத் தொலைத்தொடர்புமூலம் உறுதிசெய்துகொண்டபின், திசை மாறி வந்த பெண் போராளிகளுக்கு உணவு, தேநீர் என்பவற்றைக் கொடுத்து அனுப்பி வைக்கும்படி தனது முகாமிற்கு அறிவுறுத்தல் வழங் கினார்.

சிறிது நேரம் கழித்து ஒரு வரைபடத்துடன் எமது முகாமிற்கு வந்தார். தனது முகாம் அமைந்துள்ள பகுதியைக் காட்டியதுடன் எவ் வாறு தனது முகாம் பகுதியைத் தவிர்த்து நாம் பயிற்சியை மேற்கொள்ள முடியும் என்பதை விளக்கினார். காட்டுப் பயிற்சி பற்றியும் ஒரு நீண்ட தெளிவான விளக்கத்தை வழங்கினார்.

காட்டுடன் பழகுவது, காட்டைப் பாதுகாப்பது, காட்டு நகர்வு, காட்டில் தப்பிப்பிழைத்தல் நடைமுறை எனப் பல்வேறு விடயங்களைக் குறிப்பிட்டு, அவற்றில் எமது அணிப் போராளிகள் தேர்ச்சிபெறத் தானும் அவ்வணியினருக்குத் தனது உதவிகளை வழங்குவதாகவும் வகுப்புகள் எடுப்பதாகவும் உறுதியளித்தார்.

எமது காட்டுப் பிரதேசத்தில் எதிரியின் ஊடுருவல் அணியினரின் நடமாட்டங்கள் காணப்பட்ட காலப்பகுதி அது. காட்டின் பல பகுதிகளில் எதிரியின் தடயங்கள் அவதானிக்கப்பட்டன. இவ்விடயம் குறித்தும் சங்கரண்ணையின் பேச்சு வந்தது. அப்பொழுது, காடுகளிற் புலி உறுப் பினர்களின் நகர்வு அணிகள் திட்டமிட்ட முறையில் நகர்த்தப்படவேண் டும் என்றார். இவ்விடயம் குறித்துத் தலைவர் அவர்களுடன் தான் பேசிய தாகவும் தனக்குச் சில 'செக்சன்' புலி உறுப்பினர்கள் தரப்பட்டால் ஊடுருவலை முறியடிக்கமுடியும் எனக்

கூறியதாகவும் சொன்னார். தலை வரின் வேலை ஒன்றில் தான் ஈடுபட்டிருப்பதால் அதை முடித்தபின்பு ஊடுருவல் முறியடிப்பில் ஈடுபடப் போவதாகவும் தெரிவித்தார்.

இவ்வாறான எண்ண அலைகளுடன் நடமாடிய சங்கரண்ணை, ஊடுருவல் முறியடிப்புச் செயற்பாட்டில் தனது கால்களைப் பதிக்கு முன்னரே...

- விதுஷா -
சிறப்புத் தளபதி
மாலதி படையணி



# கடற்புலியாக...

சங்கரண்ணை எங்கிருந்தாலும் எவ்வேலைத்திட்டத்திற் பணியாற்றினாலும் கடற்புலிகளின் செயற்பாடுகள் பெரும்பாலானவற்றில் அவரின் பங்கு அவ்வப்போது இருக்கும்.

விடுதலைப் புலிகளின் கடற்செயற்பாடுகளின் ஆரம்பத்திற் சங்கரண்ணையின் பங்கு கணிசமாக இருந்தது மட்டுமல்லாது கடற்புலிகள் என்ற கட்டுமானத்திலும் அவரின் பங்கு குறிப்பிடத்தக்கதாகவே இருந்தது.

கடற்செயற்பாட்டுக்கான புலியணிகள் உருவாக்கப்பட்டு அக்கட்டமைப்பிற்கான பெயர் சூட்டும் நிகழ்வில் தலைவர் அவர்களுடன் சங்கரண் ணையும் சேர்ந்துகொண்டார். "விடுதலைப் புலிகளின் கடற்புலிகள்" என்ற வரலாற்றுப் பெயர் 1991 – 09 – 19 ஆம் நாள் விடுதலைப் புலிக ளின் கடற்படைக்குச் சூட்டப்பட்டது.

கடற்புலிகளின் செயற்பாடுகளில் அடிக்கடி கலந்துகொள்ளும் சங்கரண்ணையிடம் சந்தேகங்கள் குறித்து விளக்கம் கேட்டால் தனது வேலைகளையெல்லாம் விட்டுவிட்டு மிகவும் பொறுமையாக விளக்கம் தருவார். இவ்விளக்கங்கள் கடற்புலிகளின் படிமுறை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவின.

வீரச்சாவிற்குச் சில நாட்களுக்கு முன்புகூடக் கடற்புலிகளின் நீரடி நீச்சற் பிரிவிற்கு விசேட வகுப்புக்களை நிகழ்த்தி அப்பிரிவின் வளர்ச்சிக்கு உதவினார். கடற்பயிற்சி ஒன்று நிகழ்ந்தபோது நாள் முழுவதும் தானும் ஒருவராகக் கடலிலேயே நின்று அபிப்பிராயங்கள், ஆலோசனைகள் கூறிப் பெரிதும் உதவிய நிகழ்வு இன்றும் பசுமையாகவே உள்ளது.

சர்வதேசத்தின் பார்வையை எம்பக்கம் திருப்பிய ஓயாத அலைகள் மூன்று நடவடிக்கையும் அதன் ஒரு பகுதியான பிரசித்திபெற்ற தரையிறக்க நடவடிக்கையும் நிகழ்ந்தவேளையிற் சங்கரண்ணையால் அனுப்பி வைக்கப்பட்ட மூன்று கடிதங்கள் எமது நடவடிக்கையிற் குறிப்பிடக்கூடிய மாற்றங்களை மேற்கொண்டு வெற்றியை நோக்கிச் செல்லப் பெரிதும் உதவின.

18 – 09 – 2001 அன்று கடற்சமரில் வீரச்சாவடைந்த லெப்.கேணல் இரும்பொறையின் வித்துடல் விதைக்கப்பட்ட நாளில் அச்சமரில் ஏற்பட்ட பிரச்சினைகள் குறித்துத் துயிலுமில்லத்தில் அவரின் ஆலோசனையைக் கேட்டபோது நேரில் வந்து உதவுவதாக அவர் அளித்த வாக்குறுதி நிறைவேற முன்பே அதே துயிலுமில்லத்திற் சங்கரண்ணை வித்துடலாக விதைக்கப்பட்டுவிட்டார்.

- *தி. சூசை* -
*சிறப்புத் தளபதி*
*கடற்புலிகள்*

# சோழன்

ஒரு தேசவிடுதலைப்போர் வெற்றிப்பாதையில் நகர்த்தப்படுவதற்கு அவ்விடுதலைப் போருக்கான அடிப்படைத் தேவைகள் தொடர்ந்து நிறைவு செய்யப்பட வேண்டும்.

ஆளணி, உணவு, போக்குவரத்து வசதிகள், போர்க்கருவிகள் அவை சார்ந்த பொருட்கள் எனத் தேவைகள் விரிந்து செல்லும்.

இனப்படுகொலை, பண்பாட்டுச் சீரழிப்பு, பொருளாதாரத் தடை, இராணுவம் சார்ந்த பொருட்களுக்கான தடை போன்றன உலகிற் பல விடுதலைப் போர்களைத் தோல்வியுறச் செய்துள்ளன.

இவ்வாறான கொடுமைகளை நன்கு அலசி ஆராய்ந்த தலைவர் அவர்கள் தமிழீழத்தின் பிரதான விநியோக வழியான கடல் வளத்தை நன்கு பயன்படுத்த 1984 ஆம் ஆண்டிலேயே திட்டமிட்டார்.

சர்வதேசக் கடற்பரப்பிலிருந்து விநியோகங்களை மேற்கொள்ள வென எமக்கெனச் சொந்தமாகக் கப்பல் கொள்வனவு செய்யப்பட்டது.

கடற்செயற்பாடுகளில் வலிமைகாட்டிய சோழப்பேரரசின் நினைவாக அக்கப்பலுக்குச் "சோழன்" எனப் பெயர் சூட்டப்பட்டது. சர்வதேசக் கப்பல் நிறுவனமான "லொயிட்சிலும்" (Loyds) "சோழன்" என்ற பெயரி லேயே அக்கப்பல் பதிவு செய்யப்பட்டது.

சர்வதேசக் கடற்பரப்பிலிருந்து முதல் விநியோக வேலையை அக் கப்பல் மேற்கொண்டபோது அக்கப்பலிலிருந்து பொருட்களைப் பெற்றுக் கொள்ளவெனச் சென்ற விநியோகப் படகை வழிநடத்திச்சென்றவர் சங் கரண்ணை.

1984 ஆம் ஆண்டு நவீனகருவிகள் எதுவும் இருக்கவில்லை. இந் திய நாகபட்டினக் கரைக்குமேலாக சர்வதேசக் கடலிற் "சோழன்" நின்ற இடத்திற்குப் பெரியளவில் உயர்வலு இயந்திரங்களைக்கூடக் கொண்டிராத படகிற் சென்று பொருட்களை இறக்கியமை ஒரு சாதனையே.

இறக்கப்பட்ட பொருட்களும் நீரடிநீச்சற் பிரிவு ஒன்றைத் தொடங்கு வதற்கான பொருட்களேயாகும். இதுவும் கடற்செயற்பாடுகளுக்கு வலுச் சேர்க்கும் நோக்கம் கொண்டதே.

இவ்வகையிற் கடல்வழி விநியோகச் செயற்பாடுகளை மேற்கொள் வதில் தலைவர் அவர்கள் தூரநோக்குடன் மேற்கொண்ட நடவடிக்கை களிற் சங்கரண்ணையின் பங்கு நிறையவே இருந்து வந்துள்ளது.

- சொர்ணம் -
சிறப்புத் தளபதி
சிறப்புப் படையணி



# முதற் கடற்பயிற்சிப் பாசறை

விடுதலைப் புலிகளின் போரியல் வரலாற்றில் பல்வேறு துறை களின் அவசியம் உணரப்பட்டபோது கடல் நடவடிக்கைகளை விரிவு படுத்தத் தலைவர் எண்ணினார்.

கடலுடனான விநியோக வேலைகளை விரிவுபடுத்தவும் எதிரியின் கடற்செயற்பாடுகளை முறியடிக்கவும் திட்டமிட்டார்.

ஐந்தாவது, ஆறாவது பயிற்சிப் பாசறைகளிலிருந்து நீச்சல் தெரிந் தவர்கள், கடல் நடவடிக்கைகளில் ஆர்வமுள்ளவர்கள் எனக் கடற்பயிற் சிக்கு உகந்தவர்களைத் தானே நேரடியாகத் தெரிவு செய்தார்.

தெரிவு செய்யப்பட்டவர்கள் 1985 ஆம் ஆண்டு ஒஸ்கா பப்பா எனப் பெயரிடப்பட்ட பயிற்சிப் பாசறையில் சங்கரண்ணையின் பொறுப்பின் கீழ் தமிழ்நாட்டின் ஒதுக்குப்புறமான கடற்பரப்பில் நீரடிநீச்சற் பயிற்சி பெற்றனர்.

காரைநகர்க் கடற்பரப்பிற் பீரங்கிப் படகுகள் மீதான முதல் தாக் குதலில் வீரச்சாவடைந்த பிறின்சிஸ், சுலோஜன், கடற்புறாப் படகிற் கைதாகிப் பலாலி இராணுவ முகாமில் சயனைட் உட்கொண்டு வீரச்சா வடைந்த லெப். அன்பழகன், 2 ஆம் லெப். றெஜினோட், 2 ஆம் லெப். ஆனந்தக்குமார், லெப். தவக்குமார், எதிரி ஊடுருவி நடாத்திய கிளை மோர் தாக்குதலில் தன்னுயிர் ஈந்த லெப்.கேணல் கங்கையமரன் ஆகி யோர் சங்கரண்ணையின் முதற் கடற்பயிற்சிப் பாசறையிற் பயிற்சி பெற்ற வர்களே.

- பிருந்தன் -
படைய அறிவியற் கல்லூரி

# சுலோஜன்

நீரடிநீச்சற் பயிற்சி, சங்கரண்ணையின் மேற்பார்வையில் "கோல்டன் பீச்" சிற்கு அருகில் நடைபெற்றது.

தெரிவுசெய்யப்பட்டவர்களில் சுலோஜனும் ஒருவன் (சந்திரவேலாயுதம் கோபிதாஸ்). ஆரம்பத்தில் அடிப்படை நீச்சல்கூடத் தெரியாதவன்.

அவனது ஆர்வத்தை அவதானித்த சங்கரண்ணை தட்டிக் கொடுத்து ஊக்கப்படுத்தினார். சிறந்த நீரடிநீச்சல் வீரர்களிலொருவனாய்த் தேறினான்.

பயிற்சி நிறைவடைந்தபின் பயிற்சியின் விளைவைக் காண விரும்பினார் தலைவர். தாக்குதல் திட்டம் வகுக்கப்படுகிறது. திட்டத்தை நிறைவேற்ற சுலோஜனையும் பிறின்சிலையும் சங்கரண்ணை தெரிவுசெய்தார். சிறிலங்கா கடற்படைமீதான முதல் தாக்குதலுக்காக இருவரும் தமிழீழத்திற்கு அனுப்பப்பட்டனர்.

வட தமிழீழத்தின் பிரதான கடற்படை முகாமாகவும் கட்டளைப்பீடமாகவும் விளங்கிய காரைநகர்க் கடற்படை முகாமில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த பீரங்கிப் படகுகள் குறிவைக்கப்பட்டன.

30–10–1986 அன்று சுலோஜனும் பிறின்சிலும் திட்டமிட்டபடி தாக்குதலில் இறங்கினர். இலக்குத் தப்பியபோதும் இருவரும் வீரச்சாவடைந்தனர். சுலோஜனின் நினைவாக அவனது பெயரில் அமைக்கப்பட்ட நீரடி நீச்சற்பிரிவு பல வெற்றிகளை நிலைநாட்டியது.

*- கப்பல் ஜயர் -*
*திருகோணமலைத் தொடர்பகம்*

# கடலில் ஒரு கட்டுமானம்

இந்திய இராணுவம் தமிழீழத்தை விட்டு வெளியேறியபின் 1990 ஆம் ஆண்டு கடல் நடவடிக்கைகளுக்கான ஓர் அமைப்பை உருவாக்க வேண்டுமெனவும் படகுகள் இலகுவாகக் கரையேறக்கூடிய சிறிய துறைமுகம் ஒன்றை நிறுவவேண்டுமெனவும் தலைவர் திட்டமிட்டார். இப்பணியைச் செய்துமுடிக்கும் பொறுப்பு சங்கரண்ணையிடம் ஒப்படைக் கப்பட்டது.

உரிய இடத்தைத் தெரிவுசெய்வதற்காகப் பல இடங்களுக்கும் சென்று பார்வையிட்ட சங்கரண்ணை, இறுதியாக வல்வெட்டித்துறையில் உள்ள ஊரிக்காட்டைத் தெரிவுசெய்தார். முன்பு சிறிலங்கா இராணுவ முகாமாக இருந்த பகுதியில் துறைமுகம் அமைக்கும் பணி தொடங்கி யது.

முன்பு கடல் நடவடிக்கைகளில் ஈடுபட்டவர்களுடன் புதியவர்களும் இணைக்கப்பட்டுக் கடற்புறா என்ற பெயரில் புதிய பிரிவு உருவாக்கப் பட்டது.

கனரக டோசர் இயந்திரங்கள் கடலில் இறக்கப்பட்டுக் கடலிலி ருந்து கால்வாய் ஒன்று வெட்டப்பட்டது. இயற்கையாக அமைந்த கற் பாறைகள், கடல் அலைகளினின்றும் திருமலைத் துறைமுகத்தைக் காத்து நிற்பதுபோல், அமைக்கப்படவிருக்கும் துறைமுகத்தைக் கடலலை களினின்றும் காப்பதற்காகக் காங்கேசன்துறையிலிருந்து பெரிய கற்கள் கனரக வாகனங்களில் எடுத்துவரப்பட்டு அரண் ஒன்று அமைக்கப்பட்டது.

- கப்பல் ஐயா -
திருகோணமலைத் தொடர்பகம்

# மிகைவேகப்படகு

விடுதலைப் புலிகளின் கடல் நடவடிக்கைகள் ஆரம்பக் கட்டத்தில் இருந்தன. வேகப்படகுகளின் தேவையை உணர்ந்த தலைவர் எமது நடவடிக்கைகளில் வேகப்படகுகளை இணைக்க எண்ணினார்.

1990 ஆம் ஆண்டின் நடுப்பகுதியிற் கடல் நடவடிக்கைகளின் அடுத்த கட்ட வளர்ச்சிக்காக அதுவரையிருந்த வேகப்படகுகளிலிருந்து வேறுபட்ட, புதிய சந்ததி வேகப்படகு விடுதலைப் புலிகளின் செயற்பாட்டில் சேர்த்துக்கொள்ளப்பட்டது.

தொழினுட்ப வசதி குறைந்த அவ்வேளையில் எம்மால் மிகை வேகப்படகை ஆக்கமுடியாதிருந்ததால் அந்நிய நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டே மிகைவேகப்படகு எடுத்துவரப்பட்டது. மேஜர் ஜப்பானினால் அம்மிகைவேகப்படகு எடுத்துவரப்படும்போது தமிழீழக் கடற்பரப்பில் அதன் பாதுகாப்பிற்கெனச் சென்ற படகு ஒன்றிற் சங்கரண்ணையும் இருந்தார். மிகைவேகப்படகும் ஏனைய பாதுகாப்புப் படகுகளும் தமிழீழக் கடற்பரப்பில் வந்துகொண்டிருந்தபோது சிறிலங்காக் கடற்படையுடன் மோதல் வெடித்தது.

சங்கரண்ணையின் முழுக்கவனமும் மிகைவேகப்படகைப் பாதுகாப்பதிலேயே இருந்தது. மிகைவேகப்படகைக் கரைசேர்ப்பதற்கான பிரதேசம் ஏற்கனவே தெரிவுசெய்யப்பட்டுப் பதுங்குகுழிகள் அமைக்கப்பட்டுப் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அப்பிரதேசம் சிறிலங்கா கடற்படையின் கண்களிற் பட்டுவிடக்கூடாது எனக் கருதிய சங்கரண்ணை புதிய வியூகம் வகுத்தார். சிறிலங்கா கடற்படையைத் திசைதிருப்ப நடவடிக்கை ஒன்றை மேற்கொண்டார். தான் சென்ற படகைச் சிறிலங்கா கடற்படை நன்கு அவதானிக்கக் கூடியவாறு செய்து, வேகப்படகு கரை சேரவேண்டிய பாதுகாப்பான பகுதிக்கு அப்பால் ஏழு கிலோமீற்றர் வரை செலுத்தித் தரையிறங்கினார். அதேவேளை மிகைவேகப்படகைப் பாதுகாப்பான கரைக்குச் செல்லுமாறு பணித்தார்.

சங்கரண்ணையின் படகை இலக்காகக் கொண்ட சிங்களக் கடற் படை அதைத் தாக்கியது. கரையேறிய சங்கரண்ணை உடனடியாகப் பதுங்குகுழிகள் அமைத்து, பாதுகாப்புத் தேடியதால் எதுவித ஆபத்துமின்றித் தப்பியதுடன் மிகைவேகப்படகும் பாதுகாப்பாகக் கரையேறியது.

- கப்பல் ஐயா -
திருகோணமலைத் தொடர்பகம்



# கடற்கரும்புலிகள்

தமிழீழத்தின் அமைவிடம் கடலின் முக்கியத்துவத்தை உணர்த்தி நிற்கிறது. பொருளாதாரம், அரசியல், இராணுவக் கேந்திர முக்கியத்துவம் எனப் பல்வேறு விடயங்களுடன் பின்னிப்பிணைந்து நிற்கின்றது.

எமது போர் நடவடிக்கைகளின் ஆதாரமாக அமைவது கடல் வழி விநியோகமே. இதனை அறிந்த எதிரி கடலில் தனது போர் வலுவை அதிகரிப்பதில் அதிக அக்கறை காட்டிவந்தான்.

90 களின் தொடக்கத்திற் கடல்வழி விநியோக நடவடிக்கைகள் தொடக்க நிலையிலேயே இருந்தன. சிங்கள கடற்படையின் கண்களுக்குத் தெரியாமலேயே விநியோகம் செய்யவேண்டும். கண்ணிற்பட்டால் தப்பியோடிக் கரைதட்டவேண்டும். அப்போது கடலில் நின்று போர் புரியுமளவிற்கு விடுதலைப் புலிகள் ஆற்றல் பெற்றிருக்கவில்லை. விளைவு, கடற்பயணம் செய்த போராளிகள் எண்பது பேர்வரை வீரச் சாவைத் தழுவினர். நிலைமையைச் சீர்செய்வதற்குத் தலைவர் திட்டம் வகுத்தார். கடற்புறா என்ற பெயருடன் கடற்செயற்பாட்டு வீரர்கள் சங்கரண்ணையின் வழிநடத்தலிற் செயற்பட்டனர்.

தலைவரின் திட்டத்துக்கமைய முதற் கரும்புலித் தாக்குதலுக்கான செயற்பாடுகள் விரைவாக மேற்கொள்ளப்படுகின்றன. காந்தரூபன், வினோத், கொலின்ஸ் ஆகிய மூவரும் தற்கொடைத் தாக்குதலுக்குத் தயாராகினர்.

கட்டளைக்கப்பல் எடித்தாரா, சிங்களக் கடற்படைக்கெனச் சிங்கப்பூரிலிருந்து கொள்வனவு செய்யப்பட்டது. நவீன றேடார், தங்குமிடம், கடலிற் பல நாள் தங்கிநிற்கக்கூடிய வசதிகள் எனப் பலவசதிகளுடன்கூடிய கட்டளைக் கப்பல் அது. தமிழீழத்தின் வடகடலைக் கண்காணிப்பதே அதன் பிரதான செயற்பாடு. புலிகளின் அன்றைய பிரதான இலக்கும் அக்கப்பலே.

கப்பலைத் தாக்குவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் சங்கரண்ணை நிறைவு செய்திருந்தார். லெப்.கேணல் டேவிட் தலைமையிலான மூன்று படகுகளைக்கொண்ட சண்டையணி கடற்படைமீது தாக்குதலை மேற்கொண்டு கட்டளைக் கப்பலைத் தகர்க்கும் கரும்புலிகளுக்கு வழி ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும்.

முதற் கடற்கரும்புலித் தாக்குதலுக்கான நாள் வந்தது. தலைவர் கரும்புலிகளைச் சந்திக்கும் நிகழ்வு நிறைவுற்றது. கடற்கரும்புலிகளின் தொடக்க அத்தியாயம் சங்கரண்ணையின் மேற்பார்வையில் தொடங்கியது. சண்டையணி கடலில் இறங்கியது. வல்வெட்டித்துறை ரேவடிக் கடற்கரையிலிருந்து கடற்கரும்புலிகளின் முதற்படகு நீரைக் கிழித்துச் செல்கிறது.

வழமையான கடற்கண்காணிப்புப் பணியில் எடித்தாரா பருத்தித்துறைக் கடற்பகுதியிலிருந்து வல்வெட்டித்துறைக் கடற்பகுதியை நோக்கிக் கம்பீரமாக நகர்ந்து வந்தது. எடித்தாரா மீதான கடற்கரும்புலித் தாக்குதலுடன் கடற்கரும்புலிகளின் பதிவேடு திறக்கப்பட்டது.

- தி. சூசை
சிறப்புத் தளபதி
கடற்புலிகள்

# வெற்றிப் பயணம்

தமிழீழ விடுதலைப் போராட்ட வரலாற்றில் வடமராட்சி கிழக்கு பல திருப்புமுனைகளை ஏற்படுத்திய மண். பொங்கி எழும் அலைகளைக் கொண்ட ஆழ்கடலையும் மணல் மலைகளைக் கொண்ட கரையையும் ஒருபுறமும், கடல் நீரேரியையும் சதுப்பு நிலத்தையும் மறுபுறமும் அரணாகக் கொண்டு இயற்கை அழகு கொழிக்கும் நிலம்.

பல முக்கிய படை நடவடிக்கைகள் இங்கே நடந்துள்ளன. ஆகாயக் கடல் வெளி நடவடிக்கையின் மூலம் எமது முற்றுகைக்குள் வந்த ஆனையிறவுப் படைத்தளத்தை மீண்டும் கைப்பற்றுவதற்காகச் சிங்களப் படைகள் கட்டைக்காட்டில் தரையிறக்கப்பட்டன. வலிந்த தாக்குதல் ஒன்றின்மூலம் இதே கட்டைக்காட்டில்தான் பல புதிய ஆயுதங்களை நாம் கைப்பற்றினோம். வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஆனையிறவைப் புலிகள் கைப்பற்றிய ஓயாத அலைகள் மூன்றின் உலகப் புகழ் பெற்ற தரையிறக்கம் அனைவரும் அறிந்ததே. வெளிப்படையாக நடந்த வரலாற்று நிகழ்வுகள் இவை. பலரும் அறியாத, இதுவரை வெளிவராத முக்கியமான வரலாற்று நடவடிக்கை ஒன்று இங்கு நிகழ்ந்தது.

1990 ஆம் ஆண்டு சர்வதேசக் கடற்பரப்பில் ஆயுதங்களுடன் காத்திருந்தது ஒரு கப்பல். பொருட்களை இறக்குவதற்குப் புதிய வசதிகள் ஏதுமற்ற காலம். கட்டைக்காட்டுப் பகுதியிலிருந்து இரண்டு விசைப்படகுகள் புறப்பட்டன. எங்குச் செல்வது, எப்படிச் செல்வது, படகுகளில் ஒன்றிற் சென்ற ஒருவரிடமே விடை இருந்தது. அவர் சங்கரண்ணையேதான்.

கேவிற்பகுதியிற் கண்காணிப்பு றேடார் நிலையம் இருந்தது. வெற்றிலைக்கேணியில் லெப்.கேணல் டேவிட் தலைமையிற் சண்டைப் படகுகள் காத்துநின்றன. ஆயினும், இவற்றின் செயற்றிறன் குறிப்பிடக் கூடியளவு வலிமையானதாக இருக்கவில்லை.

மேற்கொள்ளவேண்டிய பணியை ஒரு சவாலாக ஏற்றுக்கொண்ட சங்கரண்ணை, தமிழீழக் கடற்பரப்பிலிருந்து சர்வதேசக் கடற்பரப்பை நோக்கிய தனது பயணத்தை மாலை மூன்று மணியளவில்

தொடங்கினார். ஏறக்குறைய இருபது மணிநேரப் பயணத்தின் பின் காத்துநின்ற கப்பலுடன் கைகுலுக்கினார். பொருட்களுடன் திரும்பிய படகுகளை நோக்கிச் சிங்களப்படை தாக்குதல் தொடுத்தது. தாக்குதலைச் சமாளிக்கப் போதிய பலம் அன்று இல்லாதபோதும் சங்கரண்ணையின் படகு தன் வெற்றிப் பயணத்தைச் சாலையில் தரை தட்டியதுடன் நிறைவு செய்தது.

*- தி. ஜீசை -*
*சிறப்புத் தளபதி கடற்புலிகள்*



எனது அன்புத் தம்பி பிரபா அறிவது,
உனது 12 வது பிறந்த தினத்தில்
சின்னண்ணாவின் ஆசிகளும் வாழ்த்துக்களும்.
இந்த இனிமையான தினத்தில் ஒன்றைமட்டும்
ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டும்
'வாழ்க்கையில் எக்காரியத்தைச் செய்து முடிக்கவேண்டும் என எண்ணுகின்றீரோ; அதனை அடையும் வரை [illegible] பாடுபடுகிறோம் — எத்தனை தடைகள் எதிர்த்தாலும் பரவாயில்லை - உலகில் உன்னால் செய்ய முடியாதது எதுவும் இல்லை'

நல்ல பழக்க வழக்கங்கள் பழகி
நன்கு படித்து, நல்லொரு பிள்ளையாக நீ
வரவேண்டும் என்பதே எனது ஆசை.

அன்பு முத்தங்களுடன்
சின்னண்ணா

25 வருடங்களுக்கு முன்பு சங்கரண்ணையால் எழுதப்பட்ட மடல்

# திசைகாட்டி

நகர்ப்புற வாழ்க்கையிலேயே எம்மை ஈடுபடுத்திப் பழக்கப்பட்ட நிலையில் திசை என்பதைப் பற்றியே சிந்திக்காத காலம். சூரியன் உதிப்பதையும், மறைவதையும் கூடப் பார்க்கவேண்டிய தேவை இல்லை.

மணலாற்றுக் காட்டில் இறங்கிவிட்டோம். எங்கு உள்ளோம், எப்படிப் போவது ஒரே குழப்பம்.

சூரியனைத் தேடினோம் காணவில்லை. சுற்றிலும் வானுயர்ந்த மரங்கள். எங்கு திரும்பினாலும் மரம்... மரம்... மரம். எப்படித் திசையைக் கணிப்பது. புரியாத புதிராகவே இருந்தது.

எம்மிடையே சூரியன் ஒன்று தோன்றியது. எந்நேரமும் பார்க்க முடியும். எந்நேரத்திலும் திசைகாட்டியாகவே செயற்பட்டார் சங்கரண்ணை.

கைக்கடிகாரத்தில் இருந்தது சிறிய திசைகாட்டி. சங்கரண்ணையின் திசைகாட்டிதான் நகர்விற்கு முதல் தோழன். பெரும் சிரமங்களின் மத்தியில் அச்சிறிய தோழனின் உதவியுடன் சங்கரண்ணையின் கற்பிக்கும் ஆற்றல், திசைகாட்டியை இயக்குவதில் தேர்ந்தவர்களை உருவாக்கியது.

*- ஆதவன் / கடாபி -*
*இம்ரான் பாண்டியன் படையணி*

# வரைபடமான காடு

இருண்ட கண்டம் என ஆபிரிக்கக் கண்டத்தைத்தான் நான் அறிந் திருந்தேன். ஆனால், உயர்ந்த மரங்கள், வானத்தைப் பார்க்க முடியாத அடர்ந்த மரங்கள், இயற்கை வனப்புக்களை அள்ளிச் சொரியும் கான கம் மணலாற்றினுள் நான் பிரவேசித்தபோது கண்டவை.

இந்த வனப்பகுதிக்குள் தலைவரும் அணியினரும் தம்மை நகர்த் திக் கொண்டபோது இந்திய அமைதிப்படை நகரங்களினுள் தனது ஆதிக்கத்தை நிலைநிறுத்த முனைந்தது.

காட்டின் பரிமாணத்தை வரைபடத்தினுள் போடுவதற்குத் தன்னா லான முழுமுயற்சியில் ஈடுபட்டிருந்தார் சங்ரண்ணை அவர்கள்.

மரப்பாதை, மிருகப் பாதை, அருவி, ஓடைகள் ஊடறுக்கும் பாதை எனப் பல பாதைகள் அடர்ந்த அவ்வனத்தைக் கூறுபோட்டன. இவை வரைபடத்தில் இருக்கவில்லை.

வெட்டைகள், மோட்டைகள் எனப் பலவும் துல்லியமாக வரை படத்திற் காணப்படவில்லை. இவ்வனைத்து விபரங்களையும் தேடிப் பெற்று வரைபடத்திற் குறித்து வனப்பிரதேசத்தை வரைபடப் பிரதேசமாக மாற்றினார்.

இம்முன்னெச்சரிக்கைச் செயற்பாடானது இந்திய அமைதிப்படை தன் முழுப்பலத்தைக்கொண்டு மணலாற்றை முற்றுகைக்குள்ளாக்கிய போதும் போரை நெறிப்படுத்துவதற்குப் பேருதவியாக அமைந்தது.

காட்டை அறிந்திராதோர், காட்டு வாழ்வை இயல்பாக்கிக்கொள்ளச் சங்கரண்ணையின் வரைபடங்கள் வழிசமைத்தன.

- *மணிவண்ணன்* -
*கிட்டுப்-பீரங்கிப் படையணி*

# காட்டு வாசிகள்

குழந்தையாகத் தவழ்ந்து திரிந்தது, சிறு பிள்ளையாக நகர்ந்து திரிந்தது, மாணவியாகப் பாடசாலை சென்றுவந்தது எல்லாமே நகரத்தி லும் நகரத்தை அண்டிய பிரதேசங்களிலுந்தான். காட்டைக் கண்டிருக்கி றேன். அதனுடன் பழகவில்லை.

கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதுபோலிருந்தது. கண் திறந்த நிலையிற் காடு சென்றபோதும் இருள் சூழ்ந்தே இருந்தது. எதுவும் தெரியவில்லை. காட்டைக் காணவைத்தவர் சங்கரண்ணை. எமக்குப் புகட்டிய பாடத்தினளவு மிகப் பெரியது.

மாமரம் மாங்காய் காய்க்கும். தென்னை மரம் தேங்காய் காய்க் கும். இவற்றைத்தான் தெரிந்திருந்தோம். பாலைப்பழத்தின் சுவை சொல்லமுடியவில்லை. வீரைப்பழம் சாப்பிடலாம். சூரைப்பழம், உலுவிந் தம்பழம் இதுவரை கேள்விப்படாத பழங்கள். ஒரு சாரார் கிளாக்கை எனவும் இன்னொரு சாரார் கரம்பை எனவும் சொல்லும் முள்ளுடன்கூடிய செடியிற்காய்க்கும் பழம் சாப்பிடலாம் எனக் கற்பித்தார் சங்கரண்ணை.

பனம் மட்டை, பொச்சுமட்டை, பூவரசு சமையற்கூடத்தின் மூலங் கள். சிறு பராயத்திலிருந்து கண்ணாற்கண்ட எரிபொருள்கள். பனம் மட்டையும் இல்லை பொச்சுமட்டையும் இல்லை. பச்சை வீரை நல்லா எரியும். படு முதிரை எரியும் ஆனால் புகைக்கும். இடத்தைக் காட்டி விடும். செம்மணாத்தி நல்லா எரியும். பாத்திரங்களை அமாவாசை இருட்டுப் போல் ஆக்கிவிடும் - சமையல் விஞ்ஞான வகுப்பின் ஆசிரிய ரும் அவரே.

"நாய் குரைக்குது யாரோ வரீனம்" வீட்டு வாயிலை எட்டிப் பார்ப் போம். "ஆடு கத்துது. குழை பிடுங்கிப் போடுங்கோ" ஒருவரின் குரல் ஒலிக்கும். "மாடு கத்துது. கன்று அவிட்டிட்டுது போல" இன்னொருவர் சொல்வார். இவற்றைத்தான் கேட்டுப் பழகியவர்கள். குரங்கு பாய்ந்து

பாய்ந்து கத்துது. ஏதோ ஆள் நடமாட்டம் இருக்குப்போலத் தெரியுது. மரங்கள் முறிச்சுக் கேட்கிறது. யானைக் கூட்டம் ஒன்று போகுது. "கரடி கத்துது கவனம்" எல்லாம் சங்கரண்ணையின் குரல்மூலமே தெரிந்து கொண்டோம்.

"தோட்டத்திலை மாடு வந்து போயிருக்கு. காலடி கிடக்கு" "குசினியிலை கவிட்டு வைத்த பாத்திரத்தை நாய்தான் தட்டியிருக்கு. பாத்திரம் கழுவின சேத்திடத்திலை நாயின் காலடி கிடக்குது" அம்மாவோ சகோதரமோ கூறக் கேட்டதுண்டு. மானின்ரை காலடி, மரையின்ரை காலடி, சிறுத்தை இந்தப் பக்கம் போயிருக்கு. இது தான் பாம்புத் தடயம். சங்கரப்பாவே கூறினார்.

சுட்டாறிய நீரே பருகவேண்டும். இது சங்கரண்ணை அடிக்கடி கூறுவது. தூய்மையான இயற்கை நீர் காட்டிலும் உண்டு. தண்ணீர்க் கொடியை வெட்டி நீர் எடுக்கும் முறையையும் கற்றுத்தரத் தவறவில்லை.

சங்கரண்ணையூடாகவே காட்டைப் பார்த்தோம், சுவைத்தோம், பழகினோம், 'காட்டு வாசிகளாகவே' மாறினோம்.

- *மா. சீத்தா (விசாலி)* -
*புவணாய்வத்துறை*

# மனத்திடம்

அடர்ந்த மணலாற்றுக்காடு இந்திய இராணுவக் காலத்திற் புலிகளின் வீடாகவும் முகாமாகவும் சமர்க்களமாகவும் இருந்தது. போராட்ட வரலாற்றில் ஒரு தனி அத்தியாயமாகத் திகழ்ந்தது.

காட்டுப் போரியல் என்பது அதற்கெனத் தனித்துவக் குணாம்சங்களைக் கொண்டது. அடர்ந்த காட்டுத் தாவரங்களும் மட்டுப்படுத்தப்பட்ட பார்வையும் இவற்றின் விளைவான தனிமை உணர்வும் உடல் அசௌகரியங்களும் தொடர்ந்த செயற்பாடுகளால் ஏற்படும் களைப்பும் பழகிக் கொள்ளாத சூழலும் அந்நியமான சத்தங்களும் தவிர்க்கமுடியாத பிரச்சினைகளும் நோய்களும் போராளிகளின் மனத்திடத்தை நோக்கிக் கணைகளை வீசிக்கொண்டிருந்தன.

மனத்திடத்தைக் கட்டிக்காப்பதே அன்றைய போரியல் நடவடிக்கைகளிற் குறிப்பிடத்தக்க பங்கை ஆற்றியது எனக் கூறலாம். காட்டுப் போரியலுக்கு அவசியமான அனைத்துக் கல்விகளையும் செயன்முறைப் பயிற்சிகளையும் தெரிவுசெய்து போதித்து நடவடிக்கையில் முக்கிய பங்காற்றியவர் சங்கரண்ணையே.

அடர்ந்த, உயர்ந்த, விரிந்த காட்டில் திசையறிதல் என்பது ஒரு சிக்கலுடன்கூடிய விடயம். திசையறி கருவியின் பயன்பாட்டைப் போராளிகளுக்கு மிகத் துல்லியமாகக் கற்பித்தார். காட்டினை வரைபடமாக்கி காட்டின் சிக்கல்களை இலகுவாக்கினார்.

எதிரியைக் கதிகலங்க வைத்த மிதிவெடிகள், கண்ணிவெடிகள் என்பன புலிப் போராளிகளுக்குப் பிரதிகூலமாக அமையாதவாறு இருக்க அவற்றின் இருப்புகளை வரைபடமாக்கிப் போராளிகளின் நகர்வுகளை இலகுவாக்கினார்.

திசைமாறும்போது உணவு, நீர் போன்றவற்றின் பற்றாக்குறைகள் ஏற்படும் நேரத்தில் எப்பழங்களை உண்ணலாம், எந்த இலைகளை உண்ணலாம், எங்கு நீர் பெறலாம் எனப் பலவற்றையும் புகட்டி தப்பிப்பிழைப்பதற்கான நடைமுறைகளை எடுத்துரைத்தார்.

காட்டின் இயற்கையை எவ்வாறு எமக்குச் சாதகமாகப் பயன் படுத்துவது, அதே இயற்கையை எவ்வாறு எதிரிக்குப் பாதகமாக்குவது என்ற தொழினுட்பத்தைச் செயற்படுத்தி, போராளிகளின் மனத்திடத்தை உயர் நிலையிற் பேணிக்கொள்ள வழிசெய்தார்.

- சி. பதுமன் -
கட்டளைத் தளபதி
திருகோணமலை மாவட்டம்



# தடுப்பு

இந்திய இராணுவம் யாழ்க் குடாவைத் தன் முழுக்கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவந்த நேரத்திற் புலிப்படையணிகள் வன்னியை வந்தடைந் தன. வன்னியின் பிரதான நகர்ப்பகுதிகளும் இந்திய இராணுவ முகாம் களால் நிரம்பியிருந்தன. புலிப்படையணிகள் தமது செயற்பாட்டை முழு மையாகக் காட்டினுள் நகர்த்திக்கொண்டன.

மருத்துவ வசதிகள் அற்ற கானக வாழ்வு. மலேரியா எப்படிப் பாதித்திருக்கும், எவ்வாறான தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கும்; எழுத்தில் வடிக்கமுடியாது.

அன்றைய வன வாழ்வில் தேக ஆரோக்கியம் மிகமிக அத்தியா வசியமானதாகக் கருதப்பட்டது. ஓய்வற்ற உழைப்பு. உணவு காவுவது முதல், எப்பொழுதும் உசார் நிலையிலான காவற்கடமை. சுற்றி வளைப்பு வரின் இடம் மாறத் தொடர்ந்த நடை.

சிந்திக்க, செயற்பட, போரிட, எம்மைப் பாதுகாத்துக்கொள்ள என எதற்கும் தேக ஆரோக்கியம் பேணப்படவேண்டும் என்ற அவசிய நிலைக் குச் சவாலாக அமைந்தது மலேரியா.

'வருமுன் காப்போம்' என்ற பொன்மொழி செயல்வடிவம் பெற்றது. மலேரியா வராமல் தடுக்கத் தடுப்புக் குளிகைகளின் அறிமுகம் வரு கிறது. வாராந்தம் குறிப்பிட்ட கிழமையன்று எல்லாப் போராளிகளும் தடுப்புக் குளிகைகளை உட்கொண்டே ஆகவேண்டும். இதை வலிந்து செயற்படுத்தி மலேரியாவை மட்டுமல்ல, இந்திய இராணுவத்தையே வெற்றிகொண்ட தலைவரின் முயற்சிக்கு உறுதுணையானார் சங் கரண்ணை.

*- சொர்ணம் -*
*சிறப்புத் தளபதி*
*சிறப்புப் படையணி*

# கசப்பும் இனிப்பும்

தடயங்களை விடக்கூடாது. தடயங்களை மிகக் கவனமாக அழிக்கவேண்டும் என அடிக்கடி வலியுறுத்துவார். எங்குப் புறப்படும் போதும் இதை ஞாபகப்படுத்துவார்.

தடயங்கள் பல விபரீத விளைவுகளை இந்திய இராணுவக் காலத் தில் ஏற்படுத்தியதுண்டு. ஆற்றிற் குளித்துவிட்டுக் கரையேறிச் செல்லும் போது விடப்பட்ட தடயங்கள் பிரதேசத்தைக் காட்டிக் கொடுத்தன. மழை நீரால் ஏற்பட்ட சேற்றைத் தாண்டிச் செல்லும்போது விடப்பட்ட காலடையாளங்கள் முகாம்கள் சுற்றிவளைக்கப்படுவதற்கு வழிகோலின. வளர்ந்த புற்கள் ஒருபுறம் சாய்ந்து இருந்தமை அணிகள் நகர்ந்த திசை யைக் குறித்து நின்றது. இவ்வாறாகப் பல நிகழ்வுகள்.

தலைவர் அவர்களின் முகாமில் தங்கியிருந்த நாம் ஒரு பணிக் காகப் பல கிலோ மீற்றர்கள் சென்று அப்பணியை நிறைவு செய்துவிட்டு முகாம் நோக்கிச் சென்றுகொண்டிருந்தோம். முகாமிற்குச் செல்வதற்கு வெட்டை ஒன்றைக் கடக்கவேண்டும். காலடி பதியாதவாறு மிக மிக அவதானமாகக் கடந்தோம். புற்களின் மீது கால்களை மெதுவாக வைத் துக் கடந்துவந்தோம். விடப்படும் தடயங்களையும் கவனமாக அழித்தே வந்தோம்.

முகாம் திரும்பி எமது பணி குறித்துத் தலைவர் அவர்களுக்குத் தெரியப்படுத்திவிட்டு, எமது வழமையான கடமைகளுக்குச் சென்றுவிட் டோம்.

வழமைபோல் முகாமைச் சுற்றி வலம் வந்த சங்கரண்ணையின் கண்களிற் செருப்புத் தடம் ஒன்று பட்டுவிட்டது. முகாம் திரும்பிய சங்கரண்ணை எம்முடன் மிக அன்னியோன்னியமாகப் பழகினார். கடைசி யாக நாங்கள்தான் அவ்வழியால் வந்ததென்பதையும் சுலபமாக அறிந்து கொண்டார். எனது காற்செருப்பின் அளவையும் நாசூக்காக அளந்து கொண்டார்.

தலைவர் அவர்களுக்குச் செய்தி சென்றுவிட்டது. தண்டனை பெற்றுக்கொண்டேன். அன்று எனக்குக் கசப்பாக இருந்தது. அந்தக் கசப்பே இந்திய இராணுவத்தை வென்றபோது இனிப்பாகியது.

*- சிவாஜி -*
*சிறப்புப் படையணி*



# முன்னெச்சரிக்கை

இந்திய இராணுவ நெருக்குதல்கள் முனைப்படைந்து வந்த காலம். வன்னிப் பெருநிலப்பரப்பெங்கும் இந்திய இராணுவ நடமாட்டம் வலு வடைந்திருந்தது.

வன்னியின் வளமாம் கானகப் பகுதியெங்கும் விடுதலைப் புலிகள் அணிகளாகவும் குழுக்களாகவும் முகாம்களை அமைத்து வியாபித் திருந்தனர்.

பெரியளவில் எப்பொருளையும் சேமித்து வைக்கமுடியாது. அடிக் கடி இடம்மாற வேண்டும். தேவையான பொருட்களைப் போதிய அள விற் பெற்றுக்கொள்ள முடியாது. இவ்வாறான இறுக்க நிலையில், விடு தலைப் புலிகளின் மருத்துவப்பிரிவோ தனது வளர்ச்சியின் மழலை மொழி பேசியது. அடிப்படை மருந்துகள் இல்லை. போராளிகளுக்கு மருத்துவ அறிவும் இல்லை. உரிய உபகரணங்கள் இல்லை.

இவற்றுக்கு மேலாக ஒரு நோயாளியைப் பராமரிக்க இடமில்லை. மேலும் அடிக்கடி இடம்மாற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்போது நோயா ளியை இடம் மாற்றுவதில் ஏற்படும் சிரமங்கள் பல.

ஒரு சாதாரண காய்ச்சலாற் பீடிக்கப்பட்ட நோயாளியைப் பராமரிப் பதும் சிகிச்சை அளிப்பதும் கூட ஏறக்குறைய முடியாமலிருந்தது.

காயத்தினாலோ நோயினாலோ துன்பப்படும் நோயாளிகளை வேறு வழியின்றிப் பலத்த சிரமங்களுக்கும் மத்தியில் பல்வேறு தடைகளையும் தாண்டி, போராளிகள் பலரை ஈடுபடுத்தி இறுதியில் தமிழகத்திற்கே சிகிச்சைக்காக எடுத்துச்செல்ல வேண்டும்.

இவ்வாறாக நிலைமைகள் மோசமடைந்து வந்தவேளையிலே, இதற்குப் பரிகாரமாக அடிப்படைச் சுகாதாரப் பேணுகையின் அவசியம் உணரப்பட்டது. இதற்காகத் தலைவரால் வகுக்கப்பட்ட திட்டங்களை நடைமுறைப்படுத்துவதில் தீவிரமாக உழைத்தார் சங்கரண்ணை.

கொதித்தாறிய நீரையே பருக வேண்டும். மலக்குழிகளில் மாத்திரமே மலங்கழிக்க முடியும்.

இவ்வாறாகத் தொடர்ந்தன சுகாதார அறிவுறுத்தல்கள்.

*- சி. நிர்மலன்*
*சிறப்புப் படையணி*



# தப்பிப் பிழைத்தல்

மணலாற்றுக் காட்டு வாழ்வு ஒரு கெரில்லாப் போராட்ட வாழ்வே. காட்டில் தப்பிப் பிழைப்பதற்குரிய சில வழிமுறைகளைப் பெரும்பாலும் பின்பற்றவேண்டிய தேவை காணப்பட்டது.

கெரில்லாப் போராளிகளின், கெரில்லாப் போராட்டத்தின் ஓர் உதாரண கர்த்தாவாக விளங்கினார் சங்கரண்ணை. காட்டில் தப்பிப் பிழைப்பதற்குரிய அனைத்துத் தேவைகளையும் தன் உடம்பில் இணைத் துக் கொண்ட மனிதராகக் காணப்படுவார். சங்கரண்ணையின் கழுத்தில் இருந்து கயிறுகள், நூல்கள் தொங்கும். இடுப்புப் பட்டியுடன் பல இணைப்புக் கயிறுகள் காணப்படும். இவையனைத்தும் தப்பிப்பிழைத்து உயிர்வாழ்வதற்கான சாதனங்களின் இணைப்பிகளேயாகும்.

கழுத்தில் தொங்கும் கயிற்றில் திசைகாட்டி. கூடவே பையில் வரைபடம். காட்டில் எங்கிருந்தாலும் இடம் வலம் அறிந்துகொள்ள, செல்லவேண்டிய இடத்தை நோக்கெடுக்க எனச் சகல விடயங்களிற்கும் இவை உதவும்.

எப்பொழுதும் அவருடன் கூடவே தண்ணீர்க்கானும் நகர்ந்து செல்லும். ஆரம்பத்தில் நன்கு சுட்டாறிய நீர் வடிகட்டிக் கானில் நிரப் பப்பட்டிருக்கும். தண்ணீரைத் தூய்மை செய்யும் குளிகைகள் அறிமுக மான பின்னர், சுட்டாறிய நீருக்கும் குளிகைகள் இட்டே வைத்திருப்பார். குளிகைப் பெட்டிகளும் அவரது பைகளில் இடம்பிடித்திருக்கும்.

இடம் மாறினாலும் பசியாறுவதற்கு உதவும் 'லெமன் பப்' பிஸ் கட்டும், பானமாக அருந்திக்கொள்ளக் 'கோல்மன்சும்'. சுற்றிவளைப் புக்களில் சிக்கிக் காட்டுலா வந்த வேளைகளில், ஒரு துண்டு பிஸ்கட் டும் அளவு தண்ணீரும் ஒரு நேரத்தைக் காப்பாற்றியதுண்டு. 'லெமன் பப்' இனையும் 'கோல்மன்ஸ்' இனையும் சங்கரண்ணை எடுத்துக்கொள்ள மறப்பதில்லை.

தேவையான இடத்தில் வேண்டிய உதவிகள் செய்வது சுவிஸ் இராணுவக் கத்தி எனப்படும் பலவித கத்திகள், சாவிகள், வாள், அரம் எனப் பலவற்றையும் உள்ளடக்கிய உபகரணப்பை. இது தொங்கிக் கொள்ளத் தவறுவதில்லை.

இராணுவப் பயன்பாட்டிற்கென விசேடமாக அமெரிக்க இராணுவச் சாதன உற்பத்தி நிறுவனமொன்றால் உற்பத்தி செய்யப்படுவது 'மக் ரோச்'. வெவ்வேறு அளவுகளில் இந்த 'ரோச்' உண்டு. பலமானது, விழுந்தால் உடையாது, உலங்குவானூர்தியில் இருந்து போட்டால் கூட உடையமாட்டாது என்கிறார்கள் உற்பத்தியாளர்கள். இவ்வுற்பத்திக் கையடக்க 'ரோச் லைற்' ஒன்று எப்பொழுதும் ஒரு கயிற்றில் தொங் கியபடியே சங்கரண்ணையிடம் காணப்படும்.

'இருமல்' காட்டு வாழ்வில் ஒரு சிக்கலுக்கான அறிகுறி. எதி ரிக்கு இடத்தைக் காட்டிக்கொடுத்துவிடும். இதைத் தவிர்க்க 'விக்ஸ்' இனிப்புப் பெரிதும் உதவியது. அதுவும் சங்கரண்ணையின் பையில் வழமையாகக் காணப்படும் ஒரு பொருள்.

இவ்வாறாகத் தப்பிப்பிழைத்தலுக்கான அனைத்து உதவிப் பொருட்களும் சங்கரண்ணையின் காட்டு வாழ்விலே மட்டும் அல்ல என் றும் அவருடன் கூடவே சுற்றித் திரிந்தன.

*- சஞ்சை -*
*அரசியற்றுறை*

# நெத்தலி

ஒதுக்குப்புறமான இடமொன்று அம்முகாமிற்கெனத் தெரிவுசெய்யப் பட்டது. அப்படிப்பட்ட பணிக்குரியது அம்முகாம். எல்லோரும் அங்கு வரமுடியாது. நாமும் அடிக்கடி வெளியிற் செல்லமுடியாது. சங் கரண்ணையும் அம்முகாமிலேயே இருந்தார்.

அம்முகாமில் வேலைத்திட்ட இறுக்கத்தால், உணவுப் பொருட் களுக்கு வழமையாகவே தட்டுப்பாடு நிலவியது. வெளியே நாம் சென்று வரும்போதே உலர் உணவுப்பொருட்களை எடுத்து வரமுடியும். பணி நிமித்தம் சங்கரண்ணையும் தொடர்ந்து பல நாட்கள் அங்கு தங்கி இருப்பார்.

கஞ்சி, சோறும் சொதியும், பருப்பே காண்பதற்கரிதான சொதி, டின் மீன் துண்டெல்லாம் கரைந்த குழம்பு, ஒருவருக்கு ஒரு நெத்தலி வரும் குழம்பு என அங்கு நாளாந்த உணவு போய்க்கொண்டிருந்தது. அதுதான் சங்கரண்ணையின் வாய்க்கும் வயிற்றிற்கும்.

அங்கு விசேட உணவென்றால் எல்லோரும் குழுமி விடுவார்கள். கூடிய நெத்தலி போட்ட குழம்புதான் அந்த விசேட உணவு. சோறும் கொஞ்சம் கூட வடிக்கவேண்டும்.

எப்பொழுதாவது இருந்துவிட்டுச் சங்கரண்ணை தலைமையில் அதி விசேட உணவு தயாரிப்போம். சங்கரண்ணை தாச்சிக்குப் பக்கத்தில் இருந்துகொள்வார். தாச்சி சூடாக்கப்படும். நெத்தலிக் கருவாடு அதில் இடப்பட்டுப் பதத்திற்கு வறுத்தெடுக்கப்படும். மணலைத் தட்டித் தவிர்த்து நெத்தலிகளை எடுப்பார். எல்லோருக்கும் எண்ணுக்கணக்கிற் பிரித்துக் கொடுப்பார்.

வயதில் மூத்தவர், எவ்வளவு படித்தவர், எங்களில் ஒருவராக நாம் உண்ணும் உணவையே தானும் உண்பவர். "அந்தாளும் இதைத்தானே சாப்பிடுகிறார்" என எங்களுக்குட் பேசி உணவுப் பிரச்சினைக்கு நாமே நமக்குள் முற்றுப்புள்ளி வைத்துக்கொள்வோம்.

- சிவாஜி
சிறப்புப் படையணி



# மிதிவெடிகள்

இந்திய இராணுவம் மணலாற்று முற்றுகைக்கான திட்டங்களை வகுத்து, நித்திகைக் குளக்கட்டினுள் முகாமமைத்து ஆயத்தங்களைச் செய்துகொண்டிருந்தது.

அறுவர் கொண்ட குழுவொன்று தலைவர் அவர்களால் தெரிவு செய்யப்பட்டது. கண்ணிவெடி புதைப்பது அதன் பிரதான பணி. சங்க ரண்ணை அக்குழுவின் பொறுப்பாளராக விடப்படுகிறார்.

திசைகாட்டியும் வரைபடமும் சங்கரண்ணையின் முழுப் பயன்பாட் டில் வருகின்றன. இராணுவ முகாம் அமைந்துள்ள பகுதியை நோக்கி நகர்கிறோம். உரிய இடத்தை அடைந்துவிட்டோம். மிக எச்சரிக்கை யுடன் எமக்குத் தரப்பட்ட பணியைச் செயற்படுத்த ஆரம்பிக்கிறோம்.

ஆபத்தை மடியிற் கட்டிக்கொண்டு முகாமை மிக நெருங்கிச் செல்கிறோம். வழிகாட்டியும் ஆணை இடுபவரும் சங்கரண்ணையே. இராணுவம் நடமாடும் பாதைகளை மிகக் கவனமாகத் தெரிவுசெய்கி றோம்.

நடைபாதைகள், ஓய்வெடுக்கக்கூடிய இடங்கள், மரங்களின் அடிகள், பற்றைகள் எனப் பல்வேறு பகுதிகளிலும் உண்மையான மிதி வெடிகள் புதைக்கப்பட்டு உருமறைப்புச் செய்யப்படுகின்றன. இடையி டையே 'பூல்' என எழுதப்பட்ட வெற்றுத் தகர டப்பாக்கள் கண்களிற் படக்கூடியவாறு புதைக்கப்படுகின்றன. இவற்றைக் கண்டு விலத்திக் கொள்ளும்போதும் பாதுகாப்பாக நிலையெடுக்கும்போதும் இராணுவத்தினர் மிதிவெடிகளில் சிக்கிக்கொள்கின்றனர். இவ்வாறாகப் பல இராணுவத் தினர் அச்சுற்றாடலில் பாதிக்கப்படுகின்றனர்.

இவ்வாறு பாதிக்கப்பட்ட விடயத்தை உறுதிசெய்ய மிதிவெடிகள் வெடித்த பகுதிகளுக்கு மீண்டும் சங்கரண்ணை செல்வார். இராணுவத்தினர் பாதிக்கப்பட்டதை உறுதிசெய்ய அங்குக் காணப்படும் தடயங்களைத் திரட்டிக்கொள்வார்.

இராணுவத்திற்கு ஏற்பட்ட பாதிப்புக்களைத் தடயங்கள்மூலம் தலைவர் அவர்களுக்குக் காட்டி மிதிவெடியின் விளைவுகளை ஆதாரப் படுத்திக்கொள்வார்.

*- சஞ்சை (உமைநேசன்) -*
*அரசியற்றுறை*



# நீண்ட நடைப் பயணம்

எங்கும் இந்திய அமைதிப் படையினர் நிலைகொண்டிருந்தனர். வீதிகள், காட்டுப் பாதைகள், ஏன் காடுகளை ஊடறுத்தும் அமைதிப் படையினரின் நகர்வுகள் இருந்தன. எங்கும் எந்நேரமும் சண்டைகள் நிகழலாம் என்ற காலப்பகுதி. இவற்றிற்கு மேலாக கண்ணிவெடிகள் விதைக்கப்பட்ட பிரதேசங்கள்.

இந்திய அமைதிப் படையால் முற்றுகைக்குட்படுத்தப்பட்ட மண லாற்றில், தலைவர் அவர்களைச் சுற்றிவளைப்பதற்கு பல வியூகங்களை வகுத்துச் செயலாற்றியது இந்திய இராணுவ உயர்பீடம்.

இவ்வாறு இராணுவ நடவடிக்கைகள் தீவிரமடைந்த வேளையில் தலைவர் அவர்களுக்கான பாதுகாப்பு முன்னெச்சரிக்கையை நோக்காகக் கொண்டு புதிய பிரதேசத்தைத் தெரிவுசெய்யும் இரகசியப் பணியான பாரிய பொறுப்பு சங்கரண்ணையிடம் ஒப்படைக்கப்படுகிறது.

திடுதிப்பென நடக்கும் பாரிய சுற்றிவளைப்புக்கள், பல்வேறு திசைகளிலும் நகரும் விசேட ரோந்து அணிகள் பதுங்கித் தாக்குதல் களை மேற்கொள்ளும். சிறப்புப் பிரிவுகளின் நடவடிக்கைகள் ஆகிய பலத்த நெருக்குதல்கள் இடையே ஒரு நீண்ட நகர்வு சங்கரண்ணையின் வழிகாட்டலில் மேற்கொள்ளப்பட்டது.

இவையனைத்துக்கும் மேலாக எங்களின் கண்ணிவெடி வயல் களைத் தாண்டிச் செல்லவேண்டிய நிலை. அதேவேளை செய்வதோ இரகசியப் பணி என்பதால், ஆங்காங்கே நிறுத்தப்பட்டுள்ள எங்களின் அணிகளின் கண்களில் மண்ணைத்தூவிச் செல்லவேண்டிய தேவை.

எதிரியின் நடவடிக்கையை எதிர்வுகூறும் திறன், கவனமான திட்டமிடல், கடின உழைப்பு, நகர்விற் காட்டிய ஓர்மம், நிதானம், வேகம் இவையனைத்தும் ஒருங்கே, மணலாற்றிலிருந்து வவுனியா வரையான இடர் நிறைந்த நீண்ட நடைப் பயணத்தை எவ்வித இழப்புமின்றி மேற்கொள்ள வழிகோலின.

*- மணிவண்ணன் -*
*கிட்டுப் பீரங்கிப் படையணி*

# மரம் வெட்டுவதிலும்...

காட்டிற் கொட்டில் போடுவது எவ்வளவோ சுலபமானதென எவரும் எண்ணலாம். தேவையான மரங்கள் உண்டு. தேவையான அளவிற் கப்புகள், வளைக்கும் பூட்டுத் தடிக்கும் பொருத்தமான காயாத் தடிகள், வரிச்சுக்குப் பாவட்டை என எல்லாமே உண்டு என நினைக்கலாம். ஆனால் எதிலும் தொடமுடியாது. நினைத்தபடி வெட்டமுடியாது. மண லாற்றில் இந்திய அமைதிப்படைக் காலத்தில் இதுதான் இயக்கச் சட்டம்.

லெப்.கேணல் சுபன், மன்னார் மாவட்டத் தளபதியாக இருந்து இலங்கை இராணுவத்தினுடனான மோதலில் வீரச்சாவைத் தழுவியவர். சத்தம் கேட்காமல் மரம் வெட்டுவது அவருக்கேயுரிய கலை.

மரம் வெட்டும்போது சத்தம் கேட்காமல் வெட்டுவது என்பது முத லிற் கவனிக்கப்படவேண்டியது. சத்தம், காட்டின் இயற்கை அமைதி யைக் குலைப்பின் நடமாடும் இந்திய இராணுவ அணியின் கவனத்தைத் தொட்டுவிடும்.

சத்தம் கேட்காமல் வெட்டிவிடுவார்கள். வெட்டிய இடத்தை உரு மறைப்புச் செய்வது, தடயங்களை அழிப்பது மிக மிகச் சிரமமான விட யம். தடயங்கள் விடப்படின் இந்திய இராணுவ வேவு அணிகளுக்குச் சாதகமாகிவிடும்.

சத்தம் கேட்காமல் மரம் வெட்டும் சுபன் போன்ற திறமை சாலிகள் மரம் அறுப்பார்கள். நாம் சென்றி நிற்போம். மிகச் சாதுரியமா கச் சத்தம் கேட்காமல் மரத்தைச் சாய்த்துவிடுவோம். "அப்பாடா..." நிம் மதிப் பெருமூச்சை விட்டுக்கொள்வோம். மூச்சின் இரைச்சல் ஓயுமுன் பதுங்கி இருக்கும் சங்கரண்ணை வெளிப்படுவார். உருமறைத்தல் தொடங்கும். தடய அழிப்பு ஆரம்பிக்கும். சங்கரண்ணையின் நுண்ணிய பார்வைக்குத் திருப்தி வரும்வரை நாம் செயற்படத்தான் வேண்டும். இதனால் மரம் வெட்டும்போது இரண்டு நோக்கோடு உசார் நிலையில் காவற்கடமையைச் செய்யவேண்டிய கட்டாய நிலை ஏற்படும். இந்திய இராணுவம் வருகிறதா என ஒரு பார்வை; சங்கரண்ணை பதுங்கி உள் ளாரா என மற்றொரு பார்வை.

நாமும் புது யுக்திகளைக் கையாள முனைந்தோம். மரம் வெட்டும் இடத்திற்குச் சென்றதும், "சங்கரண்ணை நாங்கள் கண்டிட்டோம் வாங்க வெளியிலை." நின்றால் வெளியே வரட்டும் என்பதற்காகக் கூப்பாடு போடுவோம். ஒருமுறைதான் எமது யுக்தி வென்றது. பின்பு பலிக்கவில்லை.

சிலவேளைகளில் மரங்களைச் சங்கரண்ணையின் கண்ணிற் படாமல் வெட்டிவிடுவோம். உரிய இடத்திற்கும் எடுத்துச் சென்றுவிடுவோம். 'சக்கரையைத் தேடி வரும் எறும்பு போல்' அங்கு வந்துவிடுவார். வெட்டிய இடம் பற்றிய குறுக்கு விசாரணை, உருமறைத்த விதம்பற்றி அடுக்கான கேள்விகள், திருப்திப்படாவிட்டால் மரம் வெட்டிய இடம் நோக்கிப் புறப்படுவார்.

*மா. சீத்தா(விசாலி) -*
*புலனாய்வுத்துறை*



# ஆரோக்கியமானது

கொதித்தாறிய நீரையே பருகவேண்டும் - புலிகள் அமைப்பில் இன்றும் பின்பற்றப்படும் நடவடிக்கை. புலிகள் அமைப்புடன் நெருங்கிய வர்கள், ஆதரவாளர்கள் எனக் கொதித்தாறிய நீரைப் பருகும் பழக் கத்தை வரித்துக் கொண்டோரும் உளர். மணலாறு புகட்டிய பாடங் களில் இதுவும் ஒன்று.

மோட்டைகள், குளங்கள், ஆறுகள், கிணறுகள் எனப் பலவற்றிலி ருந்தும் பயன்பாட்டிற்கென நீர் பெறப்படுகிறது. அந்த மணலாற்று வாழ் வில் கிணறுகள் வெட்டமுன்பு பெரும்பாலும் ஆற்று நீர், குளத்து நீர் பயன்பாட்டிற்குப் பெறப்பட்டது. நகர்வு நேரங்களிலும் மோட்டைகள், குட்டைகள் கை கொடுத்தன.

ஆற்று நீர் பள்ளமான இடங்களில் தேங்கி நிற்கும். கோடை காலத்தில் அதுவே எமக்குப் பயன்படும். குளங்கள் வற்றி மோட்டை களாகக் காணப்படும். அங்கிருந்த நீர் கிடைக்கும். கிணறுகளும் ஆழம் அதிகரித்துச் செல்லும். இவ்வேளைகளில் வற்றிச் செல்லும் நீரில் நச்சு நுண்ணுயிர்களின் செறிவு அதிகரித்திருக்கும்.

மாரியில் எங்கும் நீர் கிடைக்கும். ஆனாற் கலங்கிய நீர். பல் வேறு இடங்களின் கழிவுகளைக் கலக்கி வந்த ஆற்று நீர் என்றே கூறலாம். நுண்ணுயிர்கள் தாராளமாக இருக்கும். எனவே, பருகுவதற்கு நீர் கொதிக்க வைக்கப்பட்டது. நீரைச் சுத்திகரிக்கும் குளிகைகள் வந்த பின் அவை பயன்பட்டன. கிணறு வெட்டி கிணற்று நீரெனினும் இதே நடைமுறை. முகாமிலிருந்து வெளியே செல்பவர்கள் தண்ணிக்கொள் கலன்களையும் தம்முடன் எடுத்துச் செல்வர்.

வேவு அணியொன்று குறிப்பிடத்தக்க வேவு வேலைக்குப் புறப்படு கிறது. உயிரைப் பணயம் வைத்துச் செயற்படும் வேவு வேலை. செல் லும் அணியைச் சங்கரண்ணையின் கண்கள் நோட்டமிடுகின்றன. குடி நீர்க் கொள்கலன்கள் அவர்களுடன் இல்லாதது சங்கரண்ணையின் பார்வையிற் பட்டுவிடுகிறது.

வேவு அணியை வேவு செய்யும் பணியிற் சத்தமின்றிப் பின் தொடர்கிறார். மிக மிக அவதானமான பின்தொடரல். வேவு அணிக்குத் தண்ணீர்த்தாகம் எடுக்கக் குளம் ஒன்றை நோக்கி நகர்கிறார்கள். தாகம் தீர நீரைப் பருகினார்கள். சங்கரண்ணையின் கண்கள் அக்காட்சியைத் துல்லியமாகப் பதிவு செய்துகொள்கின்றன.

வேவுப் பணியை முடித்து வந்தவர்கள் வயிற்றோட்டத்தாற் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள். பதியப்பட்ட விடயம் சங்கரண்ணையால் தலைவர் அவர்களை அடைந்திருந்தது.

அன்றிலிருந்து கொதித்தாறிய நீர், குளிகை போடப்பட்ட நீர் இவற்றைத்தவிர எந்த நீரையும் அருந்தமுடியாது. கடுமையான சட்டங்களும் நடைமுறைகளும் தலைவர் அவர்களால் வகுக்கப்பட்டன. இவற்றை அமுலாக்கும் பாரிய பொறுப்பு சங்கரண்ணையிடம் விடப்பட்டது. சுகாதார முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மணலாற்றைப் பல நோய் களினின்றும் காப்பாற்றி, ஆரோக்கியமான போராளிகளால் மணலாற்றை வெற்றிகொள்ள வைத்தன.

- கடாபி (ஆதவன்) -

இம்ரான் பாண்டியன் படையணி

# ரோச் போய்ஸ்

மணலாற்றுப் பகுதியை அண்டிய கிராமங்களில் எல்லாம் ஒரே வாகன இரைச்சல். புதிய புதிய இந்திய இராணுவ அணிகள் நகர்த்தப் பட்டுத் தயார்நிலையில் வைக்கப்பட்டு வருவதை இது உணர்த்தியது.

அப்பகுதியிலிருந்த புலிகளின் முகாம்கள் யாவும் அதியுச்சத் தயார் நிலைக்குக் கொண்டுவரப்பட்டன. தலைவர் அவர்களின் முகாமும் அங்கு தான் அமைந்திருந்தது.

இராணுவ நடவடிக்கை ஒன்றை ஆரம்பிப்பதற்கான இராணுவத் தயார்ப்படுத்தல்கள் நிகழ்வது தகவலாளர்கள் மூலம் தெரியவந்தது. வேவு அணிகள் இராணுவ நகர்வுகளை அவதானிக்கவென், புலிகளின் முகாம்களிலிருந்து அனுப்பப்படுகின்றன. அணிகள் சில, இடைமறிப்புச் சண்டைக்கெனத் தயார்ப்படுத்தப்படுகின்றன.

காவலரண்களும் அவற்றையண்டிய பகுதிகளும் கவனமாக உரு மறைப்புச் செய்யப்படுகின்றன. பயன்படுத்தப்பட்ட பாதைகள் யாவும் விசேட அணிகளாற் கவனிக்கப்பட்டு உருமறைப்புச் செய்யப்படுகின்றன.

தலைவர் அவர்களின் முகாமிலேயே இருந்த சங்கரண்ணை, இரா ணுவ நகர்வு எப்படியிருக்கும் என அறியப் பலமுறைகளிலும் முயன்றார்.

அவ்வேளை எமது தொலைத்தொடர்புச் சாதனங்களில் இந்தியப் படையினரின் குரல்கள் கேட்கின்றன. அவை இந்தியப்படை அதிகாரி களின் குரல்களென அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த அனைவரும் உணர்ந்தனர் - சங்கரண்ணையும் உடனிருந்தார்.

புரியாத மொழியில் அவர்கள் பேசியபோதும் அடிக்கடி புரியும் மொழியில், அதாவது ஆங்கிலத்திற் சொற்றொடர் ஒன்று பயன்படுத்துவது அவதானிக்கப்படுகின்றது. எல்லோரும் உற்றுக் கேட்கிறார்கள். ரோச் போய்ஸ் (Torch Boys) என்ற சொற்களே அடிக்கடி பயன்படுத்தப்பட்டன.

எதுவும் பேசாது சற்று அமைதியாக இருந்தார் சங்கரண்ணை. பின் அவருக்கே உரிய அந்தச் சிரிப்புடன் இரவு நகர்வு அணிகளை இந்திய இராணுவம் தயார்ப்படுத்துகிறது என ஆணித்தரமாகக் கூறினார்.

அவர் கூற்றுப் பொய்க்கவில்லை.

- சொர்ணம் -

சிறப்புத் தளபதி

சிறப்புப் படையணி

# தகவல்

தேசியத் தலைவர் அவர்களை இலக்குவைத்து படை நகர்வுகளை மேற்கொள்வதற்காக மணலாற்றைச் சூழவும் இந்தியப் படைகள் குவிக்கப்பட்டு ஒரு முற்றுகைத் தாக்குதல் தொடங்கப்பட்டிருந்தது. நீண்ட, அடர்ந்த காட்டின் பரிமாணங்கள் சங்கரண்ணையின் முயற்சியால் வரைபட வடிவம் பெற்றன.

மணலாற்றுக் காட்டின் இயற்கை அமைதி, இந்திய இராணுவப் பாதங்கள் பதிந்ததாற் குலைக்கப்படுகிறது. புலி அணிகளுடன் பல்வேறு இடங்களில் மோதல்கள் வெடிக்கின்றன. கண்ணிவெடி வயல்கள் அவ்வப்போது தமது பங்கை ஆற்றி இந்திய இராணுவத்திற்குப் பாடம் புகட்டின.

இந்திய இராணுவம் இச்சுற்றிவளைப்புத் தாக்குதலுக்குத் தனது முழுப்பலத்தையும் பயன்படுத்தியது. இராணுவத் தாக்குதலாலும் அடர்ந்த காட்டின் பல பகுதிகள் மீது உலங்குவானூர்திகள் நடாத்தி வந்த தாக்குதல்களாலும் மணலாற்றுக் காடு இயற்கை எழிலை இழந்து கோரமாகக் காட்சியளித்தது. ஆங்காங்கே பல்வேறு இடங்களிலும் துருப்புக்காவி உலங்குவானூர்திகள் துருப்புக்களைத் தரையிறக்கம் செய்துவந்தன.

தலைவர் அவர்களின் தங்குமிடத்தில் ஒரு கொட்டிலிற் சங்க ரண்ணையைச் சூழ இலக்கமிடப்பட்ட வரைபடங்கள் காணப்படும். திசை யறிகருவி, தொலைத்தொடர்பு சாதனங்கள் எனப் பலவும் அவரது கொட்டிலின் அணிகலன்களாக விளங்கும். வரைபடத்தைப் பார்த்து ஏதா வது சிந்தனையில் மூழ்கி இருப்பார்.

உலங்குவானூர்தி பறக்கும் சத்தங்கள் அடிக்கடி கேட்டவண்ணம் இருக்கும். திசைகாட்டியில் நோக்கு எடுத்துக்கொள்வார். உலங்கு வானூர்தி எத்திசையிலிருந்து வந்தது, எத்திசை நோக்கிச் செல்கிறது, எவ்வளவு தொலைவிற் செல்கிறது, இறங்கி ஏறியதா, தாக்குதல் உலங்குவானூர்தியா யாவற்றையும் குறிக்கத் தவறுவதில்லை.

வெடிச்சத்தம் போன்ற காட்டின் இயற்கை ஒலியிலிருந்து வேறுபடும் சத்தங்கள் சங்கரண்ணையின் காதுகளுக்குத் தவறுவதில்லை. அவற்றையும் திசைகாட்டிமூலம் நோக்கெடுத்துக்கொள்வார்.

எல்லாவற்றையும் வரைபடத்திற் குறித்துக்கொள்வார். தகவற் சேகரிப்பிற் கிடைக்கும் விபரங்களையும் அவற்றுடன் ஒத்து நோக்குவார். இந்திய இராணுவத்தின் நகர்வுகள், வியூகங்கள், ஆட்டிலறித் தாக்குதல்கள் போன்றவற்றை முற்கூட்டியே ஆய்ந்து தகவல்களைப் பெற்றுத் தலைவர் அவர்களின் இராணுவச் செயற்றிட்டங்களுக்கு உதவினார்.

- சயாக் -
லெப்.கேணல் ராதா
விமான எதிர்ப்புப் படையணி



# தந்திரோபாயம்

வலிமையான காவல் நடைமுறைகளுடன்கூடிய முகாம்தான், அன்று சற்றுப் பலம் குன்றியிருந்தது. முகாமில் நின்றவர்களில் பலர் வெவ்வேறு பணிகளின் நிமித்தம் சென்றுவிட்டனர்.

முகாமின் காவலரண்களில் இருந்தவர்கள் உசாரடைகிறார்கள். இந்திய இராணுவ நடமாட்டம் தென்படுகிறது. காவலரண்களின் காவற் கடமைகளில் நின்றவர்களுடைய துப்பாக்கிகளின் விசைவில்லுடன் சுட்டு விரல்கள் நெருங்குகின்றன.

நகர்ந்து வந்த இராணுவத்தினர் காவலரணில் இருந்து பதி னைந்து யார் தூரத்தில் உட்கார்ந்தனர். இராணுவம் பதுங்குகிறது எனக் காவலரணில் இருந்த பெண் போராளி எண்ணுகிறார். விசைவில்லை அழுத்த முனைந்தவேளை வந்தது அந்தச் செய்தி. சங்கரண்ணையின் செய்தி. "அவசரப்படவேண்டாம்." மிக உன்னிப்பாக இந்திய இராணுவத் தின் ஒவ்வொரு அசைவும் அவதானிக்கப்படுகிறது. ஒவ்வொன்றையும் உறுதி செய்யும்வரை கவனிக்கப்படுகிறது.

இராணுவம் ஓய்வெடுப்பது உறுதிசெய்யப்படுகிறது. நேரடி யுத்தம் புரிவதற்குப் புலிகளிடம் போதிய ஆளணி அந்நேரத்தில் இல்லாமை கருத்திற்கொள்ளப்படுகிறது. காயமடைந்த நிலையிற் போராளி ஒருவர் அங்குத் தங்கவைக்கப்பட்டிருந்தமை கவனத்திற்கொள்ளப்படுகிறது. எல்லாவற்றிற்கும் மேலாகத் தலைவர் அவர்களின் பாதுகாப்பு வியூகத்தில் எதுவித பாதிப்பும் ஏற்பட்டுவிடக்கூடாது என்ற அக்கறை மேலோங்குகிறது.

சங்கரண்ணையின் தலைமையில் ஓரணி மாற்றுவழியால் மாற்று ஏற்பாட்டிற்காகப் புறப்பட்டது. ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் இராணுவ அணியைத் திசைதிருப்பும் தாக்குதல் முயற்சி. தந்திரோபாயம் வெற்றி கண்டது.

- மா. சித்தா (விசால) -
புனர்வாழ்வுத்துறை



# காத்த, செய்யாமைகள்

இந்தியப் படை தனது இராணுவ நடவடிக்கைகளை மணலாற்று மண் மீது தீவிரப்படுத்தியிருந்தது. தலைவர் அவர்களைக் காப்பது, இழப்பைக் குறைப்பது இரண்டும் ஒன்றில் ஒன்று தங்கியிருந்தன. இவ்விரண்டையும் செயற்படுத்தும் முக்கிய பணி சங்கரண்ணையிடமே இருந்தது என்று கூறலாம். குறிப்பிட்ட எண்ணிக்கையிற் போராளிகளோ, குறிப்பிட்ட பிரதேசமோ அவரிடம் கொடுக்கப்படவில்லை. அப்படியாயின் எப்படிச் செய்தார்?

அவருடைய மதிநுட்பத்தையும் மனக்கட்டுப்பாடுகளையும் நாமும் கற்றுக்கொள்ளவேண்டியதாயிற்று. விலங்குகளின் வாழ்விடமான அந்த அடர்காடு, எமது நுழைவால்; எவ்வித இயல்பு மாற்றத்திற்கும் உட்படக்கூடாது என்பதே அவரது அடிப்படைக் கருத்து.

காட்டிற்கு அந்நியமானவற்றை எங்கேயும் தவறவிடலாகாது. சிறிய கொப்புக்கூட முறிபடக்கூடாது. இலைச் சருகுகள்கூட இருந்த இடத்தைவிட்டு நகர்த்தப்படக்கூடா. நாம் சினமடைந்தோம் சிரமப்பட்டோம். இவைதான் எம்மைப் பாதுகாக்கும் என்பதைக் காலப்போக்கில் உணர்ந்து கொண்டோம்.

எம்மிற் பத்துப் பேர் அடங்கிய சிறிய குழுவொன்று புதிய இடமொன்றிற்கு அழைக்கப்பட்டோம். அங்குச் சங்கரண்ணை காத்திருந்தார். ஓரிடத்தைக் காட்டி இங்குதான் தங்கவேண்டும் என்று கூறினார். காட்டிய இடத்திற்கு அருகாகப் பாதை ஒன்று சென்றது. அப்பாதை முந்நூறு மீற்றர் வரை சென்றதும் பிரதான பாதை ஒன்றுடன் இணைந்துகொண்டது. பிரதான பாதையுடன் இணையும் அந்த முந்நூறு மீற்றரையும் பாதை இருந்த தடயமே தெரியாதவாறு உருமறைப்புச் செய்யும்படி பணித்தார் சங்கரண்ணை. நாளைக்கேகூடப் பிரதான பாதைக்கு இந்திய இராணு வம் வரக்கூடும் என எச்சரித்தார். தலைவர் அவர்கள் அண்மையிலேயே இருந்ததையும் நாம் உணர்ந்து கொண்டோம்.

சங்கரண்ணையின் மேற்பார்வையில், எவருமே அடையாளம் காண முடியாத அளவிற்கு மிக நுட்பமாக உருமறைப்புச் செய்தோம். மனத்தில் தன்னம்பிக்கை உருவெடுத்தது.

இரண்டு நாட்கள் கழிந்தன. பிரதான பாதையை அவதானிக்க விடப்பட்டிருந்த போராளிகளில் ஒருவர் காற்றெனப் பறந்து வந்தார். சங்கரண்ணையின் அறிவிப்புப் பொய்க்கவில்லை. பிரதான பாதையில் இந்திய இராணுவம்.

தடயம் எதுவும் இல்லை. மனிதர்களின் ஒலி எதுவும் இல்லை. மனிதர்களால் எழுப்பப்படும் ஒலி எதுவும் இல்லை. அவ்வியற்கையுடன் முரண்படும் எதுவுமே இல்லை. எங்களுடைய செய்யாமைகள் எங்களைக் காத்துநின்றன.

- மாலினி -
முன்னாள் போராளி



# துல்லியமான வழிகாட்டல்

மணலாற்றுக் காட்டில் முகாம்கள் அமைக்கும் இடத்தைத் தெரிவு செய்வதில் முக்கிய பங்கு வகித்தவர் சங்கரண்ணை. இடத்தின் அமைவிடம், காட்டின் தன்மை, நிலத்தடி நீர் எனப் பல்வேறு அம்சங்களைக் கருத்திலெடுத்தே இடத்தைத் தெரிவு செய்யவேண்டும். இவ்வனைத்து அம்சங்களையும் ஆய்வு செய்து முகாம் அமையுமிடத்தைத் தெரிவுசெய்வார் சங்கரண்ணை.

முகாம் ஒன்றிலிருந்து ஓர் அணியுடன் புறப்படுகிறார். புதிய முகாமிற்கான அமைவிடம் தேடும் படலம் தொடங்கியது. ஒரு பகுதிக்குச் செல்கிறார்கள்; திருப்தி இல்லை. இன்னொன்றிற்குச் செல்ல மரப்பாதை ஒன்று அண்மித்துச் செல்கிறது. இடம் பொருத்தமில்லை. மேலும் நகர்கிறார்கள்; காட்டின் அடர்த்தி போதாது. இவ்வாறாகப் பல பகுதிகள் பார்க்கப்படுகின்றன. திருப்தியான பகுதிகள் குறிக்கப்படுகின்றன.

பணி பூர்த்தியென்றே கூறலாம். முகாமிற்குத் திரும்ப வேண்டும். புறப்பட்ட இடத்திலிருந்து எவ்வளவு தூரம் நடந்தோமென்பதை எவரும் கவனிக்கத் தவறிவிட்டனர். இடத்தைத் தெரிவுசெய்யும் கவனத்திற் தூரம் கணிப்பதை மறந்துவிட்டனர்.

எங்கிருக்கிறோம்? எல்லோர் மனத்திலும் கேள்விக்குறி. திகைத்து நின்றனர். சங்கரண்ணை நிற்கிறார்தானே என்ற தெம்பு.

சங்கரண்ணை சிந்திக்கிறார். அங்கும் இங்கும் அசைந்து அசைந்து நடக்கிறார். புறப்பட்ட நேரம் என்ன என்பதை எல்லோரிடமும் கேட்டுச் சரியான நேரத்தை உறுதி செய்கிறார். புறப்பட்ட திசையை வாயிற் பலமுறை அசைபோடுகிறார். ஏதோ மந்திரம் போல் கணிப்பீடுகள் செய்கிறார். திசைகாட்டியைப் பார்த்தார். சுற்றும் முற்றும் பார்த்தார்.

எல்லோரும் கிளம்புங்கள் எனச் சத்தத்தாலும், சைகையாலும் கூறினார். அவரின் வழிகாட்டலில் நடைப்பயணம் தொடங்கியது.

இறுசற் காட்டினூடாகக் குனிந்தும், நிமிர்ந்தும், தவழ்ந்தும், வளைந் தும் பயணம் தொடர்ந்தது. இடையிடையே கைக்கடிகாரத்தைப் பார்த் துக்கொண்டார். திசையறிகருவி அவ்வப்போது தனது தொழிலைச் செய் தது. குறிப்பிட்ட மணி நேரம் நடை தொடர்ந்தது. ஓரிடத்தில் நிறுத்தி னார். இரவும் தனது வருகையை உணர்த்தியது. அண்மித்து விட் டோம். இரவு நெருங்குவதால், முகாமை நெருங்குவதைத் தவிர்ப்போம் என்பது சங்கரண்ணையின் கருத்து. நின்ற இடத்திலேயே படுக்க முடிவு செய்தோம்.

மெல்ல மெல்ல இரவு அகலத் தொடங்கியது. விடிவெள்ளி வானத்தில் தன்னை இனங்காட்டியது. சலசலப்புச் சத்தம் ஒன்று எமக்கு அண்மையிற் கேட்கத் தொடங்கியது. எல்லோரும் உசார் நிலையில் கூர்ந்து அவதானித்தோம். கிணற்றில் தண்ணீர் அள்ளும் சத்தம் வெகு துல்லியமாகக் கேட்டது. எமது முகாமென அறிந்துகொண்டோம். சங்க ரண்ணையின் துல்லியமான வழிகாட்டலில் நாம் எமது இடத்தை அடைந் தோம்.

- கடாபி (ஆதவன்) -

இம்ரான் பாண்டியன் படையணி

# காட்டு விஞ்ஞானம்

வன்னிப் பெருநிலப்பரப்பில் இரு செல்வங்கள் - வயலும் காடுகளும். காட்டுவளம் வன்னியின் இயற்கை வளமாகும்.

மணலாற்றுக்காடு, வன்னியின் கிழக்குப்புற அரணாக அமைந்த செழிப்பான காடு. இந்திய இராணுவப் படைநகர்வுக் காலத்திற் புலிகள் இயக்கத்தின் அரணாக அமைந்த இயற்கை வளம். இலங்கை இராணுவ நடவடிக்கை - மின்னலுக்கு எதிரான சமரின்போது புலிகளமைப்பின் படையணிகள் பலவும் போரிட்ட வரலாற்று மண்.

அம்மண்ணின் நண்பன் சங்கரண்ணை. அங்குதான் அவரை முதலிற் கண்டேன். என் தகப்பன் என்றே கூறலாம். என்னை மகனே என அன்பாக அழைப்பதால் மாத்திரமல்ல, தந்தை போல அங்கிருந்து அவர் கற்றுத் தந்த பாடங்களையும் வைத்துத்தான்.

சர்வதேச நிலைமைகள், இலங்கையின் அரசியல் ஆகியவற்றோடு இயக்கத்தைப் பற்றியும் தலைவரைப் பற்றியும் அறிவைப் புகட்டுவதில் அவர் முன்னின்றார்.

காட்டைக் கண்டுள்ளேன். பழகியுள்ளேன். காட்டை அண்டியது தான் எனது கிராமம். ஆனால், காட்டு வாழ்வை அறிவியலாக்கிக் கற்றுத் தந்தவர் சங்கரண்ணை. பாதைகளை வரைபடத்தில் அமைத்துத் திசை, தூரம் கணித்து, மரங்களால் எல்லை அடையாளம் இட்டு, காட்டின் இயற்கையை விஞ்ஞானமயப்படுத்தி எங்களுக்குப் புரியும்படியாகப் புகட்டியவர்.

சுருங்கக் கூறின் காட்டின் நெளிவு சுழிவுகளை அவரிடமே கற்றுக்கொண்டோம்.

*- பாண்டியன் -*
*நிதித்துறை*

# அம்புக்குறி

எவ்வளவுதான் காட்டனுபவம் பெற்றாலும் எவ்வளவுதான் திசை அறிவு இருந்தாலும் காடு எம்மைச் சுத்திவிடும். நாம் காட்டைச் சுற்ற வேண்டியதுதான். காடு சுற்றுவதை 'பூங்காச்சுற்று' 'சூடடிப்பு' என்ற பல்வேறு சங்கேதப் பெயர்களால் அழைப்பதுண்டு. இவ்வாறு சுற்றிவருப வர்களுக்கு மாலைபோட்டு வரவேற்பது போராளிகளின் காட்டு வாழ்வுப் பண்பாடு. மாலை பூமாலை அல்ல. சருகு மாலை. வரவேற்புபசார வேலையை முன்னின்று செய்தவர் சங்கரண்ணையே.

ஒருமுறை சங்கரண்ணையும் சருகு மாலைக் கௌரவிப்பிற்குள் மாட்ட நேர்ந்துவிட்டது. காடு மாறுவதென்பது எப்பவும் நடக்கலாம் என்ற நிலையே இருந்தது.

பெண் போராளி ஒருவர் காடு மாறியபொழுது, அவரது துப்பாக்கி வேட்டு அவரது இடத்தைக் கண்டுபிடிக்க உதவியது. கண்ணிவெடி வயல்களில் இந்திய இராணுவம் கால் வைத்துவிட்டால், வெடிச்சத்தம் இந்திய இராணுவத்தின் நடமாட்டத்தை உணர்த்தும். மிருகம் ஒன்று கண்ணிவெடியிற் சிக்கி வெடித்த சத்தம்வரின் அங்குக் கண்ணிவெடி புதைக்க வேண்டும். வெடித்த தடயம் அழிக்கப்பட வேண்டும்.

வெடிச்சத்தம் இந்திய இராணுவ ரோந்து அணிகளின் காதுகளிற் கேட்டுவிட்டால், சுற்றி வளைப்புக்கள், தேடுதல்கள், இராணுவ நட வடிக்கை எனத் தொடர்ந்து சிரமங்கள் ஏற்பட்டுவிடும்.

மணலாற்றுக் காட்டு வாழ்வில் வெடிச்சத்தம் முக்கியமானது. பிரபல்யமானது. பல நிகழ்வுகளின் தோற்றுவாய். இது சங்கரண்ணை யால் உணரப்படுகிறது.

சகல போராளிகளுக்கும் அறிவுறுத்தல் பறக்கிறது. எங்கிருந்தா லும், என்ன செய்துகொண்டிருந்தாலும், எவரெனினும், வெடிச்சத்தம் ஒன்று கேட்டபின் அதன் திசையை அம்புக்குறிமூலம் நிலத்திற் குறித்துக் கொள்ள வேண்டும்.

காவற்கடமையில் நிற்பவராயினும் சரி, காலைக்கடனைக் கழிப்பவராயினும் சரி, சாப்பிடுபவராயினும் சரி அவரது காலடியில் அம்புக்குறி இருக்கவேண்டும்.

*மா. சீத்தா (விசால்)*
*புலனாய்வுத்துறை*

**1988**

# கழிப்பறையிலும்...

1988. இந்திய இராணுவ நெருக்குதல் அதிகரித்திருந்தது. தலைவர் அவர்களின் முகாமுடன் பாதுகாப்பாகக் கூட்டு முகாம்கள் இருந்தன. முகாம்களைச் சூழ வளைய வடிவ அரண்களாகக் காவ லரண் தொகுதிகள், கண்ணிவெடி வயல்கள் என இறுக்கப் பாதுகாப்பு ஏற்படுத்தப்பட்டிருந்தது.

காவலரண் ஒன்றிற் கடமையிலிருந்த பெண் போராளி இராணுவ நடமாட்டம் இருப்பதாகச் சந்தேகிக்கின்றாள். உடனடியாகக் கிளியறிங் அணியொன்று தயாராகின்றது. முகாம் சூழலைக் கிளியறிங் செய்யச் செல்கின்றது.

சென்ற அணியிலிருந்த பெண் போராளி அனுசியா பாதை மாறி விட்டாள். அவளைக் கண்டுபிடிக்கச் சென்ற அணி முயன்று தோல்வி யடைகின்றது.

அனுசியாவைக் காணவில்லையென்று எல்லோர் வாய்களும் முணுமுணுக்கின்றன. செய்தி முகாம் பகுதி முழுக்கப் பரவுகின்றது. முகாம் வழமைக்கு மாறான அதியுயர் எச்சரிக்கை நிலையில் வைக்கப் படுகின்றது. அன்றைய நாளை இருள் கவ்விக்கொள்ளுகின்றது.

அடுத்த நாள் அதிகாலை நேரம் ஒவ்வொருவரும் தமக்கென ஒதுக்கப்பட்ட இடங்களில் நிலையெடுக்கின்றார்கள். காலைக்கடன்களை முடிப்பதற்கான நேரம் வருகின்றது. பகுதி பகுதியாகச் செல்லுகின்றார் கள்.

குழிகள் வெட்டப்பட்டுக் காட்டு மரக்கம்புகளால் மேற்புறம் மூடப் பட்டு நிரையாக அமைந்த கழிப்பிடங்கள். மூன்றடி உயர மறைப்பை மாத்திரம் கொண்டவை. சங்கரண்ணையும் நானும் செல்கின்றோம். அருகருகே அமைந்திருந்த கழிப்பிடங்களில் உட்கார்ந்து கொள்ளுகின் றோம். பேசிக்கொண்டே இருக்கின்றோம்.

“டுமீல்” காட்டின் இயற்கை ஒலி அலைகளை ஊடறுத்து வந்த வெடிச்சத்தம். முகாமில் நின்றவர்களையெல்லாம் ஒரு கணம் உலுக்கியது. எல்லோரது பேச்சுக்களும் நின்றன.

என்னுடன் பேசிக்கொண்டிருந்த சங்கரண்ணையின் பேச்சு அப்படியே நின்றது.

கழிப்பறையிலிருந்து திசைகாட்டியுடன் வெளியே வருகின்றார்.

- பிருந்தன் -
படைய அறிவியற் கல்லூரி



**1985**

# தேடுதற் பயணம்

டுமீல்... வெடிச்சத்தம் கேட்டுச் சில நிமிடங்கள் இருக்கும். ரூ, ரூ என்றும், பின்பு புனிதபூமி என்றும் அழைக்கப்பட்ட புலிகளின் பாசறை யிற் போராளிகளின் முகங்கள் மெல்லத் தெரிந்தன.

பெரிதும் விழுதெறியாத ஆலமரத்திற்கு அண்மையிலிருந்த தனது சிறிய கொட்டிலைத் தாண்டி வந்துகொண்டிருந்தார் சங்கரண்ணை. கழுத்தில் தொங்கிய வானொலியிலிருந்து பி.பி.சி. மந்திரங்களை ஓதிக் கொண்டிருந்தது.

வெடிச்சத்தம் ஏ.கே. யினுடையதே எனத் தன்னுடன் வந்தவர்களு டன் பேசியபடியே நகர்ந்தார். திசைகாட்டியைக் கையில் வைத்து பத்து பாகை எனக் கூறியபடி சென்றுகொண்டிருந்தார். அவரது போக்கு, தலை வரது கொட்டிலை நோக்கியதாகவே இருந்தது.

அக்கொட்டிலில் தலைவர் அவர்கள், போராளிகள் மற்றும் பொறுப் பாளர்களுக்கு அறிவுறுத்தல்கள் வழங்கியபடி இருந்தார். வெடிச்சத்தம் அவரது காதுகளுக்கும் கேட்டிருக்கும். உடனடியாகச் சங்கரண்ணை வருவார் என எதிர்பார்த்திருப்பார்.

எதிர்பார்ப்புப் பொய்யாகவில்லை. சங்கரண்ணை அங்குத் தோன்றினார். என்ன சங்கரண்ணை என்ற தலைவர் அவர்களின் கேள்வி யில் அனுசியா காணாமற்போனமை பிரதிபலித்தது.

சத்தம் வந்த திசையிற் போய்ப் பார்க்கலாம் என்ற பதிலுடன் புறப்படத் தயாரானார் சங்கரண்ணை. முதற் கடற்கரும்புலித் தாக்குத லில் பங்கேற்று வரலாறு படைத்தவர்களின்மீது அன்றே அதீத நம்பிக்கை வைத்திருந்தார் போலும். கொலின்ஸ், காந்தரூபன் ஆகிய இருவருடன் பெண் போராளி ஒருவரையும் தன்னுடன் தேடுதல் நடவடிக்கைக்காக இணைத்துக்கொண்டார்.

முகாமின் புறக்காவல் நிலைகள் ஒவ்வொன்றையும் நோக்கி நடந் தார். ஒவ்வொரு காவல் நிலையில் நின்றவர்களிடமும் வெடிச்சத்தம் வந்த திசை பற்றி வினவினார். ஒவ்வொருவரின் பதில்களையும் கேட் டுத் தனது திசைகாட்டியைப் பார்த்தார். இறுதியில் ஆறு பாகை என்ற முடிவிற்கு வந்தார்.

வழமைபோல் தண்ணீர்ப் போத்தல், தண்ணீர்க் குளிசைகள் என வேண்டியவை யாவும் எடுக்கப்பட்டதா எனத் தன்னுடன் வருபவர்களிடம் கேள்விமேற் கேள்வி கேட்டுப் பயணத்தை ஆரம்பிக்கத் தயாரானார்.

திசைகாட்டியைக் கையிலெடுத்தார். ஆறு பாகைக்கு நேராக மர மொன்றை நோக்கினார். மெதுவான நடையில் அவரது தேடுதற் பய ணம் ஆரம்பமாகியது.

*யோ. யோகி*
*படைய அறிவியற் கல்லூரி*

**1986**

# வெற்றித் தேடுதல்

ஆறு பாகை நோக்கிய பயணம், சங்கரண்ணையின் வழிகாட்டலில் தொடர்ந்தது. காணாமற்போன அனுசியா கிடைப்பாளா என்ற ஏக்கத்துடன் சங்கரண்ணை செல்கின்றார். அனுசியா திரும்புவாள் என்ற எதிர்பார்ப்புடனும் எச்சரிக்கை உணர்வுடனும் முகாமில் உள்ளவர்கள் தங்கள் தங்கள் கடமைகளைச் செய்கின்றார்கள்.

இருசற்காட்டுச் சூழலில் தனிமையின் வெறுமையினால் உடலும் மூளையும் சோர்வடைந்துவிட்டன. இதயத்துடிப்பின் ஒலி அடிக்கடி அவளது நிலையை அவளுக்கு உணர்த்தியது. எழுப்பிய சூட்டொலி, பாசறைக்குக் கேட்டிருக்கும். எவராவது தேடிவரக்கூடும் எனத் தானே தன்னைத் தேற்றியபடியே நேரத்தைப் போக்கிக்கொண்டிருந்தாள் திசைமாறியவள்.

மெதுவான, எச்சரிக்கையான, அதேவேளை திசைமாறாத சங்கரண்ணையின் நடை தொடர்ந்தது. நகர்விற்குப் பெரிதும் தடையான பகுதிகளை ஊடறுத்து நிதானம் தவறாது சங்கரண்ணையின் அணி சென்றுகொண்டிருந்தது.

குறிப்பிட்ட நேர நடை. சங்கரண்ணை நகர்வை நிறுத்திக் கொள்ளுகின்றார். ஏறக்குறைய முக்கால் மணிநேர நடை எனக் கூறலாம். பற்றைக்காடு அங்குத் தோன்றுகின்றது. சூட்டுச்சத்தம் இப்பகுதியி லிருந்து தான் வந்திருக்க வேண்டும். மற்றவர்களைப் பார்த்துக் கூறி னார் சங்கரண்ணை.

ஒவ்வொருவரையும் ஒவ்வொரு இடத்தில் நிலையெடுக்கப் பணிக்கின்றார். சங்கரண்ணையின் கட்டளையை நிறைவேற்றுகின்றார்கள். அவர்களுடன் வந்த பெண் போராளி காட்டின் அமைதியைக் குலைத்த வண்ணம் "அனுசியா, அனுசியா" என உரக்கக் கூவினாள். மூன்று முறை முடிந்துவிட்டது பதிற்குரல் எதுவுமில்லை. நான்காவது முறை

"அனுசியா" எனக் குரல் எழுப்பினாள். எதிரொலி போன்று ஓம் என்ற தயங்கிய ஒலி ஒலித்தது.

சில மீற்றர் இடைவெளியில் இருவரும் நின்றபோதும் பற்றைக் காடானபடியால் ஒருவரையொருவர் பார்க்கமுடியவில்லை. "அனுசியா நான் சங்கர். குரல் வரும் திசையில் வா" என்றார் சங்கரண்ணை.

"இந்தியப் படையுடன் வந்தாலும்" நிலையெடுத்திருந்தவர்களை எச்சரிக்கின்றார் சங்கரண்ணை. அனுசியாவின் உருவம் தெரியத் தொடங்கியபோது "அப்படியே நில்" என்றார் சங்கரண்ணை.

தனியாகவே வருகின்றாள் என்பதை உறுதிப்படுத்தியதைத் தொடர்ந்து மகிழ்ச்சிக்குச் சொல்லவா வேண்டும்.

*யோ. யோகி*

*படைய அறிவியற் கல்லூரி*

**1987**

# நம்பிக்கை

மணலாற்றில் அமைந்திருந்த தொடர் முகாமொன்றின் காவற் கடமையில் நின்ற பெண் போராளி ஒருவர் இந்திய இராணுவ நடமாட்ட மிருக்கக்கூடும் என்ற ஐயத்தைக் கூற, கிளியறிங் அணியொன்று உடனடி யாகத் தயார் செய்யப்பட்டது. அதில் ஒருத்தியாக நானும் சேர்ந்து கொண்டேன்.

கிளியறிங் முடிவுற்றது. இராணுவ நடமாட்டம் பற்றிய தடயம் எதுவும் தென்படவில்லை. முகாம் நோக்கிய பயணத்தைத் தொடர்ந் தோம். இடப்புறமாகச் சென்றுகொண்டிருந்த போராளியைக் கூப்பிடச் சென்ற நான் வந்த பாதையைத் தவறவிட்டுவிட்டேன். பற்றைக்காடாகக் காணப்பட்ட அப்பகுதியில் திசை தெரியாது தடுமாறினேன். மாலை யாகும் வரை முயன்றேன். முகாமிருக்கும் திசையை உணரமுடியாது தவித்தேன்.

இந்திய இராணுவத்தின் அச்சுறுத்தல் ஒருபுறம், வனவிலங்கு களின் அச்சுறுத்தல் மறுபுறம். இவற்றிற்கு மேலாக முகாமிலுள்ளவர்கள் எதிர் நோக்கக்கூடிய சிரமங்கள் எல்லாம் எனது உள்ளத்தின் வலிமை யில் தாக்கத்தை ஏற்படுத்தின.

மரமொன்றில் ஏறி இருந்துகொண்டேன். தனிமை எனது மனத் திரையிற் பல்வேறு கேள்விகளை எழுப்பியது. என்னைத் தேடிவருவார் கள். சங்கரண்ணை திசைகாட்டியின் உதவியுடன் தேடுதல் வேலை யைச் செய்வார் என்று என் உள்ளுணர்வு ஒரு நம்பிக்கையை எனது மனத்தில் தோற்றுவித்தது. இரவுப்பொழுதைத் தூக்கமெதுவுமின்றிக் கழித்தேன்.

விடியலுக்கான அறிகுறிகள் தோன்றிக் கும்மிருட்டு விலகி ஒளிக் கீற்றுக்கள் தெரியத்தொடங்கின. ஏதோ ஓடிய சத்தம் என்னை உலுக் கியது. உள்ளம் உணரமுன் கைகள் இயங்கின. ஓடிய சத்தம் கேட்ட திசையை நோக்கி எனது துப்பாக்கியிலிருந்து ரவை ஒன்று பறந்து சென்றது. தொடர்ந்து அவ்விடத்தில் நிற்பது பாதுகாப்பற்றது என்பத னால் 100 மீற்றர் தூரம் வரை தள்ளிச் சென்று நின்றேன்.

எனது ரவைக்குப் பதில் ரவைகள் வராததனால் ஓடியது வன விலங்கு என ஊகித்துக் கொண்டேன். மனத்திரையிற் பல படங்கள் மீண்டும் மீண்டும் வந்து சென்றுகொண்டிருந்தன. துப்பாக்கிச் சத்தம் எனது முகாமை எட்டியிருக்காதா என ஆதங்கப்பட்டேன். மீண்டும் சங் கரண்ணையின் நினைவு மனத்தைத் திடப்படுத்த உதவியது. நம்பிக்கை யோடு காத்திருந்தேன்.

எனது பெயர் சொல்லிக் கூப்பிடும் சத்தம் கேட்டது. மின்னல் போன்று பலவகைச் சிந்தனைகள் தோன்றி மறைந்தன. தெரிந்த குர லாக இருந்தாலும் தயங்கியபடி "ஓம்" எனப் பதிற் குரல் கொடுத்தேன். "அனுசியா நான் சங்கர்" என்று தொடர்ந்து வந்த அந்தக் குரல் எனது நம்பிக்கை வீண் போகவில்லை எனக் காட்டியது.

*- அனுசியா -*
*நிதித்துறை*

# ஆவணமான மிதிவெடிகள்

மிதிவெடிகள், கண்ணிவெடிகள், பொறிவெடிகள் மணலாற்று மண்ணின் உற்பத்தி என்றே கூறலாம். இந்திய இராணுவ நடவடிக்கைக் காலத்திலே மணலாற்றுக் காட்டில் இந்திய இராணுவத்தைக் கலங்க வைத்தவை இவை. 'ஜொனி' வெடி பிரபல்யமானது. இது ஒரு மிதி வெடி. மணலாற்றில் இந்திய இராணுவத்தை வெற்றிகொள்வதிற் பெரும் பங்கு கொண்டதென்றே கூறலாம்.

தமிழ் நாட்டின், சென்னை மாநகரில் தங்கியிருந்த மூத்த தளபதி கேணல் கிட்டு அவர்களுடன் அன்றைய இந்திய அரச அதிகாரிகள் நடாத்திய பேச்சுக்களின் விபரங்களுடன் இந்திய இராணுவப் பாதுகாப்போடு தமிழீழப் பகுதிக்கு வந்திறங்கிய லெப்.கேணல் ஜொனி அவர்கள் தலைவர் அவர்களுக்கு அவ்விபரங்களைத் தெரியப்படுத்தி விட்டுத் திரும்பி வருகையில் இடையில் வைத்து இந்திய இராணுவ நயவஞ்சகத்தினாற் கொல்லப்பட்டார். அவர் நினைவாக உருவாக்கம் பெற்ற மிதிவெடி அவரின் பெயரைத் தனதாக்கிக்கொண்டது.

'ஜொனி' மிதிவெடிகள் காட்டின் பல பாகங்களிற் புதைக்கப்பட்டன. இல்லை விதைக்கப்பட்டனவென்றே கூறலாம். மணலாற்றில் எங்குக் கால் வைத்தாலும் வெடிக்கும் என்ற நிலை. இந்திய இராணுவம் கால் வைக்கத் தயங்கியது. கால் பதிப்பதில் இருந்து பின்வாங்கியது.

மரங்களை அடையாளமாக வைத்துக் கள்ள மரப்பாதை, மிருகப் பாதை எனப் பலவற்றையும் கவனத்திலெடுத்துப் புதைக்கப்பட்டன. இவற்றைப் புதைக்கும் பணியிற் குறிப்பிடத்தக்க பங்கைச் சங்கரண்ணை ஆற்றி வந்தார்.

இவையனைத்திற்கும் மேலாக மிதிவெடிகள் புதைக்கப்பட்ட பகுதி புலிகளின் நகர்வுகளுக்கும் புலிகளின் பயன்பாட்டிற்கும் தேவைப்படின் மிதிவெடிகள் அகற்றப்படவேண்டியது அவசியமாகலாம் என உணரப்பட்டது. இத்தேவை கருதித் தலைவர் அவர்கள், புதைக்கப்பட்ட மிதி வெடிகளின் இடங்கள் குறித்து ஆவணம் ஒன்றைத் தயாரிக்குமாறு சங்கரண்ணையைப் பணித்தார்.

சங்கரண்ணை மிதிவெடிகள் புதைக்கப்பட்ட இடங்களை வரைபட வடிவிற்குள் கொண்டுவந்தார். காட்டின் இயற்கை அடையாளங்களை அடிப்படையாக வைத்துப் புதைக்கப்பட்ட மிதிவெடிகள் முதன் முதல் வரைபட அடிப்படைக்கு மாற்றப்பட்டு, மிதிவெடி வயல்கள் ஆவணப்படுத் தப்பட்டன. இவை பிற்காலத்தில் மிதிவெடிகளை அப்புறப்படுத்துவதற் குப் பெரிதும் உதவின.

*- சிவாஜி*
*சிறப்புப் படையணி*

# உணவு

மணலாறு, தன்மீதான முற்றுகைகளை உடைத்து எழுந்து கொண்டிருந்தது. இந்திய இராணுவம் தனது இழப்புக்களின் வெளிப்பாடாக இராணுவ நடவடிக்கைகளைக் கைவிடத் தொடங்கியது.

புலி உறுப்பினர்கள் நிம்மதிப் பெருமூச்சை விடத்தொடங்கினர். கடின வாழ்க்கை சற்றுத் தளரத் தொடங்கியது.

மணலாற்றுக்குள் பிரவேசித்தபோது, தலைவருக்கும் அவருடன் நின்றவர்களுக்கும் மண்ணில் விழுந்த சோற்றைக் கழுவி உண்ண வேண்டிய நிலை இருந்தது. இந்த நிலை மாறிச் சொதியும் சோறும், பருப்பும் சோறும், சோயா இறைச்சியும் சோறும், கடின வேலையெனில் தகரத்தில் அடைக்கப்பட்ட மீனும் சோறும் எனப் பல்வேறு வடிவங்களைப் பெற்ற உணவு, பின்னர் முன்னேற்றமடையத் தொடங்கியது.

காட்டை அண்டிய கிராமப்புறங்களிலிருந்து கிடைத்தவற்றைக் காவுதடிகளிற் சுமந்து வந்த காலம் மாறத்தொடங்கியது. காவுதடி வேலை மாறவில்லை. ஆனால், உணவு விநியோகம் கிடைக்கத் தொடங்கியது. பொரிவிளாங்காய் உருண்டைகள், எள்ளுருண்டைகள் எனத் தொடங்கி அப்பிள், கண்டோஸ் எனப் பரந்து விரிந்து சென்றது. வயிற்றுப்பாடு சரிசெய்யப்படத் தொடங்கியது.

கடலினூடாகவே இவ்வகை உணவு விநியோகங்கள் கிடைத்தன. கரையை அண்டிவரும் விசைப்படகுகள், விநியோகப் பொருட்களுடன் தலைகாட்டி நிற்கும்.

ஒரு தடவை வந்த பொருட்களை இறக்கிக்கொண்டு நகர்ந்த ஓர் அணி திசைமாறிவிட்டது. திக்குத் தெரியாது திணறியபடி நின்றது. மிதிவெடிகளும், பொறிவெடிகளும் அப்போதும் தமது சயற்றிறனுடனேயே விழித்திருந்தன.

சங்கரண்ணைக்கு விடயம் தெரியவருகிறது, அவர்கள் திக்குத் தடுமாறி நிற்கும் இடத்தைச் சாதுரியமாக அறிகிறார். அவர்களை நகராது அங்கேயே இருக்கும்படி கூறுகிறார். காட்டை ஊடறுத்து மிதிவெடி, பொறிவெடிகளைத் தவிர்த்து அவர்கள் நின்ற இடத்தைத் துல்லியமாக அடைகிறார்.

உணவுப் பொருட்களுடனான அந்த அணி, சங்கரண்ணையின் வழிகாட்டலில் வந்துசேர்கிறது. எதிர்பார்த்திருந்த அந்த உணவுகள் கிடைக்க எல்லோரும் மகிழ்ந்தனர்.

- கடாபி (ஆதவன்) -
இம்ரான் பாண்டியன் படையணி

# பதுங்குகுழி

ஆங்காங்கே அடிக்கடி மோதல்கள் நடைபெற்று வந்த மண லாற்றுப் பிரதேசம், புலிகளின் கூட்டு முகாம்கள் அமைந்த பகுதி. ஒன்று டன் ஒன்று இணைப்புக்கொண்டதாகவும் ஒன்றிற்கொன்று பாதுகாப்பாக வும் புதிய வியூகங்களுக்கேற்ப முகாம்கள் அமைக்கப்பட்டிருந்தன. ஆண் போராளிகளின் முகாம்கள், பெண் போராளிகளின் முகாம்கள் எனப் பல்வேறு முகாம்களையும் கொண்ட காட்டுக் கிராமம் என்றே கூறலாம்.

காட்டுக் கிராமப் பாடசாலையின் ஒழுங்கு, கட்டுப்பாடுகளுக்கான சட்டம்பியார் சங்கரண்ணையே. மாணவர்கள் சட்டம்பியாருக்குப் பயப் படுவது வழமையே.

சங்கரண்ணை நாளாந்தம் முகாம்களுக்கு ஒரு சுற்றுச் செல்வது வழமை. அவ்வழியில் எமது முகாமிற்கும் வருவார். முகாமிற்கு வரு கிறார் என்றாலே முகாம் உசார் நிலையை அடைந்துவிடும். சிறிய விட யங்களைக்கூட உன்னிப்பாக அவதானிக்கும் அவரது தன்மையே எம் மைப் பயமுறுத்துவது; எதையும் அலட்சியம் செய்வதில்லை.

நடைபாதைகளில் ஒழுங்கான முறையில் தடயங்கள் அழிக்கப்பட் டுள்ளனவா, சரியான முறையில் முகாமைச்சூழ கிளியறிங் செய்யப்பட் டுள்ளதா, தடயங்கள் ஏதாவது விடப்பட்டுள்ளனவா, முகாமிலிருந்து வெளிச்சம் தெரியக்கூடியதாக ஏதாவது நடைபெறுகிறதா என்பவற்றை அறிவதற்காகச் சங்கரண்ணையின் ஐம்புலன்களும் அதியுச்சச் செயற் பாட்டிலேயே இருக்கும்.

உரிய இடங்களிற் பதுங்குகுழிகள் அமைக்கப்பட்டுள்ளனவா? இது சங்கரண்ணையால் மிகக் கடுமையாகக் கவனிக்கப்படும் ஒரு விட யம். கிணற்றிற்கு அருகில், உணவு உண்ணும் இடத்திற்கு அருகில் எனப் பரந்து விரிந்து செல்லும். பாதை ஓரங்களிலும் பதுங்குகுழிகள் கண்டிப்பாக அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

இந்திய இராணுவக் காலத்திற் பயன்படுத்தப்பட்ட மணலாற்றுப் பாதையொன்றின் அருகில் ஓரிடத்தில் மூன்று பாலை மரங்கள் நின்றன. அவற்றின் நடுவே சங்கரண்ணையாற் பதுங்குகுழி ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. ஓயாத அலைகள் மூன்று நடவடிக்கைமூலம் அப்பிரதேசம் கைப்பற்றப்பட்டதை அடுத்து அங்குச் சென்றபோது சங்கரண்ணை அமைத்த பதுங்குகுழி நினைவுக்கு வந்தது. ஏறக்குறைய பத்து ஆண்டுகளின் பின்பும் பதுங்குகுழி இருந்ததற்கான தடயங்கள் காட்சியளிக்கின்றன.

*- தீபா -*

*அரசியற்றுறை*

# இதயத் துடிப்பிலும்... மணலாறு...

ஊர்தி புலிகளின் பிரதேசத்திற் பிரச்சினைக்குரிய பொருள். போதியளவு ஊர்திகள் இல்லை. பராமரிப்பிற்கு உதிரிகள் இல்லை. எரிபொருள் காணாது. மோசமான நிலையில் வீதிகள். இவ்வாறு ஒன்று டன் ஒன்று இணைந்த பிரச்சினைகள்.

1992. விடுதலைப் புலிகள் அமைப்பிற்கும் இப்பிரச்சினைகள் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியிருந்த காலம். ஊர்திப் பற்றாக்குறை பெரும் பிரச்சினையாக இருந்தது.

இயக்கத்தின் நிர்வாக மாவட்ட எல்லைகள் மாற்றம் செய்யப்பட்டு ஒழுங்குபடுத்தப்பட்டுக்கொண்டிருந்தன. நிர்வாகம் ஒன்றின் சொத்து களைப் பொறுப்பேற்கும் பணியிற் சங்கரண்ணை ஈடுபட்டார்.

அவசர அழைப்பு ஒன்று சங்கரண்ணையிடம் இருந்து எனக்கு வந்தது. தேடிச் சென்றேன். மணலாற்றிற்குப் பயன்படக்கூடிய இரண்டு 'ஜீப்' வண்டிகளைத் தனியாக எடுத்து வைத்துள்ளதாகவும் தலைவரிடம் கேட்கும்படியும் ஆலோசனை கூறினார்.

தலைவருடன் பேசிக்கொண்டிருந்தோம். எங்களுக்கு ஊர்திப் பிரச்சினை இருக்கு எனத் தொடங்கினேன். அவ்வளவுதான் மிகுதி அனைத்தையும் சொல்லி முடித்தார் சங்கரண்ணை.

''நல்ல ஊர்திகள் மணலாற்றுக்கு இல்லைத்தான் தம்பி, 'பஜீரோ' 'பிக்கப்' தேவையில்லை. 'ஜீப்' தான் தேவை. இரண்டு 'ஜீப்' நான் ஒதுக்கி வைத்துள்ளேன்'' மூச்சுவிடாது தொடர்ந்தார் சங்கரண்ணை. தலைவரிடமிருந்து புன்சிரிப்புத் தென்பட்டது. அர்த்தமுள்ள அந்தச் சிரிப் புடன் சங்கரண்ணையின் சிரிப்பும் சேர்ந்து கொண்டது.

எப்பணியில் இருந்தாலும் மணலாறு சங்கரண்ணையின் இதயத் துடிப்புடன் சேர்ந்தே இருந்தது.

- பாண்டியன் -
நிதித்துறை

# எங்களுள் ஒருவர்

நாற்புறமும் காட்டாற் சூழப்பட்ட ஊர் - அம்பகாமம்.

25 வருடங்களுக்கு முன்னர் ஒரு நாள், அம்பகாமத்தின் காதிற் கேட்டன சில துப்பாக்கி வெடி ஓசைகள். சில நாட்களுக்கு அவை விட்டுவிட்டுக் கேட்டன.

எங்கோ தூரத்தில் தங்கு வேட்டைக்காரர்கள் தங்கி நிற்கின்றனர் என ஊகித்துவிட்டு இருந்துவிட்டோம்.

பத்தாண்டு இடைவெளிக்குப் பிறகுதான் உண்மை தெரிந்தது. தங்கு வேட்டைக்காரர் என நாம் நினைத்தது தலைவர் பிரபாகரனையும் அவரது சிறு குழுவினரையும்தான்.

நாங்கள் நினைத்தது போல அங்கு மான் வேட்டை நடக்க வில்லை. சிங்க வேட்டைக்கான ஒத்திகை நடந்தது.

அந்த இன்பச் செய்திக்குப் பின்னர், மூன்றாம் ஈழப்போர்க் காலத் தில் எமது கிராமத்திற் கால் பதித்தார் சங்கரண்ணை. கிராமம் மீண்டும் களைகட்டியது. கிராமத்துடன் ஒன்றாகக் கலந்தார் சங்கரண்ணை.

ஒரு பிள்ளையை அன்னையானவள் எப்படியெல்லாம் கவனித்துக் கொள்வாளோ அப்படியே எமது கிராமத்தைக் கவனித்த அன்பாளர்.

பின்தங்கிய எமது கிராமத்தின் அன்றாடச் செயற்பாடுகள் அனைத் திலும் தானும் ஒருவரானவர். தந்தையாக, அன்னையாக, புத்தி சொல் லும் தோழனாக, சிறுபிள்ளைகளுடன் மழலைமொழி பேசுபவராக அவ ரைக் கண்டோம். எமது கிராம மக்கள் ஒவ்வொருவருடனும் பழகியவர். குடும்பக் குறைநிறைகளைப் பகிர்ந்துகொண்டவர்.

மருத்துவ வசதி, தேவையின் நிமித்தம் வாகன வசதி என எல்லா வகையிலும் உதவியவர். கொதித்தாறிய நீரே பருகவேண்டும் என அடிக்கடி கூறுவார். மது அருந்தல், புகை பிடித்தல் என்பவை அவருக்குப் பிடிக்காதவை. அவற்றுக்குப் பதிலாக முட்டைகள் வாங்கிச் சாப்பிடுங்கோ என அடிக்கடி கூறுவார்.

"ஜெயசிக்குறு" மூன்று வருடங்களாக எமது தொடர்பைத் துண்டித் திருந்தது. ஓயாத அலைகள்–03 மீண்டும் எமது தொடர்பைப் புதுப்பித் தது. இராணுவம் புதைத்து வைத்திருந்த மிதிவெடி, பொறிவெடிகளை அகற்றுவதில் தானும் ஒருவராக முன்னின்று உழைத்து, எமது இயல்பு வாழ்க்கையைத் தொடர உதவினார். எங்களுள் ஒருவராக, எமது கிராமத்தின் அனைத்து நடவடிக்கைகளிலும் பங்கேற்ற ஒருவரை இழந்து, சோக முகில்களாற் சூழப்பட்டுள்ளோம்.

- *அம்பகாமம் கிராமத்தினர்* -

# நாம் கண்ட தளபதி

புலிமச்சிநாதிக் குளம்.

பண்டைய வன்னியரின் பழம்பெரும் ஊர்களில் ஒன்று.

மாவீரன் பண்டாரவன்னியனது சகோதரியின் பெயரைச் சுமந்துள்ள கிராமம். ஊருக்கான காரணப் பெயர் பற்றிய செவிவழிக் கதை அப்படித்தான் சொல்கின்றது. வெளித்தொடர்புகள் அதிகமற்ற தனிக் கிராமம். அம்பகாமத்தின் அயலூர்.

இரண்டாம் ஈழப்போர்க் காலப்பகுதியில் எம்முடன் கலந்துரையாடிய மூத்த தளபதி. நாம் கண்ட மனிதர் தான் பிறந்து வளர்ந்த கிராமம் போன்று எமது கிராமத்தை நேசிக்கத் தொடங்கினார்.

அடிப்படை வசதிகள் அற்றிருந்த எமது கிராமத்திற்கு மருத்துவ வசதிகளை முதலில் ஏற்படுத்தினார். தேவையான மருந்துகளைப் பெற்று விநியோகிக்க நிலையம் அமைத்தார்.

நோயாளிகளைத் தனது வாகனம் உட்பட முகாம் வாகனங்களில் வைத்தியசாலைக்கு எடுத்துச் சென்று உதவி எம் மனத்தில் நிலைத்துக் கொண்டார்.

"ஜெயசிக்குறு" இராணுவ நடவடிக்கை எமதுறவைச் சிறிது காலம் பிரித்து வைத்தது.

மீண்டும் சந்தித்தோம். நாம் மீளக்குடியேறப் பெரும் பாடுபட்டார். வீதிகள், பாதைகள், சுற்றாடல் எங்குமிருந்த மிதிவெடிகளை அகற்றி, நாம் மீண்டும் எம் மண்ணிற் கால் பதிக்க உதவினார். பாடசாலைகள்,

சுகாதார நிலையங்கள், குளப் புனரமைப்பு, பயிர்ச்செய்கைக்கு உதவி எனப் பல திட்டங்கள். எண்ணக்கருக்களை எம்முடன் பகிர்ந்து கொண்டார்.

ஆனால் அவை ஈடேறாமலே....

*- புலிமச்சிநாதிக் குள மக்கள் -*

# மாறிய கிராமம்

சிறிலங்காவில் அவ்வப்போது ஏற்பட்டுவந்த இனமுரண்பாடுகள் கொலை, கொள்ளை, பாலியல் வல்லுறவு எனத் தமிழருக்கெதிரான வன் முறைகளாக வெடித்தன. சொந்தமண், வாழ்ந்தமண் என எல்லாவற்றை யும் விட்டுக் கையிற் கிடைத்ததுடன் புறப்பட்டவர் பலர். அவ்வாறு புறப் பட்ட சிலரால் உருவானதுதான் அந்தக் கிராமம்.

மாவீரர் பலரை ஈன்றளித்த அந்தக் கிராமம், இன்றும் போராளி களை வழங்கித் தனது பங்கை நிலைநிறுத்தி வருகிறது. தான் ஈன் றளித்த மாவீரர்களில் ஒருவராகிய சூரியின் பெயரைத் தனக்குச் சூட்டிச் சூரிபுரம் எனப் பெயர் பெற்றுக்கொண்டது. 'சூரியக்கதிர் இராணுவ நட வடிக்கை' சூரிபுரத்தைப் பருமனடையச் செய்தது. இடம்பெயர்ந்த மக் களும் அங்கே குடியேறினர்.

வறுமைக் கோட்டின் கீழ் வாழும் குடும்பங்களை அங்கத்துவமா கக் கொண்ட கிராமம் சூரிபுரம். நந்திக்கடலையும் மந்துக்காடுகளையும் எல்லைகளாகக் கொண்டிருந்தது. கூலித்தொழிலும் மீன்பிடியும் அவர்க ளது தொழில்களாயின.

கிராமத்திற்கு அண்மையிற் சங்கரண்ணையின் மேற்பார்வையிற் பண்ணை ஒன்று உருவாகியது. அது சங்கரண்ணைக்கும் அக்கிராம மக்களிற்குமான உறவுப்பாலம். அப்பண்ணை, கிராம மக்களின் வயிற் றுப்பாட்டைத் தீர்க்கும் பண்ணையாகியது. கிராமத்தவருக்குத் தொழில் வழங்கும் ஓர் இடமாக மாறியது. கிராமத்தவர் நிலைபற்றி நேரில் அறி யும் வாய்ப்பு சங்கரண்ணைக்குக் கிட்டியது.

வறுமையில் வாடும் அம்மக்களின் பொருளாதாரம் வளம்பெற வழி வகைகளைச் செய்துகொடுக்க சங்கரண்ணை ஏற்பாடுகளைச் செய்தார்.

நந்திக் கடலில் மீன்பிடித் தொழிலை மே[illegible]கொண்டு வளம்பெற வள்ளம் ஒன்றைப் பெற்றுக்கொடுத்தார்.

கவனிப்பாரற்றுக் கிடந்த வயல் நிலங்களை பொருண்மிய மேம் பாட்டு நிறுவனத்தின் உதவியுடன் அக்கிராமத்தவர்க்குப் பகிர்ந்தளித்து பயிர்ச்செய்கைக்கு வேண்டிய உதவிகளையும் பெற்றுக்கொடுத்தார்.

அப்பிரதேசப் பனங்காணி உரிமையாளர்களுடன் நேரில் தொடர்பு கொண்டு, பனையோலைகளைப்பெற்று, அவற்றை உழவு இயந்திரத்தில் ஏற்றிவந்து, வசதியற்றவர்களுக்குக் குடிசை வேய்வதற்குக் கொடுத்து அவர்களின் உள்ளத்தில் நிலைத்துக்கொண்டார்.

அக்கிராம மக்களின், ஒழுக்கத்திலும் கல்வியிலும் அதீத அக் கறை காட்டினார். 'முன்பள்ளி' ஒன்று சங்கரண்ணையின் முழு முயற்சி யினால் நிறுவப்பட்டது. பாடசாலைக்கு மாணவர்கள் செல்வதை ஊக்கு விக்கப் பெற்றோருடன் கலந்துரையாடிக் கல்வியின் அவசியத்தை எடுத் துரைத்தார். பிள்ளைகளின் கல்வியூட்டலுக்கு அனுசரணையாகத் திகழ்ந் தார்.

அரசசார்பற்ற நிறுவனங்களுடன் தொடர்புகொண்டு உலர் உணவு, மற்றும் பயன்பாட்டுப் பொருட்கள் ஆகியவற்றைப் பெற்றுக் கொடுத்து கிராமத்தின் மேம்பாட்டிற்கு உதவினார்.

சமூகச் சீர்திருத்தம், பிள்ளைகளிற் பெற்றோரின் அக்கறை, கிராமத்தவரிடையே ஒற்றுமை, பொறுப்புணர்ச்சியுடனான செயற்பாடு எனப் பலவற்றிலும் அக்கிராமம் சங்கரண்ணையால் மாற்றம் கண்டது.

- *சாம்பசிவம்* -
*கிராம சேவகர்*

# விடிவெள்ளி

சங்கரண்ணை வீரச்சாவடைந்த அதே வீதியில் வீரச்சாவடை வதற்குச் சில காலத்திற்கு முன், காட்டு மரங்கள் வீதியை மூடி நிழல் பரப்பி இருந்தன. நானும் எனது கணவரும் மோட்டார் சயிக்கிளில் வந்து கொண்டிருந்தோம். எதிர்த்திசையில் வாகனமொன்று வந்து கொண்டிருந்தது. நாம் அடையாளம் காணும் முன் வாகனம் எமக்கருகே குத்தென நின்றது.

கணவரும் மோட்டார் சயிக்கிளை நிறுத்தினார். நான் இதில் ஏன் சங்கரண்ணையை நிறுத்துகிறீர்கள் என்றேன். அதற்கென்ன செய்வது அவர்தானே நிறுத்தினார் எனக் கணவர் கூறுமுன் சங்கரண்ணை கத வைத் திறந்து இறங்கினார்.

எங்கள் இருவரினதும் சுகம் விசாரித்தார். பிள்ளைகளின் சுகம் விசாரித்தார். வேலைகள் மற்றும் பல விடயங்களைப் பேசினார்.

எனது கணவர், தமிழர் புனர்வாழ்வுக் கழகத்திற் பணியாற்றும் போராளி. இது சங்கரண்ணைக்குத் தெரியும். அடிக்கடி புனர்வாழ்வு விடயங்கள் குறித்து அவருடன் பேசுவதுண்டு. அன்றும் பேசத் தொடங் கினர்.

"சூரிபுரம்" சங்கரண்ணையின் வாய் உச்சரித்தது. மிகவும் பின் தங்கிய கிராமம். அடிப்படைக் கல்வி அறிவுகூடப் பெறாதவர்கள் பெரும் பான்மையினர். இடப்பெயர்வினால் மேலும் பின்தங்கி எதுவித வசதி களுமற்று வாழ்ந்தனர். கிராமத்திற்கு அருகிற் சங்கரண்ணையின் வரவு, கிராமம் புத்தெழுச்சிபெற வழிவகுத்தது. பொது நிறுவனங்களைத் தேடிச் சென்றார். கிராமத்தின் நிலையை எடுத்துக் கூறினார். கிராமத்தை முன் னேற்றத் திட்டங்கள் வகுத்ததுடன் ஆலோசனைகளும் கூறிப் பொது நிறுவனங்களின் பலனை அம்மக்கள் பெற வழிசமைத்தார். கல்விக்கூடம் நிறுவியது வரை சங்கரண்ணையின் பணி அங்குக் காணப்பட்டது.

தமிழர் புனர்வாழ்வுக் கழகம்மூலம் மேலும் சில உதவித் திட்டங்களை அக்கிராமத்திற்கு வழங்கும்படியான கோரிக்கையே அன்றைய அவரது பிரதான பேச்சாக இருந்தது.

சிறியவர் முதல் பெரியவர் வரை அக்கிராம மக்கள் என்றும் சங்கரண்ணையை நினைவுகூருவர். வறிய அக்கிராம மக்களின் விடி வெள்ளியாகத் திகழ்ந்தார்.

*தீபா*
*அரசியற்றுறை*

# ஒரு கல்லில் இரு மாங்காய்கள்

புதைப்பதும், கிளறுவதும் எமது பிரதான வேலை. மணலாற்றில் இந்திய இராணுவத்தைத் திணறடித்தவை; இலங்கை இராணுவப் படையெடுப்புகள் பலவற்றைத் தடுத்து நிறுத்தியவை; பெருமெடுப்பிலான "ஜெயசிக்குறு" இராணுவ நகர்வை முறியடிக்கக் கைகொடுத்தவை; கண்ணிவெடிகள்.

கண்ணிவெடி வேலைத்திட்டத்தைக் கையாள்வதற்கெனத் தனிப் பிரிவாகப் பொன்னம்மான் கண்ணிவெடிப் பிரிவு உருவாக்கப்பட்டது. வெடிப்பொருள் அறிவில் திறமையானவரும் மூத்த உறுப்பினரும் கைதடியில் நடந்த தவறுதலான வெடிவிபத்தில் வீரச்சாவைத் தழுவிக் கொண்டவருமான லெப்.கேணல் பொன்னம்மான் நினைவாக அவரின் பெயரில் இக் கண்ணிவெடிப் பிரிவு செயற்பட்டு வருகிறது.

இக்கண்ணிவெடிப் பிரிவிற்கென ஒரு நவீன உபகரணம் தலைவர் அவர்களால் வழங்கப்படுகிறது. அந்த நவீன உபகரணத்தை இயக்கும் சிறப்புத்தகைமை சங்கரண்ணையிடம் இருந்ததுடன் சங்கரண்ணையுடன் நின்ற போராளிகளுக்கும் அவ்வுபகரணம் குறித்து நல்ல தேர்ச்சி இருந்ததால் தலைவர் அவர்கள் அவ்வுபகரணத்தை சங்கரண்ணையிடமே வழங்கி, அதை எமக்குப் பயிற்றுவித்துக் கையளிக்கும்படி அறிவுறுத்தியிருந்தார்.

உபகரணத்துடன் எமது முகாமிற்கு வந்தார் சங்கரண்ணை. அதனைப் பயன்படுத்தப் பழக்குவதாகவும், எங்களது வழமையான கண்ணிவெடி அகற்றும் பணியுடன் தான் சொல்லும் இடத்திலேயே அதைப் பழக்க முடியுமென்ற பீடிகையுடனும் பேச்சைத் தொடங்கினார்.

"எவ்வாறெனினும் நீங்கள் பழக்கிவிட்டாற் போதும்" என்றோம். "அம்பகாமம் வரவேண்டும்" என்றார்.

'வோட்டசெற்' இராணுவ நடவடிக்கையால் அம்பகாமம் ஆக்கிரமிப்பிற்குட்பட்டுக் கொண்டது. இதனாற் கிராமத்தை ஊடறுத்து இராணுவத்தினதும், விடுதலைப் புலிகளினதும் கா[illegible]ரண் [illegible]வேலிகள்

அமைந்தன. கிராமத்தின் குறிப்பிட்ட பகுதிகள் கண்ணிவெடி வயல்களாகக் காணப்பட்டன. ஓயாத அலைகள் - 03, இக்கிராமத்தை ஆக்கிரமிப்பினின்றும் விடுவித்த பின்பு, கிராமவாசிகள் மீளக் குடியமரத் தொடங்கினர்.

அங்குப் புதைக்கப்பட்டிருந்த கண்ணிவெடிகள், மக்களின் இயல்பு வாழ்க்கைக்குக் குந்தகமாகின. அங்கவீனமானவர்கள் பலர். விவசாயம் செய்யமுடியாதவாறு குளத்தின் ஓரங்கள், வயல்கள் என எல்லா இடமும் கண்ணிவெடிகள் நிரம்பியிருந்தன.

“இவற்றை அகற்றி முடிக்கும்போது, நீங்கள் அப்புதிய உபகரணத்தின் பயன்பாட்டை முழுமையாக அறிந்துவிடுவீர்கள்” கூறினார் சங்கரண்ணை.

ஒரு கல்லில் இரு மாங்காய்கள்.

- உமையாள் -
பொன்னம்மான் கண்ணிவெடிப் பிரிவு

# கதறல்

எமது பிரிவு முகாம்கள் அமைந்திருக்கும் இடங்களை அண்டிய கிராமங்கள் எப்போதும் சங்கரண்ணையின் உறவுக் கிராமங்களாகவே இருக்கும். அக்கிராமங்களில் நடைபெறும் நல்லது கெட்டது யாவற்றை யும் அறிந்துகொள்ளுவார். சிலவேளைகளில் அக்கிராமங்களிற் சுற்று லாச் செல்வதும் அவரது வழமை.

அக்கிராமங்களில் உள்ள அனைவரையும் பற்றி அறிந்து வைத்தி ருப்பார். ஒவ்வொரு குடும்பத்தின் பூர்வீகம். பிள்ளைகள், உறவுகள் என எல்லாமே அவரது மனத்திற் பதிந்திருக்கும். வாகனத்திற் செல்லும் பொழுதுகூட கிராமத்தவர் எவரையாவது கண்டால், சுகம் விசாரிப்பது முதல் அவரது உறவுக்காரர் ஒவ்வொருவர் பற்றியும் பெயர் குறிப்பிட்டுச் சகல விடயங்களையும் கேட்பது வழமை.

அவர் எந்த முகாமில் நின்றாலும் தொலைத்தொடர்புமூலம் சங் கரண்ணையுடன் தொடர்புகொள்ளும்பொழுது அவர் இல்லாத முகாமுக்கு அண்டிய கிராமத்தில் ஏதாவது நிகழ்வு நிகழ்ந்தால், அதைத் தெரியப் படுத்த வேண்டும். இது அவரது கண்டிப்பான உத்தரவு.

பழம்பெருமை வாய்ந்த கிராமம் ஒன்றை அண்டி எமது முகாம் ஒன்று இருந்தது. அப்பொழுது சங்கரண்ணை அங்கில்லை. வேறு ஒரு முகாமில் ஒரு முக்கிய பணி நிமித்தம் நின்றார். எமக்கருகில் இருந்த கிராமத்தில் வசித்துவந்த ஒரு வறிய குடும்பத்தின் ஒரே மகள் சுகயீனம் காரணமாக இறந்துவிட்டாள். இச்செய்தியை அன்று தொலைத்தொடர்பு மூலம் கதைக்கும்போது தெரிவித்தோம்.

சில நாட்கள் கழித்து, அவரது முக்கிய பணி முடிந்து எமது முகாமிற்கு வந்தார் சங்கரண்ணை. வந்தவுடனேயே எம்மிற் சிலரை அழைத்துக்கொண்டு சாவு நடந்த அவ்வீட்டிற்குச் சென்றார்.

சங்கரண்ணையைக் கண்டதும் அக்குடும்பமும் அயலவர் அனைவரும் கத் தியழுதனர். அந்தக் கதறல் சங்கரண்ணைக்கும் அக்கிராமத்திற்கு மிடையேயான உறவை எடுத்துக்காட்டியது.

சங்கரண்ணையின் வித்துடல் அக்கிராமத்திற்கு எடுத்துவரப்பட்ட போது மீண்டும் அதே கதறல்.

- பழனி -

சிறப்புப் படையணி

# தொழிலாளர்களுடன்...

காங்கேசன்துறைச் சீமெந்துத் தொழிற்சாலை 1990 ஆம் ஆண்டு நடுப்பகுதிவரை இயங்கி வந்தது. இலங்கையில் அதிக இலாபத்தில் இயங்கிவந்த தொழிற்சாலை என்றே கூறலாம். தமிழீழத்தின் பிரதான மூலவளங்களில் ஒன்று அங்குச் சுரண்டப்பட்டுக் கொண்டிருந்தது.

பல்வகைப்பட்ட கனரக ஊர்திகள் அத்தொழிற்சாலையின் நாளாந் தச் செயற்பாட்டிற் பங்கேற்றுக் கொண்டிருந்தன. இருபத்து நான்கு மணி நேரமும் அவை செயற்பட்டுக் கொண்டிருந்தன.

சீமெந்தின் பிரதான மூலப்பொருளான சுண்ணாம்புக் கற்பாறை களை அகழ்ந்து எடுப்பதுதான் பாரிய இயந்திரங்களின் பிரதான தொழிற் பாடு. இவ்வகழ்வின்போது, நிலத்தின் மேற்படையாகக் காணப்படும் குறைந்த விகிதத்தைக் கொண்ட சுண்ணாம்புக் கற்பாறைகள் தொழிற் சாலையைச் சூழப் பல்வேறு இடங்களிற் குவிக்கப்பட்டிருந்தன.

இக்கற்கள் சங்கரண்ணையின் செயற்றிட்டத்திற்குப் பெரிதும் தேவைப்பட்டன. தொழிற்சாலையில் நின்ற கனரக ஊர்திகளைப் பயன் படுத்திக் கற்களைக் கட்டுமானம் நிகழும் இடத்திற்கு இடம்மாற்றும் பெரும் பணியை நிறைவேற்ற வேண்டும்.

கனரக ஊர்திகளில் ஏற்றப்படும் பாரிய கற்கள் மிக அவதான மான முறையில் வீதிகளினூடாக எடுத்துவரப்பட்டுக் கடலினுள்ளே பாதை அமைக்கும் சிக்கலான தொழிற்பாடு மேற்கொள்ளப்பட்டது.

சங்கரண்ணை தொழிற்சாலை ஊழியர்களையே அப்பணியில் ஈடு படுத்தினார். அவர்களுடன் சங்கரண்ணை நடந்துகொண்ட முறை; உணவு, இன்சுவைப் பானங்கள் போன்றவற்றை ஈடுபாட்டுடன் வழங்கி அவர்களில் அக்கறை எடுத்தமை என்பன கடினமான அவ்வேலைத் திட்டத்தைச் சலிப்பின்றி, களைப்பைப் பொருட்படுத்தாது, வேகமாக அத்தொழிலாளர்கள் செய்துமுடிக்கத் தூண்டு கோலாக அமைந்தன.

சங்கரண்ணையின் அன்றைய அந்த அணுகுமுறையால் தொழில் தேர்ச்சிபெற்ற குறிப்பிடத்தக்க தொழிலாளர்கள் புலிகள் அமைப்பின் பல் வேறு செயற்றிட்டங்களில் தங்கள் பணிகளைத் தொடர்ந்து நிற்கின்றனர்.

மகேசன்

# புதிய பார்வை

யாழ்க் குடாநாட்டின் மீதான சந்திரிகா அரசின் ஆக்கிரமிப்புப் போரான சூரியக்கதிர் இராணுவ நடவடிக்கையால் வலிகாமம் மக்களின் வரலாற்றுப் பிரசித்தி பெற்ற இடப்பெயர்வு நிகழ்ந்தது. யாழ்க் குடாநாட்டு மக்களின் வன்னியை நோக்கிய இடப்பெயர்வின்போது குடாவிற்கும் வன்னி நிலப்பரப்பிற்கும் இணைப்புப் பாலமாக இருந்த கிளாலி - பூநகரி நல்லூர்ப் படகுச் சேவை, நாள்தோறும் குறிப்பிட்டளவு தொகையினரையும் பொருட்களையுமே காவிச்செல்லும் வலுவைக் கொண் டிருந்தது. எனவே இவ்விடப்பெயர்வை வரையறுக்கும் பிரதான காரணி யாகக் கிளாலிப் படகுச் சேவை அமைந்தது எனலாம்.

கிடைக்கப்பெற்ற ஒவ்வொரு நாளிலும் தனது உச்சவலுவைப் பயன்படுத்தியது அப்படகுச்சேவை. நாளாந்தம் வன்னி வந்து நிம்மதிப் பெருமூச்சு விட்டவர்கள்போக, கிளாலியில் நெஞ்சு இடிக்கப் பதற்றத் துடன் நின்றவர்கள் நினைத்தது நடந்துவிட்டது. எம் ஐ 24 என்ற ‘பறக் கும் டாங்கி’ றொக்கட் மோட்டார்களைக் கரையில் நின்றவர்கள் மீது பொழிந்து தள்ளியது. பீரங்கிச் செல்களும் கரைப்பகுதி எங்கும் வீழ்ந்து வெடித்தன. சிதறி ஓடியவர்கள், காயப்பட்டவர்கள், இறந்தவர்கள் பலர்.

வன்னிக்கு வந்தவர்கள், வறுமை வாட்டினாலும் வலிந்து வாழப் பழகிக்கொண்டனர். மரங்களின்கீழ் கொட்டில்களிற் சுகாதார வசதிக ளின்றி நுளம்புக்கடிக்கு மத்தியில், மலேரியாவால் நடுங்கிக் கொண்டிருந் தனர்.

முள்ளியவளை வித்தியானந்தாக் கல்லூரி களைகட்டியிருந்தது. வன்னியின் கடைசித் தமிழ் மன்னன் பண்டாரவன்னியன் நினைவு நாள் “பாயும் புலி பண்டாரவன்னியன்” நாடகம் அரங்கேற இருந்தது. தொண் ணூறு அடி நீள மேடை ஏற்பாடாகி இருந்தது. மைதானம், வன்னி மண் காணாத கூட்டத்தால் நிறைந்திருந்தது. இடம்பெயர்ந்த மக்களே தொண் ணூறு வீதத்தினர் எனக் கூறலாம்.

மக்கள் விழித்தகண் மூடாது நாடகத்திலேயே ஒன்றியிருந்தனர். எல்லோரும் தம்மை மறந்து நாடகத்தின் போக்கில் மூழ்கியிருந்தனர். விறுவிறுப்புடன் சென்று முடிவடைந்தது நாடகம். மக்கள் நாடகத்தைப் பற்றியே பேசிக்கொண்டு சென்றனர்.

எங்கோ ஒரு மூலையில் மக்கள் கூட்டத்தில் ஒருவராக இருந்த சங்கரண்ணை, சடுதியாக எங்கள்முன் தோன்றினார். எல்லாக் கலை ஞர்களையும் பாராட்டினார். நடிப்பாற்றல், கதைப்போக்கு, நெறியாள்கை எனப் பலவற்றையும் ரசித்ததுடன் அவற்றில் ஏற்படுத்த வேண்டிய மாற் றங்கள் குறித்து ஆலோசனைகளும் கூறினார்.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக, இவ்வாறான நாடகங்களைத் தொடர்ந்து போடும்படியும் அவை இடம்பெயர்ந்து வாழும் மக்களின் உள வியற் பாதிப்புக்களைப் போக்கவும் அவர்களின் உணர்வுகளையும் உறு தியையும் மேலும் வலுவூட்டவும் உதவுமெனவும் கூறினார். அவரின் புதிய பார்வை, நாம் சிந்திக்காத ஆக்கபூர்வமான பார்வையாகும்.

- ஒலியர் ரிஜன் -

# தத்தளித்துத் தவித்தபோது....

சற்றுத் தொலைவிற் செல்கள் வீழ்ந்து வெடிக்கும் சத்தங்கள் கேட்டுக்கொண்டிருந்தன. நேரம் செல்லச் செல்லச் சத்தங்கள் அதிகரித் தன. நெருங்கி வீழ்ந்து வெடிக்கும் சத்தங்களை உணர்ந்தோம். வீட் டுச் சுற்றாடலிலும் விழத் தொடங்கின.

காற்றைக் கிழித்துச் செல்லும் எறிகணையின் கூவல் எம்மைப் பீதிகொள்ள வைத்தது. மரக்கிளைகள் செல் சிதறல்களால் துண்டாடப் பட்டு வீழ்ந்தன. இடம்பெயர்ந்து செல்லும் மக்கள், கையில் அகப்பட்ட வற்றுடன் ஓட்டமும் நடையுமாகச் சென்றார்கள். நாம் செய்வதறியாது திகைத்து நின்றோம். கிளிநொச்சியைக் கைப்பற்றுவதற்கான சிங்கள இராணுவத்தின் 'சத்ஜெய' இராணுவ நடவடிக்கையின் கோரத்தாண்டவத் தின் விளைவுகள் இவை.

'செல்' வெடிச்சத்தம் சற்றுக் குறைந்தது. எமது இடத்தை விட்டு இடம்பெயர்வதென முடிவு செய்தோம். எதை எடுப்பது? எதை விடுவது? எங்குப் போவது? யாரிடம் போவது? நிலைதடுமாறி நின்றோம்.

வீட்டு வாயிலில் உந்துருளி ஒன்று வந்துநின்றது. வருபவர் சங்கரண்ணையின் பிரிவைச் சேர்ந்தவர் என்பதைக் கண்டோம். சங் கரண்ணை அனுப்பியதாகவும் வீடு மாறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துதரத் தன்னை அனுப்பியதாகவும் கூறினார். அடுத்த நாள் வாகனம் கொண்டுவருவதாகவும் 'சீட்' கூரை, மரந்தடிகள் யாவற்றையும் கழற்றி வைக்கும்படியும் கூறிச் சென்றார்.

சோர்வும், வேதனையும், திகைப்பும், ஏக்கமும், கலந்திருந்த எமக்கு மனத்தில் ஒருவகை அமைதி ஏற்பட்டது.

எனது மகன் சங்கரண்ணையுடன் நிற்கும் ஒரு போராளி. இதுதான் சங்கரண்ணைக்கும் எமக்குமான உறவு.

அடுத்த நாள் சொன்னபடி வாகனம் வந்தது. நடுக்கடலில் தத்தளித்த எம்மைக் கரை சேர்த்தாற்போல் நடுக்காட்டில் வழிதெரியாது தவித்தபோது வழிகாட்டியது போல எமது உணர்வுகள்.

- இராமநாதன் -
கிளிநொச்சி

# இதயத் தெய்வமாக...

மாவீரர் நாள். எமது வீட்டிலும் அது ஒரு நினைவு நாள். மாவீரர் மேஜர் இராவணனின் நினைவு நாள்.

சூரியக்கதிர் ஒன்று இராணுவ நடவடிக்கையின்போது நீண்ட வரலாற்றுப் பதிவுகளைப் பின்னணியாகக் கொண்ட வலிகாம மக்கள் ஒட்டுமொத்தமாக இடம்பெயர்ந்து சர்வதேசக் கவனத்தை ஈர்த்திருந்தனர்.

அழகிய கட்டடங்கள், நாகரிக வளர்ச்சியைப் பிரதிபலிக்கும் குடியிருப்புகள், வீடுகள், சாலைகள், பல்வகைத் தோட்டங்கள் ஆகியவற்றால் வனப்புப் பெற்ற பிரதேசம் வலிகாமம். யாழ் நகரத்தைத் தன்னகத்தே கொண்ட இடம். அங்கிருந்து வடக்கு நோக்கிச் செல்கிறது காங்கேசன் துறை வீதி. அவ்வீதிக்குக் கிழக்கே சமாந்தரமாகப் பலாலி வீதி. மேலும் கிழக்கே சமாந்தரமாக அரச வீதி. கோப்பாய்ப் பிரதேசத்தை அரச வீதி ஊடறுத்துச் செல்லுமிடத்தில் அழகிய பூங்கா போன்றே அமைந்திருந்தது கோப்பாய் மாவீரர் துயிலும் இல்லம்.

சின்னபின்னமாகிய கட்டடங்கள், இடிந்து கட்டடக் குவியலாகத் தோற்றமளித்த வீடுகள், அகழிகள் தோண்டப்பட்டும் அரண்கள் அமைக்கப்பட்டும் இருந்த வீதிகள், பற்றைக் காடுகளாகத் தோற்றமளித்த தோட்டங்கள் என எல்லாமே சீரழிந்து போயின. கனரக 'டோசர்' இயந்திரத்தால் இடித்தழிக்கப்பட்டு, உழவு இயந்திரத்தால் உழுது மறைக்கப்பட்டு கொடூரமாகக் காட்சியளித்தது துயிலும் இல்லம். உலகிற்கே ஒளியூட்டும் சூரியக்கதிரின் பெயரால் ஒரு வரலாற்றுப் பேரழிவு நடவடிக்கை நடந்து முடிந்தது.

27.11.1997 மாவீரர் நாள். வரலாறுகள் சுட்டெரிக்கப்படமுடியாதவை என்பதை நிரூபிக்க, இதயத் தெய்வங்களின் உள்ளத்தில் சுடர்விட்ட இதயத் தாகத்தை ஒளியேற்றி நினைவுகூரும் நேரம். மேஜர் இராவணன் கோப்பாய்த் துயிலுமில்லத்திற் சுடரேற்றுகிறான். சிங்கள இராணுவத்தின் அதியுயர் கண்காணிப்பில் மண்தூவிவிட்டு ஏற்றப்பட்ட சுடர், ஒளிபரப்பி நின்றது.

வெற்றிக்களிப்பில் நகர்ந்து கொண்டிருந்தான் இராவணன். அதை நீடிக்கவிடவில்லை சிங்கள இராணுவம். கோப்பாய் மாதா கோவி[illegible]டியில் இரா[illegible]வணனை சிங்கள இராணுவம் கண்டுவிட்டது. துப்பாக்[illegible]கிகள் சட[illegible]சடத்தன. அன்றைய நாள் அவனும் இதயத் தெய்வங்[illegible]களில் ஒரு[illegible]வனானான்.

செய்தி இரண்டு, மூன்று நாட்கள் கழித்தே எமக்கு எட்டியது. பெற்ற பாசம்... வேதனையும் சோகமும் எம்மை ஆட்டிப் படைத்தன. செய்வதறியாது அழுதோம். புலம்பினோம்.

இரண்டாவது நாள் நள்ளிரவை அண்டிய நேரம். சோகமும் வேத னையும் எம் கண்களை மறைத்திருந்தன. ஆனால் தூங்கிக்கொள்ள வில்லை. ஊர்தி ஒன்று எமது வீட்டு வாயிலில் வந்து நின்றது. சங் கரண்ணை நீண்ட பயணத்தின் பின் வந்திருப்பதைத் தோற்றம் காட்டி யது. எமது சோகம், வேதனையைப் புரிந்தவர், எமக்கு ஆறுதல் வார்த் தைகள் கூறி இராவணனின் துணிச்சல், வீரம் இவற்றை எமக்குப் புடம் போட்டுக் காட்டியவர், எமது சோக நிலையைப் போக்க மூன்று மணித் தியாலங்கள்வரை செலவுசெய்து, எம்மைத் தேநீர் அருந்தப்பண்ணி, தானும் தேநீர் அருந்திச் சென்றவர் இன்று...

- மகாதேவன் -
பொருண்மிய மேம்பாட்டு நிறுவனம்
வட்டக்கச்சி



# பரிவு

தலையிற் காக்கிநிற வட்டத் தொப்பி. அங்கும் இங்கும் நடந்த படி ஒவ்வொரு வேலைகளைச் சொல்லிக்கொண்டே தானும் வேலைக் கான உபகரணங்களைத் தூக்கிக்கொண்டு செல்கிறார். காலைவேளை. தேநீர் அருந்திவிட்டு அப்பொழுதுதான் வேலைகளைத் தொடங்கியிருந் தோம்.

மெலிந்த தோற்றமுடைய சிறுவர்கள் இருவர் வந்து முகாம் வாச லில் நின்றனர். வறுமையை அவர்களின் உடைகளில் இருந்த கிளிசல் கள் காட்டிநின்றன. நாம் துப்புரவாக்குவதைப் பார்த்தவர்கள் 'அண்ணை...' என உரத்து அழைத்தனர்.

அருகிற் சென்று வந்த விடயத்தைக் கேட்டோம் "வேலை செய்து தந்தால் காசு தருவீர்களா" பணிவாகவும் தெளிவாகவும் இருந்தன அவர் களது வார்த்தைகள்.

தூர இருந்து அவதானித்த சங்கரண்ணை எம்மை அழைத்து விடயத்தைக் கேட்டார். இருவரையும் அழைத்து வரும்படி கூறினார்.

சங்கரண்ணையின் முன் இருவரும் நிறுத்தப்பட்டனர். காலைச் சாப்பாடு சாப்பிட்டு விட்டீர்களா என்பதே சங்கரண்ணையின் முதலாவது கேள்வியாக இருந்தது. "இல்லை" என்று தயங்கியபடி கூறினார்கள். "பாடசாலை செல்வதில்லையா?" இவ்வாறாக சங்கரண்ணை அன்புடனும் பரிவுடனும் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனார். குடும்ப நிலை, வீட்டு வறுமை எல்லாவற்றையும் இருவரும் எடுத்துக்கூறினர்.

ஏன் வேலை கேட்டனர் என்பதைக் கேட்டார் சங்கரண்ணை. புறா வாங்கவேண்டும் என்ற தங்களது ஆசையைப் பவ்வியமாக எடுத்துக் கூறினர் இருவரும்.

அன்பாகப் [illegible]சினார் சங்கரண்ணை. பாடசாலை, கல்வி என்ப வற்றின் முக்கியத்[illegible]வத்தை எடுத்துச் சொன்னார். வேலை செய்து பணம் [illegible]ற எடுத்[illegible] அவர்களது முயற்சியைப் பாராட்டினார்.

முகாமிற் காலை உணவு இருக்கவில்லை. காலை உணவிற் கென ஒரு தொகைப் பணத்தைக் கொடுத்தார். புறா வாங்கும் அவர் களது முயற்சியை நிறைவு செய்ய இன்னும் ஒரு தொகைப் பணத் தைக் கொடுத்தார். வாயில்வரை அவர்களை அழைத்து வந்து வழிய னுப்பி வைத்தார்.

வறுமையும், பட்டினியும் பிரதிபலித்த அவர்களது முகத்தில் நன்றி யுடன்கூடிய புத்துணர்வு பிரகாசித்தது.

- எழிலன் -
சிறப்புப் படையணி

# "போட்டு வாறம்"

அழகிய சிறுகடலை அண்டிய கிராமங்களில் ஒன்று அந்த வறிய கிராமம். மற்றையது எங்கள் முகாம். அதையும் ஒரு கிராமம் என்றே கூறலாம். இரண்டும் ஒன்றில் ஒன்று தங்கி இருந்தன. முகாம் வேலை களுக்கு அக்கிராமத்தினர் உதவுவார்கள். கிராமத்தின் அடிப்படை வசதி களை முன்னேற்றுவதற்குச் சங்கரண்ணை முன்னிற்பார்.

எம் முகாமின் சுற்றாடலைத் துப்புரவாக்கும் வேலைக்காக வழமைபோலக் கிராமத்தவர் சிலர் வந்தனர். அவரவர்களுக்குரிய வேலைகள் காட்டப்பட்டன. சங்கரண்ணையும் அங்குமிங்கும் நடந்தவாறு அவதானித்து வந்தார்.

முகாமின் ஒரு புறத்தில் வேலை செய்து கொண்டிருந்தவருடன், அதே கிராமத்தைச் சேர்ந்த வேறொருவர் பிரச்சினைப்பட்ட சத்தம் கேட் டது.

விசாரித்தபொழுது வேலை செய்து கொண்டிருந்தவர், வந்தவரின் வீட்டிலிருந்து வெங்காயத்தைத் திருடியதாகவும் காலடியை வைத்தும் வெங்காயம் இடையிடையே கொட்டிக் கிடந்ததை வைத்தும் இவர்தான் என உறுதி செய்ததாகவும் வந்தவர் கூறினார். விடயத்தைச் சங் கரண்ணை கேட்டறிந்தார். வேலை செய்பவரை மறுநாள் விசாரிப்பதாகக் கூறி வந்தவரை அனுப்பிவைத்தார்.

முகாமில் வேலை செய்தவர் அடுத்த நாள் விசாரணைக்காக மனைவி, பிள்ளைகளுடன் குடும்பமாக வந்திருந்தார்.

அவரைச் சங்கரண்ணை அழைத்து இருத்தி அமைதியாகக் கதைத்தார். எதுவித தண்டனையும் தரமாட்டாரெனவும் உள்ளதைச் சொல்லும்படியும் கேட்டார்.

வீட்டுச் சுமையினால் திருடியதாக ஒப்புக்கொண்டார். அன்று காலையில் என்ன சாப்பிட்டார்களெனக் கேட்க, எதுவுமில்லை என்றார். அவரின் மனைவி, பிள்ளைகளுடனும் கதைத்தார். வறுமை நிலையைக் கேட்டறிந்து கொண்டார்.

அவரை இருத்திப் பல புத்திமதிகள் கூறினார். உழைப்பதற்கு வழிவகைகளைச் சொல்லிக்கொடுத்தார். அத்துடன் நிற்கவில்லை.

முகாமில் இருந்த மரவள்ளிக் கட்டை சிலவற்றைப் பிடுங்கி மர வள்ளிக் கிழங்கும், அரிசி, தேங்காய் மற்றும் சில காய்கறிகளும் கொடுத்து அனுப்பினார்.

விடைபெறும்போது "போட்டு வாறம்" என்று கணவனும் மனைவியும் கூறிய சொற்களின் ஓசை சங்கரண்ணை மீதான அவர்களது மதிப்பை வெளிக்காட்டியது.

- த. அப்பன் -
முன்னாட் போராளி

# உதவுவதில்...

சங்கரண்ணையின் வழமையான அறிவுறுத்தல்கள் முடிய முகாமி லிருந்து புறப்பட்டோம். இயக்கத்தின் ஊர்திகள் திருத்தகத்தில் நிறுத் தப்பட்டிருக்கும் எமது பிரிவு ஊர்தி ஒன்றின் திருத்த வேலைகளைக் கவனிப்பதற்காகத் துவிச்சக்கர வண்டியிற் சென்றோம். முகாமிற்கு வரும் பாதைகளூடாகச் சென்று பிரதான வீதியில் இடப்புறம் திரும்பிச் சிறிது தூரம் சென்றிருப்போம்.

சயிக்கிள் ஒன்று நிறுத்தப்பட்டிருந்தது. அதன் அருகே பெண் ஒருவர் நிலத்தில் இருந்து முனகியபடியும் இடையிடையே அலறிக் கொண்டும் இருந்தார். ஆண் செய்வதறியாது திகைத்து நின்றார். அண் மித்துச் சென்றோம். கணவனும் மனைவியும் என்பதை ஊகித்துக் கொண்டோம்.

கணவனிடம் விடயத்தை வினவினோம். மனைவி பெறுமாதம் எனவும் வயிற்று வலியென வைத்தியசாலைக்குச் சயிக்கிளில் ஏற்றி வந்த தாகவும் சயிக்கிளில் தொடர்ந்து இருக்கமுடியாமல் வேதனைப்படுவதாக வும் ஏதாவது வாகனம் வருமென எதிர்பார்த்து இருப்பதாகவும் தெரிவித் தார்.

நிலைமையை உணர்ந்து சங்கரண்ணைக்கு விடயத்தைத் தெரியப் படுத்த எண்ணினோம். வெளியிற் செல்பவர்கள் கைத் தொலைத் தொடர்புச் சாதனத்தைத் தம்முடன் எடுத்துச்செல்லவேண்டும் என்ற சங் கரண்ணையின் அறிவுறுத்தல் உதவியது.

முகாமிற்குத் தொடர்பெடுத்தோம். சங்கரண்ணை தொலைத்தொடர் புச் சாதனத்தினூடாகக் கதைத்தார். விடயத்தை விவரமாகத் தெரி விக்க முடியாத நிலையிற் குறிப்பால் உணர்த்தினோம். எம்மில் ஒருவரைத் திருத்தகத்திற்குச் செல்லும்படியும் மற்றையவரை உடன் முகாமிற்குத் திரும்பி வரும்படியும் பணித்தார்.

முகாமிற்குச் சென்றேன். விடயத்தை விவரமாகக் கேட்டார். முகாமில் ஒரு வாகனமும் நிற்கவில்லை. எப்படியாவது உதவவேண்டும் என்றவர், உந்துருளி ஓட்டுவதிற் பரிச்சயமான போராளி ஒருவரை அழைத்தார். முகாமில் நின்ற உந்துருளியை எடுத்துச்சென்று அப் பெண்ணை வைத்தியசாலைக்குக் கவனமாகக் கூட்டிச்செல்லும்படி கூறினார். வீதிப்பள்ளங்களைத் தவிர்த்துக் கவனமாக ஏற்றிச்செல்லும்படி அப் போராளிக்கு அறிவுறுத்தினார். மீண்டும் மீண்டும் கவனம் என்ற வார்த்தைகள் சங்கரண்ணையிடம் இருந்து வந்தன.

- ஜ. சிவலோகன் -
சிறப்புப் படையணி

# மாற்றமடையாத நட்பு

அவரது தோற்றம் என்றும் மாறியிருக்கவில்லை. எனது ஊரவனாக என்னுடன் பழகியபோது, நாம் நெருங்கிய நண்பர்களாகவே இருந்தோம். அடிக்கடி சந்திப்பதும் ஒன்றாகக் கூடித்திரிவதும் வழக்கம்.

கல்வி பயின்று ஒரு பொறியியலாளராக வந்தபின்பும் எங்கள் நட்பு மாறவில்லை. பழகிய அதே தோழமை உணர்வு என்றும் அவரிடம் பிரகாசித்தது.

கப்பலில் வேலைக்குச் சென்றுவிட்டார். அக்காலகட்டத்தில் வெளிநாடு சென்றவர்கள் குறைவு. கப்பல் வேலை என்பதே பிரபல்யமானது. அதிகூடிய வருமானத்தைப் பெற்றுத்தரும் தொழிலாக இருந்தது. பொறியியற்கல்வி முடித்தவரல்லவா, சம்பளம் அதற்கேற்பவே இருந்திருக்கும்.

கப்பலால் வந்தார். எங்கள் நட்பு அப்படியே இருந்தது. பணம் அவரை மாற்றவில்லை. எனக்கு உதவினார். எங்கள் சமூகத்திற்கு உதவினார். விளையாட்டுச் சமூகத்தில் அவர் தீவிர பங்காளரானார். விளையாட்டுக் கழகச் செயலாளராக அறிக்கை எழுதும் ஆற்றல் பலரைக் கவர்ந்தது.

விளையாட்டுக் கழகம் மூலம் அவர் பெற்றுக்கொண்ட உயர்மட்ட அறிமுகங்கள் போராட்ட ஆரம்பச் செயற்பாட்டிற்குப் பல வகைகளில் உதவின. இவரது தம்பியார் வசீயை (சித்தாத்தன்) சிறிலங்கா காவல்துறை கைது செய்தபோது, சொர்ணியின் (சங்கரண்ணை) உயர்மட்ட அறிமுகங்கள் வசீயை விடுவிக்க உதவின.

போராட்டத்திற்கு அறிமுகங்கள் பெற்றுக்கொள்ள, ஆட்சேர்ப்பிற்கு ஆட்களைப் பற்றி அறிந்துகொள்ள நெல் கட்டும் பாணியில் ஒவ்வொரு பகுதியிலும் உலாவந்தமை அவரது சாணக்கியம்.

நீண்ட இடைவெளியின் பின் ஒரு தளபதியாகக் கண்டேன். அவரே என் வீடு தேடி வந்திருந்தார். நட்பில் மாற்றமிருக்கவில்லை. பாச உறவை நினைவுகூர்ந்தார். புதுப்பித்துக்கொண்டார்.

- சண்முகம் -
இலங்கை வங்கி

# தாடி

எங்கள் மணலாறு, போராட்டத்தில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்திய மண். போராளிகளுக்குப் பல பாடங்களைப் புகட்டிய பிரதேசம். தமிழீழப் போரியல் வரலாற்றிற் புதிய அத்தியாயத்தை வழங்கிய மாவட்டம். காட்டு வாழ்வின் பரிமாணங்களை எடுத்து விளக்கிய கானகம்.

ஒட்டுமொத்தத்தில் தமிழீழப் போராட்டத்தின் உயிர்மூச்சிற்குக் கவசமாக அமைந்த மண்.

அந்த மண் அமைதிப்படைக் காலத்தில் எங்களின் வாழ்விடமாக, காப்பரணாக விளங்கியது. அமைதிப்படையால் எங்களை அணுகவே முடியாது, ஏன் அசைக்கவே முடியாது என்று கூறுமளவிற்கு எங்கள் இராணுவப் பொறிமுறைகள் அங்கே செயற்பட்டன.

உருமறைப்பு என்ற சொல்லின் பொருளை அங்குதான் நாம் முழுமையாக விளங்கிக்கொண்டோம். அங்கு நின்ற போராளிகள் அனைவரும் அடிக்கடி உச்சரிக்கும் மந்திரம் உருமறைப்பு. மந்திரத்தின் பிதாமகன் சங்கரண்ணை என்றே கூறலாம். எந்த உருமறைப்பையும் ஊடுருவிப் பார்க்கும் கண்கள் அவரிடமே இருந்தன.

தலைவர் அவர்களின் இடத்தில் அப்போது நானும் இருந்தேன். சங்கரண்ணையும் அங்கேயே இருந்தார். அவரின் அறிவாற்றலும் செய்திகளை அறியும் எனது ஆவலும் எங்களை நெருங்கிப் பழகவைத்தன. அவரும் என்னுடன் அன்புடன் பழகுவார்.

மீசை, தாடி அற்ற அவரது உருவம் மணலாற்றுக் காட்டில் மீசை, தாடியுடன் மாறியிருந்தது. தாடி வழிக்கப்படாததன் காரணத்தை அறிய விரும்பினேன். "ஏன் தாடி வளர்க்கிறீர்கள்" நேரடியாகவே அவரிடம் கேட்டுவிட்டேன்.

அவரது வழமையான சிரிப்புச் சிறிது நேரம் தொடர்ந்தது. முகம் கறுப்பென்ன, வெள்ளையென்ன அதற்கொரு மினுக்கம் இருக்கும். காட்டுச் சண்டைகளுக்கு உருமறைப்பு மிக அவசியம். மினுக்கமுறும்

முகம் உருமறைப்பிற்குப் பாதகமானது. தாடி, முகத்தின் உருமறைப் புப் பிரச்சினையைப் போக்கிவிடும். உடலின் ஏனைய பகுதிகளை உரு மறைப்புச் செய்தால் மட்டும் போதாது. ஆணித்தரமான ஒரு நீண்ட விளக்கம், காட்டு வாழ்வில் என்னையும் தாடி வளர்க்கச் செய்தது.

- க. பால்ராஜ் -
கட்டளைத் தளபதி



# எளிமையான அறிவூட்டல்

பாடசாலை வாழ்க்கையிலிருந்து போராட்ட வாழ்க்கைக்குள் வந்து இந்திய இராணுவச் சண்டை தொடங்கி, வன்னிக் காட்டிற்கு வரும்வரை இயற்கையை இரசிக்கவில்லை; இயற்கையுடன் பழகவில்லை; இயற்கையைப் படிக்கவில்லை.

சோழகக் காற்று எங்கிருந்து வீசும்? வாடைக்காற்று எப்பொழுது தொடங்கும்? கொண்டல், கச்சான் காற்றுகள் ஏன் வரும்?

வானத்தில் தோன்றும் நட்சத்திரங்களை வண்ண விளக்குகளாகப் பார்த்து இரசித்ததுண்டு. நேரம், திசை சொல்லும் இயற்கைக் கருவிகள் தான் அவை என்பதை இலகுவில் எமக்குக் கற்றுத்தந்த வல்லுநர். இயற்கையின் அறிவியலை எம்முள் புகுத்தியவர். ஆதாரங்களுடனும் செய்முறை வகுப்புக்கள் மூலமும் இயற்கையின் பரிமாணத்தை எடுத்துக் காட்டி அவற்றை எமது மனத்தில் ஆழப்பதித்துக்கொள்ள வைத்தவர்.

அறிவியலை அறிந்திராதவர், உயர் வகுப்பை எட்டியிராதவர், அடிப்படைக் கல்வியையே சரியாகப் பயின்றிராதவர் என்ற வேறுபாடின்றி அனைவருக்கும் இயற்கை அறிவியலைக் கலகலப்பாகவும் மனத்தில் படியக்கூடிய உதாரணங்களை எடுத்துக்காட்டியும் கற்பித்த ஆசான்.

திசைகளைக் குறிப்பிட்டுக் கூறத் தடுமாறும் இளம் போராளிகள் வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆகியவற்றின் முன்னெழுத்துக்களைக்கொண்டு உருவாக்கப்பட்ட வசனத்தின்மூலம் திசைகளை இலகுவாக ஞாபகப்படுத்திக்கொள்ள உதவினார்.

"**வ**ந்த **கி**ழவன் **தெ**ன்னை **மே**லே" என்ற சங்கரண்ணையின் வாக்கியம் இன்றும் எம்மில் பலருக்குத் திசைகளை ஞாபகப்படுத்தி நிற்கிறது.

*- சொர்ணம் -*
*சிறப்புத் தளபதி*
*சிறப்புப் படையணி*

# பார்வைக்குப் படவேயில்லை

இந்திய இராணுவச் சண்டை தொடங்கி சில மாதங்கள் சென்று விட்டன. அப்போது பெரும்பாலும் கிராமங்களை அண்டிய பகுதியிலேயே புலிகளின் முகாம்கள் அமைந்தன. காட்டு நகர்வு பற்றிய அறிவு அப்போது இருக்கவில்லை. சில பாதைகளைப் பயன்படுத்தியே தேவைகள் பூர்த்தி செய்யப்பட்டன.

இப்பலவீனம் பாதகத்தை ஏற்படுத்தியது. எமது முகாமை அண்டி யிருந்த பெண் போராளிகளின் முகாம் இந்திய இராணுவத் தாக்குத லிற்குள்ளாகியது. நாமும் உதவிக்குச் செல்கிறோம். லெப். துர்க்கா வீரச்சாவடைந்தார். அப்பகுதியை விட்டு இடம் மாறவேண்டிய நிர்ப்பந் தம் ஏற்பட்டது.

காட்டினுள் ஆழமாக ஊடுருவி உட்புகுந்தோம். பெண், ஆண் அணிகள் இரண்டையும் நிலைநிறுத்த வேண்டும். சரியான இடத்தில் முகாம் அமைக்கவேண்டும். அலைந்து திரிந்தோம். இடங்கள் பிடிபட வில்லை. காடு விளங்கவில்லை. இடம் தேடிப் புறப்படுவோம். சில மணி நேரம் நடப்போம். எங்களை அறியாமற் புறப்பட்ட இடத்திலேயே வந்துநிற்போம். வெட்டை ஒன்றைக் காணுவோம். அதைத் தவிர்த்து வேறு திசையில் நடப்போம். சிறிது நேரத்தின் பின் அதே வெட்டையின் வேறுபுறத்தில் வந்து ஏறிக்கொள்வோம். சிந்தித்தோம்; தேடினோம்; நடந் தோம் காட்டைப் புரியமுடியவில்லை.

பலருக்கும் காட்டைக் காட்டியவர் அங்கு அப்போது வருகிறார். ஆம்! சங்கரண்ணை அங்கு வந்துவிட்டார். எமது இக்கட்டைச் சொல் லாமலே விளங்கிக்கொள்கிறார். ஆண் போராளிகளும் பெண் போராளி களும் - எமது சிரமங்களைப் புரிந்துகொள்கிறார்.

இடம் தெரிவுசெய்வதற்குத் தானே முன்வருகிறார். திசைகாட்டி யின் உதவியுடன் காட்டின் பல பகுதிகளுக்கும் அழைத்துச் செல்கிறார். ஒவ்வொரு இடத்தின் பாதக சாதகங்களை மதிப்பிடுகிறார். நீர்ப்பிரச் சினை, காட்டின் செறிவு, மரப் பாதைகள், மிருகப் பாதைகள் - அக் காட்டை முழுமையாகவே அறிந்துகொள்கிறார் என்றுதான் கூற வேண் டும். ஓர் இடத்தைத் தெரிவுசெய்து தருகிறார்.

அத்துடன் அவர் நிற்கவில்லை. பின்பு ஏற்படக்கூடிய சிரமங்களைப் போக்க அங்கிருந்த போராளிகள் அனைவருக்கும் திசைகாட்டி, வரைபடம் ஆகியவற்றின் பயன்பாட்டை அங்குத் தங்கிநின்ற குறுகிய நாட்களிற்குள்ளேயே நன்கு விளக்குகிறார். தேர்ச்சியுடன் அவற்றைப் பயன்படுத்தக் கற்பிக்கிறார்.

நாம் அவரிடம் பெற்ற அறிவியல் எமது நகர்வைக் கவனமாகவும் எச்சரிக்கையாகவும் மேற்கொள்ள வழிசெய்தது. இடத்தைத் தொடர்ந்து பாதுகாப்பதில் எவ்வித சிரமமும் ஏற்படவில்லை. சங்கரண்ணையால் மிக நுண்ணியமாகக் கவனமெடுத்துத் தெரிவுசெய்யப்பட்ட இடமாதலாலும் அவரின் அறிவியற் புகட்டலை நாம் கைக்கொண்டதாலும் நாமாக அவ் விடத்தை விட்டு அகலும்வரை இந்திய இராணுவத்தின் பார்வைக்குப் படவேயில்லை.

*வே. தீபன்*
*கட்டளைத் தளபதி*

# பொத்தகங்கள்

நிலத்தடிப் புகையிரதச் சேவைகளின் வலை வேலைப்பாடுகளே அந்த நகரத்தின் உயிர் மூச்சு எனலாம். நகரத்தின் பிரதான போக்கு வரத்து ஊடகம் இந்த நிலத்தடிப் புகையிரத சேவைதான். நகரத்தின் ஒவ்வொரு சந்தியிலும் ஒவ்வொரு நிலத்தடிப் புகையிரத நிலையம் அமைந்திருக்கும். இப்புகையிரத நிலையங்கள் எல்லாவற்றையும் ஒரு வலை வேலைப்பாடு போன்று புகையிரதப் பாதைகள் இணைத்திருக்கும். ஒவ்வொரு புகையிரத நிலையத்திலும் வெவ்வேறு திசைகளிற் செல்லும் புகையிரதங்களுக்காக ஒன்றிற்குக் கீழ் ஒன்றாகப் புகையிரத மேடைகள் அமைக்கப்பட்டுள்ளன.

புகையிரதச் சேவையை எவ்வாறு பயன்படுத்துவது என்பதை அறி வதற்குப் புகையிரத வலை வேலைப்பாட்டை எடுத்துக்காட்டும் வரைபடம் உண்டு. எங்காவது செல்லவேண்டுமாயின் வரைபடத்தைப் பார்த்து, எந் தப் புகையிரதத்திற் சென்று, எங்கு இறங்கி, எதில் மாறிச் செல்ல வேண் டும் என்பதை எளிதில் தீர்மானித்து விடலாம்.

கையிற் புகையிரத வலை வேலைப்பாட்டை எடுத்துக்காட்டும் வரைபடம், கடும் குளிரைத் தாங்கிக்கொள்ளக் கறுப்புத் தோலினாலான தடித்த மேலாடை, தோளிலே தொங்கும் பச்சை நிறப் பை; இவற்றோடு வீதியோர நடைபாதையிற் சென்று இருப்பிடத்திற்கு அருகிலுள்ள நிலத் தடிப் புகையிரத நிலையத்தை அடைவார் சங்கரண்ணை. புகையிரதத் தில் ஏறி இருக்கையில் இருந்தவுடன் தான் எடுத்துச் செல்லும் குறிப்புக் களை மீளப் புரட்டிக்கொள்வார்.

பல பொத்தக வெளியீட்டு நிறுவனங்களுடன் தொலைபேசியில் தொடர்பு கொள்வார். பல தலையங்கங்களில் வெளிவந்த பொத்தகங் களின் விற்பனை இடங்களைக் கேட்பார். புதிதாக வெளியிடப்பட்ட பொத்தகங்களின் விபரங்களைக் கோருவார். எல்லாம் குறிப்புப் பொத் தகத்தில் தாள்களை நிரப்பிக்கொள்ளும்.

குறிப்புப் பொத்தக விபரத்திற்கேற்ப நிலத்தடிப் புகையிரத வரை பட வழிகாட்டலிற் பொத்தக விற்பனை நிலையத்தை அடையும் சங்கரண்ணை, தட்டுகளில் உள்ள பொத்தகங்களை சல்லடை போட்டுத் தேடுவார். ஆயுத விபரங்கள், இராணுவச் செயற்பாடுகள், இராணுவத் தந்திரோபாயங்கள், தொழினுட்ப விடயங்கள், போரியல் வரலாறுகள், புலனாய்வு எனப் பல்வேறு தலையங்கங்களில் தேடுதலை மேற்கொள் வார். வேண்டிய பொத்தகங்களை நுணுக்கமாக ஆராய்ந்து தெரிவுசெய் வார். அவை கொள்முதல் செய்யப்படும்.

இவ்வாறு சங்கரண்ணையின் முயற்சியாற் பெறப்பட்ட பொத்த கங்களே தற்போதும் இயக்கப் பயன்பாட்டில் உள்ள பொத்தகங்களிற் கணிசமான பங்கை வகிக்கின்றன.

*சி. நிர்மலன்*
*சிறப்புப் படையணி*

# எம்.ஓ.

விடுதலைப் புலிகளின் வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் தலைவர் அவர்களின் சிந்தனைக்கேற்ப பிரிவு ரீதியான பகுப்புகள் உருவமைக்கப்பட்டன. இராணுவச் செயற்பாடுகளை விரிவுபடுத்த எம்.ஓ. (Military office) என்ற பெயரில் இராணுவ அலுவலகம் அமைக்கப்பட்டது.

ஆயுத அறிவை விரிவுபடுத்த, ஆயுதங்கள் பற்றிய படங்களுடன் கூடிய விளக்க வெளியீடு "போர்க்குரல்" என்ற பெயரில் வெளியிடப்படுகிறது. பயிற்சி முகாம்களில் ஆயுதக் கல்வியூட்ட ஆசிரியர்கள் தயார் செய்யப்படுகிறார்கள்.

ஆயுதம், தொழினுட்பம், புலனாய்வு எனப் பல்வேறு துறைசார் புத்தகங்கள், சஞ்சிகைகள், ஆவணங்கள், வீடியோ ஒலிப்பதிவு நாடாக்கள் எனப் பலவும் பல தேசங்களில் இருந்தும் பெறப்படுகின்றன. இங்கு இவை ஒழுங்குபடுத்தப்பட்டு இராணுவத்துறை வளர்ச்சியடைகிறது.

அடிக்கடி இந்த அலுவலகத்திற்கு வந்து செல்வது சங்கரண்ணையின் வழமை. இராணுவ, தொழினுட்ப விடயங்கள் குறித்துப் படிப்பதுடன் அவற்றின் நுணுக்கங்களை எடுத்துக்கூறுவார். மேலும் வேண்டிய விபரங்களை எதிற் பெறலாம், எங்கிருந்து பெறலாம் எனக் குறிப்பெடுத்துக் கொள்வார்.

இராணுவச் சஞ்சிகைகளைக் கூடுதலாகப் படிப்பது அவரது இயல்பு குறிப்பா இராணுவ உபகரணங்களின் உற்பத்திமூலம், விற்பனை மு கவர் போ ற விபரங்களைத் தேடிப் பெற்றுக்கொள்வார்.

இராணுவ அலுவலகத்தின், பயன்பாட்டிற்கெனப் பெறப்பட்டிருந்த புத்தகங்கள், சஞ்சிகைகள், வீடியோக்கள் என்பவற்றில் குறிப்பிடத்தக் கவை சங்கரண்ணையின் முயற்சியினாலும் நேரடி ஈடுபாட்டாலும் பெறப் பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

இராணுவ அறிவியல் வளர்ச்சியிற் சங்கரண்ணையின் பங்கு அளப்பரியது.

*- பா. மாதவன் மாஸ்டர் -*
*புவனர்ய்வுத்துறை*

# சீருடை

இந்திய இராணுவத்துடனான யுத்தம் ஆரம்பிக்க முன்பு நகர்ப்புறச் செயற்பாடுகளாகவே விடுதலைப் புலிகளின் செயற்பாடுகள் காணப்பட்டன. இதனால் விடுதலைப் புலி உறுப்பினர்கள் தமது பயன்பாட்டிற் சிவில் உடைகளையே பெரும்பாலும் வைத்திருந்தனர்.

இந்திய இராணுவத்தினருடனான யுத்தம் ஆரம்பித்ததைத் தொடர்ந்து, விடுதலைப் புலிகளின் பெரும்பாலான செயற்பாடுகள் வன்னிக் காட்டுப் பகுதிக்குட் கொண்டுவரப்பட்டன. காட்டு வாழ்க்கைக்கும் இராணுவ அனுகூலத்திற்குமாகப் புலிகளின் உடைகளிற் கவனம் செலுத்த வேண்டிய தேவை ஏற்பட்டது. காட்டு வாழ்விற்குச் சூழலுடன் பொருந்தக்கூடியவாறான நிற உடைகளைப் பயன்படுத்த வேண்டிய அவசியமும் ஏற்பட்டது. சிவில் உடைகளாயினும் காட்டுடன் பொருந்தக்கூடியனவும் தூரத்திற்குத் தென்படாதனவுமான கடும் நிறமுடையவையாக அமைய வேண்டிய தேவை காணப்பட்டது. ஆயினும், காட்டு வாழ்க்கையின் கடினத்திற்குச் சிவில் உடைகளை உருவாக்கப் பயன்பட்ட துணி வகைகள் ஈடுகொடுக்கத் தவறின. மிக விரைவிற் பழுதடைந்து கிழிந்தன.

இக்குறைபாட்டை ஈடுசெய்யச் சீருடைத்துணி பெறும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. விடுதலைப் புலிகளுக்கெனத் தனிச் சீருடை இல்லாத காலம். இறுதியில் இந்திய இராணுவம் பயன்படுத்தும் உருமறைப்புச் சீருடைத்துணி மூலம் சீருடைகளை உருவாக்கும்போது இந்திய இராணுவத்தினரையும் புலிப் போராளிகளையும் இனங்காண்பதில் ஏற்படும் மயக்கத்தைப் போக்க புதிய வடிவம் அறிமுகமாகிறது. இவ் வடிவமைப்பை உருவாக்குவதிலும் அமுலாக்குவதிலும் பெரும் பங்கு வகித்தவர் சங்கரண்ணை.

சீருடையின் கையில் முழங்கைக்குக் கீழாகவும், காலில் முழங்காலிற்குக் கீழாகவும் கறுப்பு நிறத் துணியைப் பயன்படுத்தி சீருடை வேறுபடுத்தப்பட்டது.

- சுயாகி -
லெப்.கேணல் ராதா
விமான்
எதிர்ப்புப் படையணி

# கிட்டுப் படையணி

1995 இன் பிற்பகுதி.
மாரி மூசி இறைத்த காலம்.

காட்டு அனுபவம் அற்ற நானும் இன்னும் சில போராளிகளும் எங்களது பொறுப்பாளர் சங்கரண்ணையும் காட்டிற்குட் கூடாரமமைத்துத் தங்கினோம்.

விலங்குகள் எங்களுக்குத் தீங்கிழைக்க முயலவில்லை: எதிரியும் எம்மை அச்சுறுத்தவில்லை.
ஆனால் காடு பயமுறுத்தியது.
அதன் மயான அமைதியும் வனாந்தரத் தனிமையும் எம்மை வாட்டி வதைத்தன.

சமைத்தே சாப்பிடவேண்டும்.
எங்களிற் பலருக்குச் சமைக்கவே தெரியாது. தாயைப் போலச் சங்கரண்ணை செயற்பட்டார், சமைத்தார், சமைக்கக் கற்றுக்கொடுத்தார்.

காட்டைக் கற்பித்துப் பயத்தை அகற்றினார். காட்டையே எமது ஊர்போல் உணரவைத்தார்.

பின்னர் ஒரு நாள் தலைவர் அவர்கள் எமது காட்டு முகாமிற்கு வந்தார்.

புலிக்கொடிக் கம்பத்தின் அருகே ஒன்றுகூடினோம்.
சங்கரண்ணையுடன் எமக்கு முன்னால் நின்ற தலைவர் அவர்கள் புதிய படையணியின் பிறப்பைச் சொன்னார்.

சங்கரண்ணைதான் அதற்குப் பொறுப்பாளர் என்றார். நாங்கள், அதன் வீரர்கள் என்றார். கிட்டுப் படையணி என அதற்குப் பெயர் சூட்டினார்.

*- செல்வராசா -*

# பதிவேடுகள்

கறுப்புக் கை, கறுப்புக் கால் மரங்களுக்கிடையே தெரிந்தாற் போதும். எல்லோரும் விழிப்புடன்கூடிய எச்சரிக்கையடைந்து விடுவார்கள்.

வட்டத் தொப்பியுடன் உருமறைப்பு உடையின் கைப்பகுதியும் முழங்காற் கீழ்ப்பகுதியும் கறுப்புத் துணியினாலான சீருடையுடனே சங் கரண்ணை வருவார் என்பதாலேயே விழிப்புடனான அந்த எச்சரிக்கை.

முகாமைச் சுற்றி வருவதே அவரது பிரதான கடமை. பயிற்சி மற் றும் விளையாட்டு மைதானத்தில் தடயங்கள் உண்டா, காவற்கடமை உரிய இடங்களில் விடப்பட்டுள்ளதா, சமையற் கூடத்தில் சத்தம் வரு கிறதா, புகை வருகிறதா, தண்ணீர் நன்கு கொதிக்க வைக்கப்படுகிறதா, கிணற்றடியில் எவர் நிற்கிறார், குளிப்பதற்கு ஒதுக்கப்பட்ட நேரத்திற்குப் பின்பும் எவரும் நிற்கிறார்களா, தங்கு கொட்டில்களில் உடைகள் ஒழுங் காகப் போடப்பட்டுள்ளனவா, எவராவது கொடுக்கப்பட்ட வேலையை விட்டு விட்டு அரட்டை அடிக்கிறார்களா, மலசலகூடம் ஒழுங்காக உள்ளதா, மலேரியாத் தடுப்பு போடப்பட்டதா எனக் கேட்டறிவார்.

இவ்வாறாக எல்லாவற்றையும் அவதானித்து சிக்கல்கள், பிரச்சி னைகள், நடைமுறையைப் பின்பற்றாமை எல்லாம் குறித்துக்கொள்வார்.

இவற்றை அமுலாக்குவதில் தவறுகள், சிக்கல்கள் ஏற்பட்டு வந் ததை அவதானித்த சங்கரண்ணை அவற்றைச் சீர்ப்படுத்தி அமுலாக்கப் பதிவேடுகளை அறிமுகப்படுத்தினார்.

மலேரியாத் தடுப்புப் போட்டமை ஒவ்வொருவர் பெயரிலும் பதியப் பட்டிருக்கவேண்டும். காவற் கடமை எந்த நேரத்திற்கு எவர், இன்று சமையல் யார், தண்ணி சுடவைப்பது யார், இவ்வாறாக ஆரம்பமான இயக்கத்தின் பதிவேட்டு நடைமுறை இன்றும் தொடர்கிறது.

- சி.சோ. பானு -
குட்டிசிறி பீரங்கிப் படையணி

# தளராத நிதானம்

இலங்கை இந்திய ஒப்பந்தத்தின் பின் இரு அரசுகளாலும் வழங்கப்பட்ட உறுதி மொழிகள் நிறைவேற்றப்படாது இழுத்தடிக்கப்பட்டன. சிங்கள அரசு தமிழ் மக்களுக்கெதிரான செயற்பாடுகளை முடுக்கிவிட்டது. இவற்றிற்குத் தீர்வுதரக்கோரி திலீபன் உண்ணாவிரதம் மேற்கொண்டான். கோரிக்கைகளுக்குத் தகுந்த பதில்கள் தரப்படாது இழுத்தடிக்கப்பட்டுத் திலீபனின் உயிர் குடிக்கப்படுகிறது. மக்கள் பேரெழுச்சி கொள்கின் றார்கள்.

தொடர்ந்து தமிழகத்திலிருந்து விடுதலைப் புலிகளின் அலுவலக ஆவணங்களுடன் வருகை தந்த 'கடற்புறா' சிங்களக் கடற்படையாற் கைப்பற்றப்படுகிறது. அவர்களை விடுவிக்க இந்தியப் படைகள் தவறுகின்றன. சிங்களப்படை, கைதுசெய்யப்பட்ட விடுதலைப் புலிகளைக் கொழும்பு கொண்டுசெல்ல முனைகிறது. விடுதலைப் புலிகளின் மரபு பேணப்படுகிறது. சங்கரண்ணையின் உடன்பிறந்த தம்பி கரனும் ஒருவர்.

மக்களை விழிப்புறச் செய்யும் பத்திரிகை ஊடகங்கள் இந்தியப் படைகளின் கண்களை உறுத்துகின்றன. பத்திரிகைக் காரியாலயங்கள் இரவோடிரவாக இந்தியப் படையின் குண்டுத் தாக்குதலால் நிர்மூலம் செய்யப்படுகின்றன.

இந்தியப் படைக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையே துப்பாக்கி வேட்டுகளாகத் தொடங்கிய சண்டை இந்தியப் படையின் கோரச் 'செல்' தாக்குதலினாற் போராகப் பரிணமிக்கிறது.

யாழ்ப்பாணப் பல்கலைக்கழக முன்றலில் இந்தியப் படையின் ஒரு பகுதியினர் உலங்குவானூர்தியாற் தரையிறக்கப்பட்டனர். மற்றொரு பகுதியினர் தலைவர் அவர்களின் இருப்பிடத்தைக் குறிவைத்து ராங்கிகளுடன் நகர்ந்தனர். எங்கும் யுத்தம் வெடித்தது. இந்திய இராணுவம் தென்பட்ட இடங்களிலெல்லாம் சண்டை, சண்டை.

மழைபோற் செல்கள் வீசப்பட்டன. எங்கும் ஒரே பதற்றம். மக்கள் கையில் அகப்பட்டவற்றுடன் ஏதோ திசையிற் போய்கொண்டிருந் தனர். ஆங்காங்கே காயப்பட்டவர்கள் காணப்பட்டனர். உயிரற்ற உடல்கள் எங்கும் சிதறிக் கிடந்தன.

சுதுமலை அம்மன் கோவிலடியிற் சங்கரண்ணை தலைமையில் ஒரு தாக்குதலணி நின்றது. சங்கரண்ணை தாடியுடன் காணப்பட்டார். உடன்பிறந்த சகோதரனின் இழப்பின் பிரதிபலிப்போ சவரம் செய்வதற்குக் கூட நேரமற்ற சூழ்நிலையோ தெரியவில்லை.

ஆனால், இவ்வளவிற்கும் மத்தியில் தளராத நிதானத்துடனும் கையில் டிஜிற்றல் வானொலிப் பெட்டியுடனும் எப்பொழுதும் செய்தி களைக் கேட்டுப் புதினங்களைக் கூறியபடியேயிருந்தார்.

- பிருந்தன் -

படைய அறிவியற் கல்லூரி

# 'செல்' நடுவிலும்...

1987 ஆம் ஆண்டு எமது போராட்ட வரலாற்றிற் பல திருப்பங்களைச் சந்தித்த ஆண்டு. இந்தியத் தலையீடு, இலங்கை இந்திய ஒப்பந்தம், இந்திய அரசுடன் பேச்சுக்கள், சமாதானத்தின் பெயரால் இந்திய படை தமிழீழ மண்ணில் தரை இறக்கம், ஆயுத ஒப்படைப்பு, சிறிலங்கா அரசின் அத்துமீறல்கள், திலீபனின் உண்ணா நோன்பும் வீரச்சாவும், இனத்துரோகக் குழுக்களின் அடாவடித்தனங்கள், மக்களின் துயரும் எழுச்சியும், தளபதிகள் புலேந்திரன், குமரப்பா உட்படப் போராளிகள் கைதும் பன்னிருவர் வீரச்சாவும் என நிகழ்ச்சிகள் நீண்டு சென்றன.

இந்தியப் படையுடன் சண்டை தொடங்கிவிட்டது. மகளிர் அணிப் பிரிவொன்று சுதுமலை அம்மன் கோவில் முன்றலில் நிலைகொண்டிருந்தது. சண்டை சிற்சில இடங்களில் ஆரம்பித்து விட்டது என நாம் அறிந்தோம்.

நாம் இருந்த இடத்திற்கு விரைந்து வந்தார் சங்கரண்ணை. எல்லோரையும் ஒன்றுதிரட்டினார். நடக்கும் சண்டையின் பரிமாணத்தையும் நடக்கப்போகும் சண்டையின் பரிமாணத்தையும் சுருக்கமாக, ஆனால் தெளிவாகக் கூறினார். வரைபடத்தை விரித்தார். பல்வேறு இடங்களைக் குறிப்பிட்டு, விளக்கவுரையைத் தொடங்கினார். இந்திய இராணுவத்தின் 'செல்' வீச்சும் தொடங்கிவிட்டது.

எல்லோரையும் பாதுகாப்பான இடங்களுக்கு அனுப்பிவைத்தார். தொடர்ந்தது 'செல் வீச்சு'. எல்லோரும் ஒன்றாக இருக்கக்கூடிய பாதுகாப்பான இடத்தைத் தெரிவுசெய்தார். அங்கு அனைவரையும் அழைத்து மீண்டும் வரைபடத்தை விரித்தார். சங்கரண்ணையின் மென்மையான குரலுக்குக் கொடூரமான 'செல்' சத்தம் பின்னணி இசையாக அமைந்தது.

வரைபடத்தில் இராணுவம் வரக்கூடிய பாதைகளைக் குறிப்பிட்டுக் காட்டினார். நிலையமைத்து இருக்கவேண்டிய இடங்களைச் சுட்டிக் காட்டினார். அப்பிரதேசத்தின் முழுநிலைமையையும் எம் மனக் கண்முன் நிறுத்தினார்.

சங்கரண்ணை வகுப்பெடுத்த அடுத்த நாள், அவர் தெரிவித்தபடி அப்பகுதியுள் இராணுவம் நுழைந்தது. எதிர்பார்த்தவாறே சண்டையும் தொடங்கியது.

- ஞ. நொய்லின் -
முன்னாட் போராளி

# சதுரங்கம்

சதுரங்க விளையாட்டு இன்று சர்வதேசப் பிரபல்யம் பெற்ற விளையாட்டுக்களில் ஒன்று. விளையாட்டுக் காய்களில் அரசனாகக் குறிக்கப்பட்ட காயை முற்றுகைக்குட்படுத்துபவரே வெற்றிபெறுவார். முற்றுகையிடும்போது முற்றுகையிடுபவர் 'செக்' என்று கூறி முற்றுகை யைப் பிரகடனப்படுத்துவார்.

நடவடிக்கை 'செக்மேற்', மணலாற்றில் தலைவர் அவர்களைக் குறிவைத்த பிரபல்யமான பாரிய இராணுவ நடவடிக்கையாகும். மணலாற் றுக் காட்டைச் சல்லடை போடத் தொடங்கியது இந்திய இராணுவம். விடுதலைப் புலிகளின் கனரக இயந்திரத் துப்பாக்கிகள் உட்பட அனைத் துத் துப்பாக்கிகளும், பொறிவெடிகளும் எல்லாத் திசைகளிலும் முழங்கிய வண்ணமிருந்தன.

போர் களைகட்டியது. போர்த் தந்திரோபாயங்கள் பலவற்றை இந்திய இராணுவம் கையாண்டது. தந்திரோபாயங்களுக்குப் பக்கபல மாகப் பரப்புரை யுக்திகளையும் இந்திய இராணுவம் மேற்கொண்டு வந்தது.

இவ்வேளையில் யுத்த களத்திற் பல்வேறு முறியடிப்பு யுக்திகளை விடுதலைப் புலிகள் மேற்கொண்டு வந்தனர். நகர்ந்து வரும் இராணுவ அணியினர் குறிப்பிட்ட இதயப் பிரதேசங்களை அண்மிக்க முன்னர் பல் வேறு திசைதிருப்பல் நடவடிக்கைகளை விடுதலைப் புலிகள் மேற் கொள்ளவேண்டி இருந்தது.

இந்திய இராணுவ அணி ஒன்று ஒருபுறத்தில் இருந்து நகர்ந்து வந்துகொண்டிருந்தது. சங்கரண்ணை எவ்வாறோ தெரிந்துகொண்டார். எம்மில் நால்வர் தயார்செய்யப்பட்டோம். போகும் வழி, தாக்குதல் நடாத்தப்படவேண்டிய இடம், அப்பிரதேசத்தின் அமைப்பு, பின்வாங்கி வரவேண்டிய பாதை எல்லாவற்றையும் துல்லியமாகச் சங்கரண்ணை விளக்கினார்.

நாம் சென்றது டொலர் பாம், கென்ற் பாம் பாதை. அப்பிர தேசத்திற் புலிப்போராளிகள் எவரும் இல்லை. முகாம்களும் இல்லை. அவ்விடத்தில் வைத்துத் தாக்குதல் செய்துவிட்டு, முகாம்கள் அற்ற பிரதேசத்தை நோக்கிப் பின்வாங்கித் திசைதிருப்பினோம். இத்தாக்குதல் பிரதான இராணுவத்தைத் திசை திருப்புவதற்கேயாகும். நாம் சண்டை யைத் தொடங்கிப் பின்வாங்கிச் செல்ல அப்பாதையைத் தொடர்ந்தது இந்திய இராணுவம். இந்திய இராணுவ நகர்வைத் திசைமாற்றிவிட்டோம். இதுவும் போர்ச் சதுரங்க விளையாட்டின் ஒரு பகுதியே.

- *மா.சீத்தா (விசாலி)*
*புலனாய்வுத்துறை*

# நல்ல வரவேற்பு

இந்திய இராணுவ இருளில் இருந்து எமக்கு விடிவைத் தந்த மண் மணலாற்றுமண். அந்த மண்ணில் மகளிர் படையணி அமைத்திருந்த முகாம் 'விடியல்'. முகாமிற்கான தேவைப் பொருட்களைப் பெறுவதற்கு நாள்தோறும் நீண்ட தூரம் நடைப்பயணம் ஒன்றை மேற்கொள்ள வேண்டி இருந்தது. இந்திய இராணுவத்தின் செயற்பாடுகள் இருந்த அக்காலப் பகுதியில் நடைப்பயணத்தின்போது மிக எச்சரிக்கையுடனேயே எல்லோரும் செயற்படுவோம்.

மேஜர் சோதியா, முதலாவது மகளிர் படையணியின் முதல் தளபதியாக இருந்து நோய் காரணமாகச் சாவைத் தழுவிக்கொண்டவர். மகளிர் படையணியின் தோற்றக் காலத்தில் மிகச் சிறந்த வழிகாட்டி. அவரது பொறுப்பில் விடியல் முகாமில் அவருடனேயே நாமும் இருந் தோம்.

வழமையான தேவைக்காக அன்றும் நீண்ட நடைப்பயணத்தை மேற்கொண்டோம். களைப்புறும் வேளைகளில் தகுந்த காவற்கடமை ஏற்பாட்டுடன் ஓய்வெடுக்கமுடியும். அன்றும் அவ்வாறே காவற்கடமை களை ஒழுங்குபடுத்திவிட்டு ஓய்வெடுத்துக் கொண்டிருந்தோம். சிறிது நேர ஓய்வின் பின் புறப்பட ஆயத்தமானோம். காவற்கடமையில் நின்ற வர்கள் பின்வாங்கிப் பொருட்களைத் தூக்குவதற்கான ஏற்பாடுகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். சிலர் பயணத்தைத் தொடர்வதற்கு ஆயத்த மாகிக்கொண்டும் சிலர் இருந்துகொண்டே பொருட்களைச் சரிசெய்து கொண்டும் இருந்தவேளையில், யாரோ ஏதோ நகைச்சுவையாகச் சொல்ல வெடித்தது சிரிப்பொலி.

அந்த நேரம் பார்த்துச் சங்கரண்ணை அங்கு வந்துவிட்டார். சிரித்த வர்கள் ஏன் ஒட்டுமொத்தத்தில் எல்லோருமே துரு துருவென வி[illegible]த்தனர். இந்த நேரம் பார்த்தா சங்கரண்ணை எங்களைக் கா[illegible]ணவேண்டும்

காவற்கடமை இல்லை, ஓய்வெடுத்தவர்கள் இருந்த இடத்திலேயே இருக்கிறார்கள், அதற்குள் சிரிப்பு என்று எண்ணியிருப்பாரோ? "யார் பொறுப்பாக வந்தது?" என்றார். என்னைக் காட்டிவிட்டார்கள். சோதியா வைச் சந்திக்கிறேன் என்ற பதில் மட்டும் வந்தது.

நாம் போகுமுன் தகவல் போய்விட்டது. விடியலில் அன்று எமக்கு நல்ல வரவேற்பு.

விதுஷா
கட்டளைத் தளபதி

# வியத்தகு மனிதர்

ஓயாத 'செல்' மழைக்கிடையே பறக்கும் டாங்கி எம்.ஐ. 24 ரக உலங்கு வானூர்தி 250 கிலோ குண்டுகளை வீசிக்கொண்டிருந்தது. இந்திய இராணுவப் படையணிகள் குறுக்குமறுக்காக நகர்ந்து திரிந்தன. குண்டுவீச்சுக்களின் விளைவாக உருவாகும் 'மோட்டைகளும்' 'வெட்டைகளும்' காட்டின் இயற்கை வனப்பை மாற்றிவிட்டன. இதுதான் அன்றைய மணலாறு.

அந்த இதய மண், எங்கள் புனிதப் போரின் இதய ஆத்மாவைக் காத்து நின்றது. அந்த இயற்கை வனப் பகுதியில் நிகழும் சிறுதவறே எம்மை அழித்துவிடும் என்ற நிலை அங்கிருந்தது.

அமைக்கப்பட்டிருந்த முகாம்களிலிருந்து அநாவசியமாக யாரும் எங்கும் செல்வதில்லை. உணவுப்பொருள் மற்றும் அத்தியாவசியப் பொருட்களை எடுத்துவரவும் வேவுச் செயற்பாடுகளுக்கும் என இரு தேவைகளுக்கே பெரும்பாலும் வெளிச்செல்வதுண்டு.

தடயம் விடுவது எம்மை நாமே எதிரியிடம் காட்டிக்கொடுக்கும் சிக்கலாக இருந்தது. வெளிச்சென்றாலும் உள்வந்தாலும் சங்கரண்ணை ஓர் உலாச் செல்வார். எப்படியோ அவரது கண்களில் தவறுகள் பட்டு விடும்.

வேவு வேலைகளுக்காகவோ வேறு நகர்வு வேலைகளுக்காகவோ வெளிச்செல்பவர்கள், தேவை கருதி ஆங்காங்கே சில இடங்களில் 'பிஸ்கட்', 'சீஸ் டின்', 'கன்டோஸ்' போன்றவற்றைப் புதைத்து மிக அவதானமாக உருமறைப்பும் செய்திருப்பர். ஆனால் சிறு துளி[illegible] தடயமே சங்கரண்ணையின் பார்வையிற் பட்டுவிடும். மீண்டும் அவர் உரு மறைப்பார். விடயமும் அண்ணையிடம் வந்துவிடும்.

தவறுவிட்டவர்களை அழைப்பார். தவறுகளை விவரிப்பார். அறிவுரைகள் கூறுவார். தலைவரிடம் தெரிவித்துவிட்டதையும் கூறுவார். போராளிகளின் ஆளுமை பாதிக்கப்படாதவாறும் பார்த்துக்கொள்வார்.

அணி ஏதாவது வெளியே நகர்கிறதென்றால் எங்காவது சென்று மறைந்துகொள்வார். போராளிகள் சரியான இடைவெளி விட்டுச் செல்கிறார்களா, சத்தமின்றி அமைதியாகச் செல்கிறார்களா என்பதைக் கூர்ந்து கவனிப்பார் சங்கரண்ணை.

"எதிரிகளை வெல்பவன் மட்டுமல்ல, எதிரிகளை இலகுவாக வெல்லத் தெரிந்துமிருப்பவனே திறமையான போர்வீரன். அவன் தான் எந்தவொரு தவறையும் செய்துவிடாமலிருப்பதன்மூலம் தனது வெற்றியை உறுதிசெய்து விடுகிறான்!" என்ற போரியல் வல்லுநர்களின் கூற்றிற்குச் செயல்வடிவம் கொடுத்த வியத்தகு மனிதர்.

- *அஜந்தன்* -
*மருத்துவப் பிரிவு*

# அட்டாவதானி

இன்னாருக்கு இதுதான் வேலை என்று வகுக்கப்படவில்லை. வேண்டிய உணவுப்பொருள்களைக் காவுவது, கிணறு வெட்டுவது, உரு மறைப்பது, வேவு பார்ப்பது, சண்டையிடுவது எனத் தொடரும் வெவ்வேறு வேலைகள். இதுதான் இந்திய இராணுவக் காலத்தின் மணலாற்று வாழ்க்கை.

மணலாற்றின் இயற்கையுடன் ஒன்றிக்கொண்டவர் சங்கரண்ணை. எவ்விடயத்திலும் அவரது பார்வை பட்டிருக்கும். எச்செயற்பாட்டிலும் அவரது கருத்துக்கள் முன்னிற்கும். எவ்வேலைத்திட்டத்திலும் அவரும் ஒருவராகவே நிற்பார்.

அவர் நிற்குமிடங்களில் நடைபெறும் வேலைகள் செம்மையாகவே இருக்கும். வேலையுடன் மாத்திரம் நின்றுவிடாது பல்வேறு விடயங்களில் அவரின் பேச்சுக்கள் பரந்து விரிந்து செல்லும். காட்டின் இயற்கை, திசையறிதல், மரங்கள், நட்சத்திரங்கள், அறிவியல், சர்வதேச விவகாரம், தலைவரைப் பற்றி என்று செல்லும்.

அன்று உருமறைத்தல் வேலையொன்றில் ஈடுபட்டிருந்தோம். வழமைபோற் சங்கரண்ணையின் கண்பார்வை அங்கும் மேலே, கீழே, சுற்றுமுற்றும் எனப் பல்வேறு திசைகளில் உழன்று கொண்டிருந்தது.

அந்தந்த மரங்களின் கீழ் அந்தந்த இலைகள் இருக்கின்றனவா என்பது வரை அவரது உருமறைத்தல் அவதானிப்பு இருந்தது. எமது கண்கள், கைகள், ஏன் அனைத்துப் புலன்களும் உருமறைத்தல் வேலை யிலேயே முழுக்கவனமுமாக இருந்தன.

சடுதியாகச் சங்கரண்ணையின் கேள்விக்கணை ஒன்று எம்மை நோக்கி வந்தது. மேலே பறந்து கொண்டிருப்பது 'பைற்றரா'? 'பெல்லா'? (உலங்குவானூர்திகளின் வகைகளின் பெயர்கள்) நான் கவனிக்க வேயில்லை. வேலை அவசரத்தில் உடனடியாக 'பெல்' என பதில் கூறிவிட்டேன்.

சங்கரண்ணையின் சிரிப்பு எனது தவறை உணர்த்தியது. மேலே சென்றுகொண்டிருந்ததோ ஒரு பயணிகள் விமானம். "ஒரு போராளி அட்டாவதானியாக இருக்கவேண்டும்" எனத் தொடங்கியது சங்கரண்ணையின் அறிவுறுத்தல்.

"அண்ணையிடம் இண்டைக்குச் சொல்லுவேன்" என முடிந்தது அவரது அறிவுரை.

- ஜான்சி (தாரணி) -
சோதியா படையணி



# புத்திக்கூர்மை

மணலாற்றுக் காட்டுப் பகுதி எங்கும் அந்நியப் பட்டாளத்தின் காலடிகள் காணப்படுகின்றன. ஆயிரக்கணக்கில் இந்திய இராணுவம் குவிக்கப்படுகிறது.

தலைவர் அவர்களைக் குறிவைத்துப் பாரிய இராணுவ நட வடிக்கை ஒன்றை இந்திய இராணுவ, அரசியல் தலைமைகள் பல்வேறு வியூகங்களை அமைத்து முடுக்கிவிட்ட காலப்பகுதி.

"ஜொனி", இந்திய இராணுவத்திற்குச் சிம்மசொப்பனமாக விளங் கிய மிதிவெடி. அன்றைய இந்திய அரசின் சூழ்ச்சிக்குப் பலியாகி வன் னிக் காட்டுப் பகுதியிலே மீளாத் துயில்கொண்ட ஜொனியின் நினைவாக உருப்பெற்ற மிதிவெடி.

இந்திய இராணுவ நகர்வைத் தாமதப்படுத்த, தடுத்து நிறுத்த எங்கும் விதைக்கப்பட்ட 'ஜொனி', இறுதியிலே இந்திய இராணுவத்தின் இயலாமையை ஒப்புக்கொள்ள வைத்தது.

"ஜொனி" விதைக்கப்பட்ட வரைபடத்தை முழுமையாக அறிந்தவர் களால் மட்டுமே வழிகாட்டியாகச் செயற்பட்டு அணிகளை நகர்த்தமுடியும்.

சடுதியாக நடந்த இந்திய இராணுவச் சுற்றிவளைப்பால் தங்கு மிடத்திலிருந்து அவசரமாக அணிகள் வெளியேறவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

சங்கரண்ணையின் தலைமையில் ஓர் அணி திசைமாறிவிட்டது என்ற ஏக்கம். சேரவேண்டிய உரிய இடத்தை வந்தடையவில்லை. தலைவர் அவர்களும் மிகுந்த தவிப்புடன் காத்திருக்கின்றார். "ஜொனி" வெடி... மேலும் பொறிவெடிகள்... எல்லோர் நெஞ்சங்களும் படபடத்துக் கொள்கின்றன.

பாதையொன்றிலே யானையொன்று மிதிவெடியில் அகப்பட்டிருந்தது சங்கரண்ணையின் புத்திக்கூர்மையிற் பொறி தட்டிக்கொள்கிறது.

தடயத்தினை ஆதாரமாகக் கொள்கிறார். மிதிவெடிகள் வைக்கப்பட்டுள்ள பரப்புக்களின் போக்கினை இனம் கண்டுகொள்கிறார். நிதானிக்கிறார். ஆராய்கிறார்.

சில மணிகளின் பின் அவருக்கேயுரிய சிரிப்புடன் எங்களை அடைந்துவிட்டார்.

சி.சேர. பாவு
குட்டிசிறி சீரங்கப் படையணி

# இதயத்தினுள்...

நித்தியகுளம். இந்திய இராணுவம் தன் கண்களைக் குத்திக் கொண்ட இடம். தலைவர் பிரபாகரன் அவர்களைச் சுற்றிவளைத்துவிட் டோம். எமது இடுக்கிப் பிடிக்குள் புலிகளின் தலைவர். பல தலையங் கங்களிற் பரப்புரை பத்திரிகைகளில் கொட்டை எழுத்திற் செய்திகள்.

சங்கரண்ணை தலைமையிலான அணியில் லெப்.கேணல் நவம் (டடி), மேஜர் சலீம், கப்டன் சுபேசன் இவர்களுடன் நானும் சேர்ந்து புறப் பட்டேன்.

நீண்ட தூரப் பயணம். சமையற்பொருட்கள், தண்ணீர் எல்லாம் காவு தடியில். எங்கும் இந்திய இராணுவம் பதுங்கி இருக்கக்கூடிய சூழல். "வலது பொக்கற்றுக்குள் கொம்பாஸ் இருக்கு. இடது பக்கத் திலை வரைபடம் இருக்கு. எனக்கு ஏதாவது நடந்தால், இதை எடுத்துத் தம்பியிட்டை (தலைவர் அவர்களிடம்) கொடுக்கிறது உன்ரை பொறுப்பு" பயணத்தின்போது அடிக்கடி சங்கரண்ணை கூறிக்கொண்டு நடந்தார்.

நித்தியகுளத்தை அடைந்துவிட்டோம். பெருமூச்சு விட்டாலே இந் திய இராணுவத்திற்குக் கேட்டுவிடும் அவ்வளவு அருகில் இந்திய இராணுவம்.

முகாமினுள் வேவு பார்க்க வேண்டும். சங்கரண்ணை, லெப்.கேணல் நவத்துடன் என்னையும் அழைத்துச் செல்கிறார். இரகசிய நகர்வு. அமைதியான நகர்வு. பல விபரங்கள் சங்கரண்ணையின் மூளையினுள் புகுந்து கொண்டன. திரும்பி வந்தபொழுது குடிநீர் முடிந்துவிட்டது. முகாமினுட் சென்றே மிக இரகசியமாகக் குடிநீரை நிரப்பி வந்தோம்.

எதையும் தொடுகை உணர்வாலேயே அறிந்துகொள்ளவேண்டிய அளவுக்கு, அருகில் இருப்பதையே பார்த்தறிய முடியாத அளவுக்குக்கும் மிருட்டு. மாறி மாறிப் படுத்துத் தூங்கிக்கொள்வதென முடிவெடுத்தோம். முகாமிற்கு மிக மிக அருகில் அல்லவா. சங்கரண்ணையின் [illegible]றட்டைச் சத்தம் குறித்துப் பேச்சு வந்தது. சங்கரண்ணை இ[illegible]வு தூங்கவே[illegible]யில்லை.

விடிய முதல் அங்கிருந்து நகரத் தொடங்கினோம். சிறிது தூரம் சென்றிருப்போம். வேறுபட்ட சத்தம். சற்று மெதுவாக நகர்ந்து பார்த்த போது, இந்திய இராணுவத்தினர் படுத்திருந்தனர். இருவர் நெருப்பு மூட்டிக் கொண்டிருந்தனர்.

மெதுவாகப் பின்னகர்ந்தோம். திசையை மாற்றி நகர்வை மேற் கொண்டோம். வெட்டையொன்றைக் கடக்க வேண்டும். கடந்தாற் படுத் திருக்கும் இராணுவத்திற்குத் தெரிந்துவிடும். வெட்டைக் கரையில் நின் றோம்.

சற்று நேரத்தில் இந்திய இராணுவம் எமக்கருகால் வருகிறது. அப்படியே அசையாது இருக்கும் படி சங்கரண்ணை சைகை செய்கிறார். சற்றுத் தள்ளி நின்ற சுபேசன், இந்திய இராணுவம் அண்மிக்கவே மெதுவாகப் பின்னோக்கி நகர்ந்து கொள்கின்றார்.

இந்திய இராணுவம் அங்கிருந்து அகன்றதும் சுபேசனைத் தேடுகி றோம். காணவில்லை. 'டப்ளின்' முகாமிற்கு வரும்படி சங்கரண்ணைக் குத் தகவல் வருகிறது. அங்குச் சென்றபோது, இருகால்களும் மிதி வெடியிற் சிக்கவே, சயனைட் உட்கொண்டு சுபேசன் வீரச்சாவடைந்த செய்தி கிடைக்கிறது.

மிகத் துல்லியமாக இராணுவ முகாமின் இதயத்தினுள்ளே வேவைச் சங்கரண்ணை முடித்திருந்த போதும், சுபேசனின் இழப்பு சங் கரண்ணையின் இதயத்தினுட் கனத்தது.

- ஆட்டி -
ஜெயந்தன் படையணி

# மின்னல்

ஆகாயக் கடல் வெளிச்சமர். ஆனையிறவுப் படைத்தளம் மீதான முற்றுகைச் சமர். விடுதலைப் புலிகளின் முதலாவது மரபுவழிப் படையெடுப்பு என்றே கூறலாம். யாழ்க் குடாவையும், வன்னிப் பெருநிலப்பரப்பையும் இணைக்கும் கழுத்துப் போன்ற கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த ஆனையிறவு முகாம், 1991 ஆம் ஆண்டு ஆ.க.வெ. சமர்மூலம் வீழ்த்தப்படாதபோதும் ஒன்பது ஆண்டுகளின் பின் ஓயாத அலைகள் மூன்று நடவடிக்கையிற் பூரணமாக வெற்றி கொள்ளப்பட்டுள்ளது.

ஆ.க.வெ. சமர் முற்றுப்பெற்ற சில தினங்களில் எம்மண்ணின் இதய பூமியான, வட தென் தமிழீழப் பகுதிகளின் இணைப்புப் பாலமான மணலாற்று மண்மீது சிங்கள இராணுவத்தின் பாரிய படையெடுப்பு ஆரம்பமாகியது. சிங்கள இராணுவம் தனது முழுப்பலமும் கொண்டு மேற்கொண்ட இப்படையெடுப்பிற்கு 'மின்னல்' எனப் பெயரிட்டிருந்தது.

விமானக் குண்டுவீச்சுக்கள், உலங்குவானூர்திகளின் கடுமையான தாக்குதல்கள், ஆட்டிலறிப் பீரங்கிகளின் மோசமான செல்வீச்சுகள், மழையெனப் பொழிந்த மோட்டார்க் குண்டுத் தாக்குதல்கள், இராணுவக் கனரக வாகனங்களில் இருந்து செயற்பட்ட கனரக ஆயுதங்களின் சடசடப்புக்கள் கானகத்தைத் துவம்சம் செய்தன.

மின்னற் சண்டையின் பரிமாணத்தை முற்றாக விளங்கப்படுத்த முடியாது. மணலாற்றுப் பாதையை மீண்டும் தவிர்க்க வேண்டியதாயிற்று. காட்டை ஊடறுத்த நகர்வுகளே மீண்டும் கைகொடுத்தன. சங்கரண்ணை 'மின்னல்' எதிர்ச்சமரின் பின்னணி நிர்வாகங்கள் அனைத்திற்கும் பொறுப்பாக நின்று செயற்பட்டார்.

விநியோகச் செயற்றிட்டங்கள் அனைத்தையும் ஒழுங்குபடுத்தி, விநியோக நடைமுறைகளை இலகுவாக்கினார். காயப்பட்டவர்களைச் சண்டைக் களத்திலிருந்தும் அப்புறப்படுத்துவதை மிக வேகமாகவும் பாதுகாப்பாகவும் செயற்படுத்தினார்.

மணலாற்றுக் காட்டின் நெளிவு சுழிவுகளை மீண்டுமொருமுறை சங்கரண்ணை எங்களுக்கு ஞாபகப்படுத்தியது ஒரு மாத காலம் நீடித்த அந்த 'மின்னல்' சண்டையிலேயேயாகும்.

*- சொர்ணம் -*
*சிறப்புத் தளபதி*
*சிறப்புப் படையணி*

# பளிச்சிட்டது

1991 ஆம் ஆண்டு. புலிகளின் ஆகாயக் கடல் வெளிச் சமர் முற்றுப் பெற்றிருந்தது. புலிகளின் பலத்தைச் சோதிக்க அல்லது பல வீனப்படுத்தச் சிங்கள இராணுவம் படையெடுத்தது. இந்திய இராணுவ ஆக்கிரமிப்பில் தலைவரைக் காத்து நின்ற அந்த மண்மீது 'மின்னல்' எனப் பெயரிடப்பட்ட இராணுவ நடவடிக்கை தொடங்கியது.

யாழ், வன்னி, மன்னார், திருமலை என மாவட்டப் படையணிகள். வேறு சிறப்புப் படையணிகள் எல்லாம் ஏதோவிதத்தில் அச்சமரில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டன. இவை அனைத்தையும் ஒருங்கிணைத்த அந்தச் சமரின் பின்னணி நிர்வாகச் செயற்பாடுகள் அனைத்தையும் சங்கரண் ணையே கவனித்து வந்தார்.

பின்தள ஒருங்கமைப்பு, கள விநியோகம், மருத்துவ செயற்பாட் டிற்கான காவு குழுக்கள் ஒழுங்கமைப்பு, வாகன ஒழுங்கமைப்பு, உணவு விநியோகம், வெடிப்பொருள் விநியோகம் எனப் பரந்து சென்றது அவரது வேலை.

இவை அனைத்திற்குமப்பால் முன்னணிச் சண்டை நிலைவரங் களை அறிந்துகொள்வதுடன், முன்னணிச் சண்டைத் தளபதிகளுக்கு இராணுவ நகர்வுகள் எப்படியெல்லாம் இருக்கக்கூடும் என்ற தனது கணிப் பீட்டை வழங்கி உதவிக் கொண்டிருந்தார்.

காட்டு யுத்தம். விமான எதிர்ப்புத் துப்பாக்கிகளை எளிதாகக் கையாள முடியாத நிலைமை சமர்ப்பிரதேசங்கள் விமானக் குண்டு வீச்சு களுக்கு இலக்காகும் வாய்ப்புகளை அதிகமாக்கியது.

ஒரு மாதகாலம் தொடர்ந்த அந்தச் சமரின் அனைத்துச் செயற் பாடுகளிலும் சங்கரண்ணையின் குரல் பின்னணி இசையாகி நின்றது. அந்த மின்னல் வெளிச்சத்திற் பளிச்சிட்டன சங்கரண்ணையின் பின்தளச் செயற்பாடுகள்.

*- ந. பாண்டியன் -*
*நிதித்துறை*

# மனத்துணிவு

இந்திய இராணுவத்துடனான சண்டைகளிற் பெண்கள் படையணி கெரில்லாத் தாக்குதல்கள், இடைமறிப்புச் சண்டைகள், திசை திருப்பற் சண்டைகள், காட்டுச் சண்டைகள் எனப் பல்வேறுபட்ட சண்டைகளிற் பங்கேற்று அனுபவம் பெற்றிருந்தது.

1990 ஆம் ஆண்டிற் புதிய போராளிகள் பலரை உள்வாங்கிப் பெருவிருட்சமாகக் கிளைகள் பரப்பி வளர்ச்சியடையத் தொடங்கியது. பல சமர்க்களங்களிற் சாதனைகளை நிலை நாட்டி நின்றது.

1991 ஆம் ஆண்டின் ஆ.க.வெ. சமர் முதல் மரபுவழிச் சமராகும். பெண்கள் படையணி பெரும் பங்கேற்ற சமர். இதைத் தொடர்ந்து நிகழ்ந்த 'மின்னல்' மணலாறு மீதான இலங்கை இராணுவத்தின் மிகப் பெரிய படையெடுப்பு நடந்தது. 'மின்னல்' முறியடிப்புச் சமரிற் பல்வேறு படையணிகளுடன் மகளிர் படையணியும் முக்கிய பங்கேற்றது.

'மின்னல்' முறியடிப்புச் சமர் ஒரு காட்டுச் சமர். சமரில் அனுபவம் பெற்ற போராளிகள் பலரை மகளிர் படையணி கொண்டிருந்தபோதும் காட்டுச் சமர் வடிவத்தை அறிந்திராத போராளிகள் பலரையும் கொண்டிருந்தது.

காட்டுச் சமர் வடிவத்தின் முழுமையை அறிய அறிவுத் தந்தையின் தரிசனம் கிட்டியது. காட்டின் நெளிவுசுழிவுகளைப் போதிக்கும் பொறுப்பாளராகச் சங்கரண்ணை செயற்பட்டார். இயற்கை அறிவியலை இலகு மொழியிற் குறுகிய காலத்திற் போதித்து 'மின்னல்' சண்டையில் மகளிர் படையணி முழுப்பொலிவுடன் பங்காற்ற வழிவகுத்தார்.

காட்டு நகர்வு முறைகள், ஏற்படக்கூடிய சிக்கல்கள், அவற்றைத் தவிர்க்கும் வழிமுறைகள், திசைகாட்டியின் பயன்பாடு, அதைப் பயன்படுத்தி வரைபட உதவியுடன் நகர்தல் என்பவற்றைக் கற்பித்தார். நீரோட்டம், சூரியன், நட்சத்திரம் எனப் பல்வேறு இயற்கைகளுடன் எம்மை ஒன்றிப் பழகப் பழக்கினார். திசையறிதல் எமக்கு சாதாரண விடயமாகியது.

காட்டை அறியவைக்கச் சங்கரண்ணை மேற்கொண்ட அயராத உழைப்பு எமக்குப் புதிய அனுபவத்தையும் தன்னம்பிக்கையையும் ஏற் படுத்தியது. எதிரியின் நடவடிக்கையைத் துணிகரமாகவும் நுட்பமாகவும் எதிர்கொள்ள எமக்கு மனத்துணிவைத் தந்தது.

- சி. அசோகா -
அரசியற்றுறை

# அலட்சியம்

'மின்னல்' பளிச்சிட்டு முடிந்தது. தொடரும் முழக்கங்கள் கேட்டுக்கொண்டிருந்தன.

சிங்கள இராணுவத்தின் மணலாறு மீதான 'மின்னல்' ஆக்கிரமிப்பு இராணுவ நடவடிக்கை முடிந்துவிட்டது. ஆனால், விமானக் குண்டு வீச்சுக்கள், பீரங்கிச் செல் தாக்குதல்கள் முற்றுப்பெறவில்லை.

எமது அணியை ஓரிடத்திலிருந்து வேறோர் இடத்திற்கு நகர்த்த வேண்டிய செயற்பாட்டை மாத்திரம் கருத்திலெடுத்து அணி நகர்ந்து கொண்டிருந்தது. போகவேண்டிய இடத்தை மாத்திரம் சிந்தனையிற் பதித்துக்கொண்ட நாங்கள் வேகமாக நகர்ந்து கொண்டிருந்தோம்.

வேவு விமானமொன்று எமது தலைக்குமேலாகச் சுற்றிக்கொண்டிருந்த சத்தம் எமது சிந்தனை அலைகளைத் தொடவில்லை. சிறிலங்காப் படையினர் ஏவிக்கொண்டிருந்த ஆட்டிலறிச் செல்கள் அண்மையில் வீழ்ந்து வெடித்துக்கொண்டிருந்தமை எமக்கு ஐயத்தை ஏற்படுத்தவில்லை. திடீரெனக் கூப்பிட்ட அறிந்த குரல் எமது சிந்தனையைக் கலைத்தது. இதயத்திற்கு அண்மித்து 'செல்' ஒன்று வெடித்த அதிர்வு. ஏனெனில், அது சங்கரண்ணையின் குரல். நடக்கக்கூடாதது ஒன்று நடந்துவிட்டது என்ற உணர்வே உடன் உருவானது. யார் கண்ணிற் படக்கூடாதோ அவர் கண்ணிற் பட்டுவிட்டோம்.

"நான் இப்பவும் அண்ணையைச் சந்திக்கிறனான்" என மெதுவாகத் தொடங்கினார். அவரது பேச்சை நான் சமாளிக்க முற்பட்டேன். அவரிடம் அது பலிப்பதில்லையே. அலட்சியம் என்ற தலையங்கத்தில் ஒரு நீண்ட சொற்பொழிவு என்றே கூறலாம்.

- விதுஷா -
கட்டளைத் தளபதி

# ஒரு பதுங்கித் தாக்குதல்

இந்திய இராணுவ ஆக்கிரமிப்புச் சமர். மணலாறு இதயபூமியாக இருந்து போராட்ட வரலாற்றில் ஓர் அத்தியாயமானது. போரியலில் புதிய பாடமாகியது.

மணலாறு, தமிழீழ மாவட்டங்களில் தனி நிர்வாக மாவட்டமாகப் பரிணமித்த 90 களின் ஆரம்பம். மணலாறு மாவட்டத்திற்கெனத் தனிப் படைப்பிரிவுகள் செயற்பட்ட காலம்.

மாவட்ட மகளிர் அணியில் நானும் ஒருத்தி. பதுங்கித் தாக்குதல் நடவடிக்கைக்காகத் தெரிவுசெய்யப்பட்ட மகளிர் அணியில் எனக்கும் சந்தர்ப்பம் கிட்டியது.

காட்டறிவு அதிகமில்லை. பயிற்சிகள் தொடங்கின. சங்கரண்ணை, லெப்.கேணல் அன்பண்ணை ஆகியோர் பயிற்றுநர்கள். இரவு பகல் எனப் பயிற்சி நடந்தது. காட்டில் நகர்வு, திசையறிதல், எதிரியின் செயற்பாடுகள், இவ்வாறாகப் பல விடயங்கள். சங்கரண்ணை சட்டம்பியரானார்.

நுணுக்கங்களை நுட்பமாகக் கற்றுக்கொடுத்தார். எனது ஆர்வமும் ஊக்கமும் பதினைந்து பேர் கொண்ட குழுவை என்னை வழிநடத்தும்படி சங்கரண்ணையைக் கேட்கவைத்தது.

பொறுப்பாளர் எப்படிச் செயற்படவேண்டும், எப்படி ஆணையிட வேண்டும், எப்படி வழிநடத்த வேண்டும் எனத் தொடர்ந்தன அவரின் அறிவுரைகள்.

அறிவுரைகளை மனத்திற் கொண்டோம். கற்றவற்றிற்குச் செயல் வடிவம் கொடுக்கப் புறப்பட்டோம். முதன் முயற்சி. இராணுவத்திற்கெதிரான பதுங்கித் தாக்குதல் வெற்றியுடன் முடிந்தது. ரீ56 துப்பாக்கிகள் 06, ஏ.கே. எல்.எம்.ஜீ. இயந்திரத் துப்பாக்கி 01, கிரனைட்டுகள், ரவைகள் பலவும் கைவசமாயின.

- *ஜெறோமினி* -
*கடற்புலிகள்;*

# பெண்கள் பயிற்சியிலும்...

அழகிய சிறுகற்பாறைகள், உயர்ந்து அடர்ந்த மரங்கள், சுனைகள், அழகிய சிற்றருவிகள், வளைந்து ஏறி இறங்கிச் செல்லும் பாதைகள், இவை யாவற்றையும் கொண்டது அந்த இயற்கை எழில் பொங்கும் கானகம். ஓடுபாதை, பயிற்சி மைதானம் ஆகியவற்றோடு ஒரு பயிற்சிப் பாசறைக்குரிய அனைத்து வளங்களையும் பெற்று விளங்கியது அக்காட்டினுள் அமைந்திருந்த பெண்கள் அடிப்படைப் பயிற்சிப்பாசறை.

எமது ஆசான் சங்கரண்ணையின் முகாமும் அப்பகுதியிலேயே அமைந்திருந்தது. பாதையாற் செல்வதாயின் பத்துக் கிலோமீற்றர்களுக்குள்ளாகவே இருக்கும். குறுக்காகச் சென்றால் மிகக் குறுகிய தூரந்தான். அவர் அடிக்கடி எமது முகாமிற்கு வரும்விருந்தாளி மட்டுமல்லர், மகளிர் பயிற்சி முகாமின் அனைத்து விடயங்களிலும் ஆலோசகர்; வழிகாட்டி.

தலைவர் அவர்களின் எதிர்பார்ப்பிற்கு ஏற்றாற்போல் பயிற்சி முகாமை வடிவமைக்க, செயற்றிட்டங்களை உருவாக்கப் பெரிதும் பின்புலமாக நின்று செயற்பட்டார். முகாமின் ஒழுங்கமைப்பு, பயிற்சி வகைகள், பயிற்சி கொடுக்கும் முறைகள், பயிற்சி ஆசிரியர்களின் அணுகுமுறைகள், புதிய போராளிகளைக் கையாளும் முறை எனப் பல கோணங்களில் எமக்கு அறிவுரைகள், ஆலோசனைகள் கூறி அப்பயிற்சி முகாமின் வெற்றிக்கு வழிகோலினார்.

அன்பான அணுகுமுறை. பண்பான பேச்சு. கண்டிப்பான செயற்பாடு இவை புதிய போராளிகளையும் கவர்ந்துகொண்டன. சங்கரண்ணையின் வகுப்பெனின், பயிற்சிக்களைப்பு ஒரு பொருட்டாகப் படுவதில்லை. தலைவரைப் பற்றி, அவரது உன்னத சக்தி பற்றி, எடுத்துக்கூறி புதிய போராளிகளுக்குத் தெளிவூட்டுவதிற் பெரும் பங்கு வகித்தார். அவர்களுக்குத் துணிவையும் தன்னம்பிக்கையையும் ஊட்டுவதிற் சாதனையே படைத்தா[illegible] எனக் கூற[illegible]லாம்.

வேறு துறைச் செயற்பாட்டிற் சங்கரண்ணை நின்றபோதும், எமது முகாமிற்கு வரும்போதெல்லாம் தன்னாலியன்ற அறிவூட்டலை வழங்கத் தவறுவதில்லை. எவ்வுதவியைக் கேட்பினும் எக்கடின நிலைமையிலும் மனம் கோணாது செய்து தந்து அப்பயிற்சி முகாமின் வளர்ச்சிக்கு உறுதுணையானார். வசதி வரும்போதெல்லாம் காட்டிறைச்சி, பழங்கள் என ஒரு வழங்கலாளராகவும் சங்கரண்ணை செயற்பட்டார். அப்பெண்கள் பயிற்சி முகாமின் பல்வேறு செயற்பாடுகளிலும் சங்கரண்ணையின் பதிவுகள் காணப்பட்டன.

*- சீ. அசோகா -*
*அரசியற்றுறை*

# ஆண்டு வளையமும் ஆகாய வெள்ளியும்

152மி.மீ. ஆட்டிலறி எறிகணைகள் "ஜெயசிக்குறு" எதிர்ச்சமர்ப் பிரதான கட்டளைப்பீடத்திலிருந்து சில நூறு மீற்றர்கள் தொலைவில் வீழ்ந்து வெடித்துக்கொண்டிருந்தன. ஒவ்வொரு அதிர்விற்கும் ஒரு முறை தணிந்து பின் இயல்பாக எரிந்தது சிமினி விளக்கு. இவற்றினிடையேயும் அந்தச் சிறு கொட்டிலில் இருந்து துல்லியமான குறட்டை ஒலி கேட்டுக் கொண்டிருந்தது.

நேரம் நடு இரவை எட்டியிருக்கும். "எல்லோரையும் முன் வெட் டைக்கு வரட்டாம்" சகபோராளியின் அறைகூவல்.

"இண்டைக்கு நல்லா மாட்டிட்டம்" வெளியில் நல்ல பனி பெய்து கொண்டிருக்க, கைகளைக் குறுக்கே கட்டியபடி மெதுவாக நடக்கிறோம். பனியில் நனைந்திருந்த புற்களிற் கால்படக் குளிர் உச்சிவரை ஏறு கின்றது. அங்கு அந்த வெட்டையில், சற்று நேரத்திற்கு முன் கும்ப கர்ணத் தூக்கம் தூங்கிய அந்த மனிதர் மிக்க புத்துணர்ச்சியுடன், புன்னகைத்தபடி இயல்பாக நின்றார்.

"என்ன தம்பிமார் நல்லா வயது போயிற்றுப்போல" என்று கேட்பது போல் அந்தப் புன்னகை எமக்குப்பட கட்டியிருந்த கைகளை சட்டென எடுத்துக்கொண்டு அசடுவழிகிறோம்.

. யாவரும் அவரைச் சூழ்ந்துகொள்கிறோம். உயிர்தப்பி வாழ்தலுக் கான திசையறிதல் அன்றைய பகலில் விட்ட இடத்திலிருந்து தொடங்கு கிறது.

"நேற்று இயற்கையமைப்புகளைப் பயன்படுத்தி எப்படித் திசை களை அறிந்துகொள்ளலாம் எனப் பார்த்தோம். அதில் ஒன்றுசொல் லும்" சங்கரண்ணையின் சுட்டு விரல் போராளி ஒருவரை நோக்கி. "ஆண்டு வளையம் அண்ணை" உடனடியாகத் தெறித்து வீழ்ந்த அந்தப்

பதிலைப் புன்னகையுடன் கேட்டபடி, "நேற்று ஆண்டு வளையம் இண்டைக்கு ஆகாய வெள்ளி" என்றபடி அம்மனிதர் சிரிக்க அனை வரையும் உற்சாகம் தொற்றிக்கொள்கின்றது.

விடிய விடிய நட்சத்திரங்களுடன் எம்மை நட்புக்கொள்ளச் செய் கிறார் அவர். கிழக்கு வெளுக்கத்தொடங்குகிறது. எம்மிற் பலருக்குக் கண்கள் அடிக்கடி மூடித்திறக்க ஆரம்பிக்கின்றன.

"தம்பி ஒலுமடுவுக்கு மற்ற இடத்துக்குப் போகவேணும் வெளிக்கிடு வம்" தன்னுடன் நின்ற போராளியைப் பார்த்துக் கூறுகிறார். பல வகை யான கருவிகளைத் தோளிற் கொளுவியிருந்த அந்தப் போராளி விரை கிறான். சில நிமிடங்களில் அந்த மொட்டை ஜீப் சங்கரண்ணையை ஏற்றிக்கொண்டு ஒலுமடு நோக்கி விரைகிறது.

அங்கும் உயிர்தப்பி வாழ்தலுக்கான திசையறிதலோ உயர் தொழி னுட்பத் திசையறிதலோ பாடமாகப் பயிற்சியாக விரிந்திருக்கும்.

- எழுத்துரு நகேஸ் -
ஜெயந்தன் படையணி

# அன்னக்கிளி

நாம் சென்ற ஊர்தி பாலத்தைத் தாண்டிச் சென்றது. பாலத்தின் கீழே நீரோட்டம் சலசலப்புடன் சென்றுகொண்டிருந்தது. சிற்றலைகள் கரைகளில் மோதி வெண்ணுரை கக்கிச் சென்றன. பாலை, வீரை எனக் காட்டு மரங்களினூடாகப் பாதைகள் சென்று கொண்டிருந்தன. ஊர்தித் தடங்கள் நிறைந்த ஒரு பாதையைப் பின்பற்றி எமது ஊர்தியும் நகர்ந்து சென்றது.

அடையவேண்டிய இடத்தை அடைந்ததும் இறங்கிக்கொண்டோம். தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் எனப் பல்வேறுபட்ட போராளிகள் திரண்டிருந்தனர். பல படையணிகளைச் சேர்ந்தவர்கள் ஆண், பெண் போராளிகள் எனப் பலரும் நின்றனர்.

அது ஒரு பயிற்சிக் கல்லூரி. அவரவர் தகைமைகளை அறியத் தேர்வுடன் ஆரம்பமாகியது அந்தக் கல்லூரி. பல துறைசார் அறிவியலைப் புகட்டும் பாடத்திட்டம் வகுக்கப்பட்டிருந்தது. கல்வி புகட்டும், ஆசிரியர்களில் ஒருவர் சங்கரண்ணை. சங்கர் மாஸ்ரர் என்றே அங்கு அவரை, அழைப்பர்.

மணல் முற்றத்தில், பாட்டி மடியில் இருந்து பார்த்த வெள்ளிகளை அறிவியலாக மாற்றி திசையறிதலைப் பாடமாகப் புகட்டினார். காட்டினுள் திசையறிகருவி, கைக்கடிகாரம் இன்றித் திசை நேரம் அறிதல் அவரது பிரதான பாடப்புகட்டலில் ஒரு பகுதி.

வீட்டிலும் பின்பு இயக்கத்திலும் கடலையும் கரையையும் மட்டும் அறிந்த எமக்கு, மறைப்பற்ற தூரத்திற் கறுப்பாகத் தெரிவதை வைத்து இனங்காணப் பழகிய எமக்கு, மரங்களின் மறைப்பிலும் அதன் செறிவாலும் நிழலாலும் ஏற்படும் இருட்டிலும் உருவங்களைப் பார்ப்பது எப்படி என்று சங்கர் மாஸ்டரே விளக்கினார். சத்தங்கள், அவற்றை உன்னிப்பாகக் கிரகிக்கும் தன்மை, காதுகளைக் கூர்மையாக்கி சத்தப் பிறப்பாக்கி எது என்பதை அறிதல், அதன் தூரம் கணிப்பிடல், திசை நோக்கெடுத்தல் எல்லாம் அவரிடமே பயின்றோம்.

சங்கர் மாஸ்டரின் பாடம் என்றால் கலக்கந்தான். என்ன கேட் பார்; எதுபற்றிக் கேட்பார்; யாரிடம் கேட்பார் என்ற பயம். ஆனால் விளக்கம் அங்கிருக்கும். எச்சிறிய விடயமெனினும் அறிவியல் அதன் விளக்கத்துடன் இணைந்திருக்கும்.

மாலை நேரமொன்று. அப்போது வகுப்பு அவருடையது. பல அறிவியல் விடயங்கள் விளக்கமாக அவரது குரலில் ஒலித்துக் கொண் டிருந்தன. கடல் பற்றித் திசை திரும்பியது அவரது பேச்சு. கடலினுள் பயன்படுத்தும் கருவியொன்று பற்றிக் கேள்வியைக் கேட்டார். எவரும் பதில் சொல்லவில்லை. எமக்கு அந்தரங்கமான விடயம். தெரிந்தும் தெரியாதவர்கள் போல் வாய்மூடி மௌனமாக இருந்துகொண்டோம்.

கடற்புலிக்காரர்கள் எழும்புங்கோ என்றார். சிலர் எழும்ப, மற்றவர் கள் மறைந்துகொள்ள முனைந்தனர். பிரமனுக்குத் தெரியும்தானே எத்தனை பேரைப் படைத்தது என்று. எல்லோரும் எழுந்து கொண்டோம். ஏனையோர் விடைக்காக எமது வாய்களை எதிர்பார்த்திருந்தனர். விடை தெரியாதவர்கள் போல ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

'கோழிக்குஞ்சுகளின் இக்கட்டான நிலையைத் தாய்க்கோழி தெரி யாமலா இருக்கும்'. இரகசியம் பாதுகாக்கிறார்கள். அதற்காக உறுதிப் பிரமாணமும் எடுத்திருப்பார்கள். உரிய நேரத்திற் கைதந்து உதவினார் மாஸ்டர்.

அன்னக்கிளி பயிற்சிக் கல்லூரி சங்கர் மாஸ்டரிடம் அறிவியலைப் பெற்றுக்கொள்ள வாய்ப்பளித்தது.

- *சங்கரி* -

*கடற்புலிகள்*

# எம்மை, நாமே வளர்க்க...

வருவார் என எதிர்பார்த்திருக்கும்போது வரமாட்டார். வரப்போகிறார் என அறியும்போது முகாமிற்குள் வந்துவிடுவார். வருகிறார் என அறிவித்தல் வரும். வரமாட்டார். மணலாற்றில் நாம் கண்ட சங்கரண்ணை.

சங்கரண்ணை வருவதை முற்கூட்டியே அறிந்துகொள்ள எமது சகல வளங்களையும் பயன்படுத்திக்கொள்வோம். அது ஒரு தனி வேலை.

இந்திய இராணுவ வருகையைக் கண்டறியக் காவல் விடுவது வழமை. ஆனால் சங்கரண்ணை எமது முகாம் நோக்கி நகர்கிறார் என்ற தகவல் எட்டியதும் அதியுச்சக் காவல் வேலையில் ஈடுபடுவோம். ஏனெனில் எப்பாதையூடாக வருவார், எப்பற்றையூடாக வெளிக் கிளம்புவார், எந்த அருவியூடாக உள்நுழைவார் என்பதை ஊகிக்கவே முடியாது. எமது முகாமைச்சூழக் காவற்கடமை அதிகரிக்கப்பட்டிருக்கும். காவற்கடமையில் உள்ளவர் அனைவரும் வழமையை மிஞ்சிய உசார் நிலையில் நிற்பார்கள்.

சங்கரண்ணை வந்துபோகும் வரை காலும் ஓடாது, கையும் ஓடாது, பசியே வராது. எதைக் கேட்பார், எதைப் பார்ப்பார், எதைப் பரிசோதிப்பார் எங்களுக்குள் நாங்களே போட்டுக் குழம்பிக் கொண்டிருப்போம்.

சங்கரண்ணையின் வருகை, புத்தகத் தாங்கிகளில் உள்ள புத்தகங்களைக் காலியாக்கிவிடும். ஒவ்வொருவரும் ஒவ்வொரு புத்தகத்தைக் கையில் எடுத்துக்கொள்வார்கள். எவரும் சும்மா இருப்பதைக் காணமுடி யாது.

எந்தப் பற்றைக்குள், எந்தப் புற்றின் பின்னால் பதுங்கி இருந்து எம்மை அவதானிப்பாரோ தெரியாது என்ற நிலை. நகர்பவர்கள் சுற்று முற்றும் எச்சரிக்கையுடன் பார்த்துக் கொண்டே செல்வார்கள்.

அந்த ஆசானுக்குப் பயந்து பயந்து அன்று நாம் கற்றுக்கொண்ட விடயங்கள் எம்மை நாமே தன்னம்பிக்கையுடன் வளர்த்துக்கொள்ள உதவின.

- யோ. ரீட்டா -
மாலதி படையணி

# பிள்ளைகளானோம்

கடினமான காட்டு வாழ்க்கையில் நாள்தோறும் எங்கோ ஓரிடத்தில் இந்திய இராணுவத்துடன் சண்டை ஏற்படும். எமது முகாமைச் சூழ்ந்து எப்பொழுதும் சண்டை நடக்கலாம். இதுதான் அன்றைய நிலை.

தலைவர் அவர்கள் என்னையும் சக பெண் போராளிகள் இருவரையும் அழைக்கிறார். சங்கரண்ணையும் அங்கிருக்கிறார். தலைவர் விடயத்தை விளங்கப்படுத்துகிறார். அன்றிலிருந்து குறிப்பிட்ட வேலைத் திட்டத்திற்குக் கல்வி புகட்டும் ஆசானாகிறார் சங்கரண்ணை.

சுதுமலையில் இந்திய இராணுவத்துடன் சண்டை தொடங்கிய நேரத்திற் கையில் துப்பாக்கியுடனும் தோளில் தொங்கிய வானொலிப் பெட்டியுடனும் நின்ற சங்கரண்ணையுடன் கதைத்தபிறகு தற்போது மணலாற்றுக் காட்டில் அவரின் மாணவியானேன்.

குறிப்பிடப்பட்ட வேலைத்திட்டத்திற்குரிய பாடங்களைப் போதிப்பது மாத்திரமல்ல சங்கரண்ணையின் பணி. பொது அறிவு சார்ந்த விடயங்கள், சர்வதேச விவகாரங்கள், தொழினுட்ப வளர்ச்சி, நவீன உபகரணங்கள், அரசியல் எனத் தொடர்ந்தது அவரது வகுப்பு. நாம் தங்கியிருந்த முகாமின் அமைவிடம், சுற்றாடல், திசையறிதல், எச்சரிக்கைத் தன்மை, காட்டு வாழ்வில் தப்பிப்பிழைத்து உயிர் வாழ்வதற்கான வழிமுறைகள் என மேலும் பரந்து விரிந்து சென்றது.

தொடக்கத்தில் வகுப்பு நேரத்தைத் தவிர அவரைக் காணுவதை இயன்றவரை தவிர்த்தேன். அவரது அசைவு தென்பட்டால், அவரது குரல் கேட்டால் காணும் இடத்தில் என்ன கேள்வி கேட்கப் போகிறாரோ என்ற பயவுணர்வினால் ஓடித் தப்பிக்கொள்வேன்.

ஆரம்பத்தில் வகுப்பிற்குச் செல்லும்போது எந்தச் சத்தமும் இண்டைக்குக் கேட்கக்கூடாது என்று மனத்தினுள் வேண்டிக்கொண்டே செல்வோம். உலங்குவானூர்திச் சத்தம், செல் அடிக்கும் சத்தம்,

வெடிக்கும் சத்தம், துப்பாக்கிச் சூட்டுச் சத்தம், கண்ணிவெடி வெடிக்கும் சத்தம் என எது கேட்டாலும் எத்திசை? எத்தனை பாகை? எவ்வளவு தூரத்தில்? பதில் சொல்லியே ஆகவேண்டும்.

சிறிது காலம் சென்றதும் சங்கரண்ணை எங்களுக்கு அப்பா போலாகிவிட்டார். அவரைச் சந்திப்பதில் ஆர்வம் ஏற்பட்டது. பல விடயங்களையும் கற்று நாம் பெற்றிருந்த தேர்ச்சி எம்மையே வியப்பில் ஆழ்த்தியது. மேலும், விடயங்களை ஆவலுடன் அறிய அவரை நாடிச் செல்வோம்.

விளைவு, எங்கள் மூவரையும் சங்கரண்ணையின் பிள்ளைகள் என ஏனையோர் அழைக்குமளவிற்கு அறிவியல் ரீதியாக வளர்ந்துவிட்டோம்.

# வரியோடை...

எனக்கு அறிவு எட்டிய காலம். மாமா இயக்கத்தில் என்பதை அறிந்துகொண்டேன். அவரது இயக்கச் செயற்பாடுகள் குறித்துப் பலரும் பேசக் கேட்டதுண்டு. நேரில் அவரைப் பார்க்கவில்லை.

உறவுக்காரரிடம் இருந்த, இயக்கத்தில் இணைவதற்கு முந்திய படங்கள், இயக்கத்தில் இருக்கும்போது பத்திரிகைகளில் வந்த படங் கள் என்பவற்றைப் பார்த்து அவரது தோற்றத்தைக் கற்பனை செய்தேன்.

பாடசாலை ஆரம்ப வகுப்பு, படிப்படியான வகுப்பேற்றங்கள் - அறிவு வளர்ச்சியும் என்னுடன் கூடவே வளர்ந்தது. போராட்டமும் மறு புறம் வளர்ச்சிபெற்றுச் சென்றது. போராட்ட விரிவாக்கம் என்னையும் உள்வாங்கியது. போராளியானேன்.

27.11.1997. மாவீரர் நாள். தமிழீழப் பிரதேசம் எங்கும் எழுச்சி களைகட்டியிருந்தது. வீதிகள், சந்திகள் என எல்லா இடங்களும் அழகு படுத்தப்பட்டு எழுச்சிக் கோலமாகக் காணப்பட்டன. மாலை நெருங்க மாலைகளுடனும் பூக்களுடனும் வீதிகளில் மக்களும் போராளிகளும்.

இயக்கத்தின் சீருடையுடன் அதாவது வரிச்சீருடையுடன் நானும் முள்ளியவளைத் துயிலுமில்லம் சென்றேன். துயிலுமில்லம் போராளி களாலும் பொதுமக்களாலும் நிரம்பி வழிந்தது. நினைவுக்கற்களின் அருகில் நினைவுடன் நின்றவர்கள், கண்ணீர்த் துளிகளுடன் பழையதை மீட்டவர்கள், கதறியழுது தமது உணர்ச்சியை வெளிப்படுத்தியவர்கள் என மாவீரர்களின் பெற்றோரும் மக்களும் காணப்பட்டனர்.

தலைவரின் உரை தொடங்கியது. ஆர்வத்துடனும் எதிர்பார்ப்புட னும் எல்லோரும் அமைதி காத்தனர். 6.05 மணிக்கு நினைவொலி எழுந் தது. 6.06 மணிக்கு அமைதிவணக்கத்தைத் தொடர்ந்து 6.07 மணிக்கு ஈகச்சுடரொளியில் துயிலுமில்லமே பொன்னிறமாகத் தொடங்கியது.

துயிலும் இல்லப் பாடல் நிறைவுபெற, வேண்டிய நினைவுக்கற் களைத் தரிசிக்க எல்லோரும் அங்குமிங்கும் மெதுவாக நகர்ந்தனர். நானும் மெதுவாக நகர்ந்தேன். பிரதான ஈகச்சுடரை அண்மித்த பகுதியில் அங்குத் தெரிந்த தோற்றம் ஒன்றை மீண்டும், மீண்டும் உற்றுப் பார்த்தேன். அவரேதான். சங்கரண்ணை. ஓடிச் சென்று கதைக்க வேண்டும் என்ற ஆவல் உந்தப் பயம் ஒருபுறம் தள்ளியது. இந்தப் பெரியவர் என்னுடன் கதைப்பாரா? மனத்தில் ஒரு சலனம். அவரை நோக்கி வைத்த காலடிகளை நிறுத்திக் கொண்டேன்; நின்றேன்; பார்த் தேன்; நன்றாகப் பார்த்தேன்.

அவரைச் சுற்றிப் பல்வேறு வகையினர்: இளையவர், முதியவர், பொறுப்பாளர், போராளிகள், பெண்கள், ஆண்கள், சிறுபிள்ளைகள். எல்லோருடனும் மாறிமாறிச் சகஜமாகப் பேசியதைப் பார்த்தேன். எனக்கு ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. அண்மித்துச் சென்றேன்.

எனது தயக்க நடை, அவரை நோக்கி வருவது, அவரை வடி வாகப் பார்ப்பதும் விடுவதும் எப்படியோ இவற்றை அவதானித்துவிட்டார். என்னை நோக்கிச் சில அடிகள் வைத்தார் "என்ன பிள்ளை என்னட்டைத் தானோ?" கேட்டார்.

தயக்கம்... வார்த்தைகள் வர நேரமாகியது. "ஓம்... மாமா" என் றேன். சட்டெனச் சுதாகரித்துக் கொண்டு "ஓம் அண்ணை" என்றேன். சற்றுச் சிரித்தவர், புருவங்களைச் சுருக்கிக் கேள்விகளைத் தொடுத்தார்.

நான் விபரித்தேன். முகத்தில் மலர்ச்சி தென்பட்டது. வீட்டிற்கு வரும்படி அழைத்தார். "சொந்தம் எண்டதற்காக அல்ல வரியோடை நிற்கிறபடியால்தான்" என்றார். சட்டைப் பையிலிருந்து குறிப்புப் புத்த கத்தை எடுத்தார். வீட்டிற்குச் செல்லும் பாதையை விளக்கமான வரை படமாகக் கீறினார்.

*- பிரபாமதி -*
*கடற்புலிகள்*

# துணிவும் வீரமும்

பெண்களுக்கான முதலாவது பயிற்சி முகாம் தமிழ் நாட்டின் மதுரை மாவட்டத்தில் ஒரு சிறிய மலையில் அமைந்திருந்தது. பயிற்சியின் களைப்பை இயற்கை எழில் போக்கி நிற்கும்.

பயிற்சியின் இடை நடுவில் எம்மில் நால்வரைத் தலைவர் அவர்கள் நேரிற் சந்திக்க அழைப்பு விடுத்தார். தகவலுடன் வந்தவர் இயல்பாகவும், நகைச்சுவையாகவும், நட்புணர்வுடனும் பழகினார். தனது பெயர் சங்கர் என அறிமுகப்படுத்தியதுடன், எங்கள் பெயரையும் கேட்டுத் தெரிந்துகொண்டார். தானே எங்களைச் சென்னைக்கு அழைத்துச் செல்லவுள்ளதாகவும் கூறினார்.

அப்பொழுது சென்னை, மதுரை எதுவும் தெரியாது. எப்படி எங்கு போவது எதுவும் விளங்கவில்லை. சங்கரண்ணை முன்னால்; நாங்கள் வால்போல் பின்னால் தொடர்ந்தோம்.

கசமுச என ஒரே சத்தம். திருவிழாக்களில் மாத்திரம் அப்படிச் சனக்கூட்டத்தைக் கண்டுள்ளேன். ஒரே சனக்கூட்டம். தட்டு வியாபாரிகள் எல்லோரது கூக்குரல்களும் செவிப்பறையைச் சல்லடை போட்டன.

எங்குத் திரும்பினாலும் நீண்ட பேருந்துகள். 'திருவள்ளுவர்' எனப் பெரிய எழுத்தில் எழுதப்பட்ட பேருந்தை அடைந்தோம். பயணச் சீட்டைச் சங்கரண்ணை பெற்றுக்கொள்கிறார். பேருந்தினுள் ஏறி ஒரு பக்கத்தில் உட்கார்ந்து கொள்கிறோம். எம்மைப் பார்க்கக்கூடியவாறு மறு பக்கத்திற் சற்றுத் தள்ளிச் சங்கரண்ணை உட்கார்ந்து கொள்கிறார்.

சுற்றும் முற்றும் இருந்த பயணிகள் பலதும் பத்தும் பேசிக் கொண்டனர். பேசுவது தமிழ் என்பதை மட்டும் உணர்ந்து கொண்டோம். எதையும் விளங்கிக்கொள்ள முடியவில்லை. பேருந்து சனக்கூட்டங்களினூடாக நகர்ந்து பிரதான வீதியொன்றை அடைந்தது.

வேகமெடுத்துக் கொண்டது பேருந்து. பேருந்தின் இரைச்சலுடன், அடிக்கடி தொடர் ஊர்தி ஊதுகை இரைச்சலும் சேர்ந்து கொண்டது. யன்னல் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்தோம். மொட்டை மாடி வீடுகள், ஓலைக் குடிசைகள், சிறு நகர்கள், தோட்டங்கள்,

வெட்டைகள் என மாறிமாறி வந்துகொண்டிருந்தன. மக்கள் கூட்டமும் தொடர்ந்து காணப்பட்டது.

பேருந்து எங்கும் நிற்கவில்லை. தொடர்ந்து ஓடிக்கொண்டிருந்தது. வெளியே புதினம் பார்த்தபடி வந்த எமக்குச் சற்றுக் கண் இருட்டியது. இடையிடையே கண்களை மூடுவதும் விழிப்பதுமாக இருந்தோம். பேருந்து நிறுத்தப்படுவதை உணர்ந்து கண்ணைத் திறந்தபோது, மேலும் சன நெரிசலான நகரம் தோற்றமளித்தது. கடைகள், கட்டடங்கள், அலங்கரிப்பு விளக்குகள் என எல்லாம் கண்களைக் கவர்ந்தன. பயணி கள் இறங்கிக் கொண்டிருந்தனர். சங்கரண்ணையின் ஞாபகம் வந்தது. அவரது இருக்கையைப் பார்த்தோம். அவர் அங்கு இல்லை. சுற்றும் முற்றும் பார்த்தோம் காணவில்லை.

பயணிகள் அனைவரும் இறங்கிவிட்டனர். மிஞ்சியது நாம் நால் வரும். பயம் தொற்றிக்கொண்டது. யாரிடம் எதைக் கேட்பது. கண் கள் பிதுங்கின. செய்வதறியாது இருக்கையில் இருந்து எழும்புவதும் இருப்பதும் யன்னல் வழியே எட்டிப் பார்ப்பதுமாக இருந்தோம். எவருக் கும் இடம் வலம் தெரியாது.

யன்னலூடாகக் குறுணிக் கல்லொன்று வந்து எம்மைத் தாக்கி யது. மேலும் பயந்துவிட்டோம். யன்னல் வழியே பார்த்தோம். சிரிப் புடன் சங்கரண்ணை. "துவக்குத் தூக்கிற ஆக்களைப் பாருங்கோ" என் றாரே.

வெட்கித் தலை குனிந்தோம். துணிவையும் வீரத்தையும் வர வழைத்தோம்.

இன்று வீரமும் துணிவும் நிறைந்த பெண்கள் படையணிகள் எத்தனை!

*- தீபா -*
*அரசியற்றுறை*

# நலனில்...

சங்கரண்ணையும் எமது முகாமிலேயே தங்கி இருந்தார். முகாமிற் சில நிர்மாண வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அம் முகாமிற்கு வேறு ஆட்கள் வரமுடியாத நிலையில் முகாமில் உள்ளவர்களே அனைத்து வேலைகளையும் செய்யவேண்டியிருந்தது. பார ஊர்தியில் வரும் பொருட்களை விரைவாக இறக்கிவிட்டு ஊர்தியை நேரத்திற்கு அனுப்பிவிடவேண்டும். இறக்கிய பொருட்களைப் பாதுகாப்பாக அடுக்கிவைக்க வேண்டும். இவ்வாறாக வேலை தொடர்ந்துகொண்டிருந்தது.

அன்று பார ஊர்தி வரக் காலதாமதமாகிவிட்டது. இரவு பத்து மணியை நெருங்கியபோதுதான் முகாமை வந்தடைந்தோம். எப்படியாவது விடியமுதல் இறக்கிவிட வேண்டும். வேகமாக இறக்கினோம். இறக்கிமுடிய விடிந்துவிட்டதென்றே கூறலாம்.

மீண்டும் பகலில் வேலை செய்யவேண்டிய நிலை. வந்த பொருட்களைப் பாதுகாப்பாக அடுக்கி வைக்க வேண்டும். தொடர்ந்து வேலைகளைச் செய்தேன். அன்றைய நாளும் ஓடியது. அன்று இரவு வேலை இருக்கவில்லை. நான் படுத்துக்கொண்டேன்.

இரவுக் காவற்கடமைக்காக நான் எழுப்பப்பட்டேன். காவற்கடமையில் நின்றுகொண்டிருந்தேன். வழமையாகவே பன்னிரண்டு மணியளவில் தூக்கத்திற்குச் செல்லும் சங்கரண்ணை நான் காவற்கடமையில் நிற்பதைக் கண்டுவிட்டார். அப்போது நேரம் பதினொரு மணியைத் தாண்டி இருந்தது. என்னை உடனே அழைத்துச் சென்று படுக்கும்படி கூறினார். முதல் நாள் இரவு நித்திரை விழித்து வேலை செய்ததைச் சுட்டிக்காட்டி உடல் நலத்துடன் இருந்தால்தான் தொடர்ந்து வேலை செய்யலாம் எனக் கூறி எனது காவற்கடமைப் பொறுப்பைத் தானே ஏற்றுக்கொண்டு காவற்கடமையில் நின்று கொண்டார்.

*- இ. இசையமுதன் -*
*சிறப்புப் படையணி*

# என்றும் தோழமையுடன்...

"நேரத்திற்கு எழும்பிடு மோனை" இது இரவு சொன்ன வார்த்தை.

கோழிகள் மாறி மாறிக் கூவின. முகாம் கூட்டிலிருந்தும் கூவியது. எனது தூக்கத்தின் இறுதி நிலையை உணர்ந்தேன். மெதுவாகக் கண் திறந்தேன்.

கைக்கடிகாரத்தின் வெளிச்ச ஆளியை அழுத்தினேன். நேரம் அதிகாலை நான்கைத் தாண்டியிருந்தது.

அவசரமாகக் கடன்களைக் கழித்தேன். நேரம் நான்கு இருபது. முகாமில் இருந்து புறப்பட ஆயத்தமாகிவிட்டேன்.

சங்கரண்ணையின் கொட்டிலை நோக்கி நடந்தேன். வானொலி யில் ஆங்கில நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. கண்ணாடி போட்டபடி, ஏதோ ஒன்றைப் புரட்டிக் கொண்டிருப்பது தெரிந்தது.

"நான் வெளிக்கிடுறன் அண்ணை" சொன்னேன். நிமிர்ந்து பார்த் துக் கதிரையினின்றும் எழுந்தவர். "மேற்றிற்கு (மோட்டார் சயிக்கிள்) எண்ணெய், ஒயில் எல்லாம் பாத்தாச்சா?" வினவினார்.

"ஓமண்ணை" என் பதில். மோட்டார் சயிக்கிள் இருக்கும் இடம் வரை என்னுடன் வந்தார். குப்பியை அழுத்திப் பெற்றோலை விட்டுக் குனிந்திருந்து ஊதிவிட்டு ஏறியிருந்து இயக்கினேன். இயங்கவில்லை.

இறங்கி மீண்டும் பெற்றோல் விட முயன்றேன். என்னை இறங்க விடாது தடுத்துவிட்டுத் தானே குந்தியிருந்து பெற்றோற் குப்பியை அழுத்தி, ஊதிவிட்டு, இயக்கும்படி கூறினார். இயங்க ஆரம்பித்ததும் மணலைத்தாண்டிச் செல்லும்வரை என்னை இறங்கவிடாது மோட்டார் சயிக்கிளில் இருக்கும்படி கூறிவிட்டு, தானே தள்ளி வந்தார்.

"கவனம் மோனை. போன உடனை தொடர்பு எடு" கூறி வழி யனுப்பிய அவர்...

*ஜ.சிவலோகன்*
*சிறப்புப் படையணி*

# சென்றி

அங்கு வெளிச்சத்தை வைத்து நேரத்தைக் கணிப்பிடமுடியாது. சூரிய பகவானின் வெப்பக் கதிர்கள் உடலைப் பாதிப்பதில்லை. சிறிது காலம் நின்றாலே தோலின் நிறம் வெளுத்துவிடும்.

உயர்ந்த, அடர்ந்த மரங்களின் சுவாசத்தால் வெளியிடப்படும் வெப்பமே அக்காட்டு வெக்கையாக உணரப்படும்.

சோளகமும் தெரிவதில்லை. வாடையும் தெரிவதில்லை. இலை களின் அசைவொலி கடல் அலைபோல் இரையும்.

தனி வனம். தகவல்கள் வெளிவரமுடியாத இடம். மனித வாடையையே உணரமுடியாத காடு.

சங்கரண்ணை அவரது கருமத்தில் மூழ்கிவிட்டார். சிறுகுறிப்புப் புத்தகம் பேனா மையினால் தன்னை நனைத்துக்கொள்கிறது.

குறிப்புப் புத்தகத்தின் தாள்களும் சங்கரண்ணையின் விரல்களின் வருடலினால் உதிர்கின்றன.

உதிர்ந்த ஒவ்வொரு தாளும் கைமாறுகிறது. முகாமில் இருந்து ஒவ்வொருவராக, வேலைகள் குறிப்பிடப்பட்ட தாள்களுடன் வெளியேறு கிறார்கள்.

இரவு மணி ஆறு. முகாமின் தொலைத்தொடர்புச் சாதனம் அருகே அமர்ந்து வெளிச்சென்றவர்களுடன் தொடர்ந்து தொடர்பு கொள் கிறார்.

வேலைகள் முற்றுப்பெறவில்லை. சந்திக்கவேண்டியவர்கள் எல் லோரையும் சந்தித்து முடியவில்லை. மோட்டார் சயிக்கிள் திருத்திமுடிய வில்லை. மிகுதிச் சாமான்கள் நாளைக்குத்தான் கிடைக்குமாம்.

இவ்வாறாகப் பதில்கள் வருகின்றன. ஒவ்வொருவரும் தாங்கள் தங்குமிடத்தை அறிவிக்கிறார்கள்.

"காலை ஆறு மணிக்கு தொடர்பெடுத்துப் போட்டுத்தான் வெளிக் கிடுங்கோ." சங்கரண்ணை இருக்கும் முகாமில் எஞ்சியிருப்போர் மூவர். சங்கரண்ணை நாலாவது ஆள்.

இரவுக் காவல் நேரம் நெருங்குகிறது. என்னைக் கூவி அழைத் தார்.

"எனக்கும் சென்றி போடுங்கோ" என்றார். இல்லை அண்ணை நாங்கள் பாக்கிறம் என்றேன். "இல்லை மோனை நான் படுக்கப் பதிணொண்டரையாகும். ஒரு மணித்தியாலம் சென்றி பாத்திட்டு பன்னி ரெண்டரைக்கு எழுப்பிறன். கூறிவிட்டு வலுக்கட்டாயமாக எம்மைப் படுக்கவைத்தார்.

பன்னிரெண்டரைக்கு என்னை எழுப்பியவர் தானும் கூடவே என்னு டன் வந்து, முகாம் சுற்றாடலை வெளிச்சம் பாய்ச்சி அவதானித்து விட்டே தூங்கச் சென்றார்.

- ச. சகுந்தலன் -
சிறப்புப் படையணி

# போராளிகள் நலனில்...

அகலக் கால்வைத்த 'ஜெயசிக்குறு', நெடுங்கேணியையும் தனது கரங்களாற் பற்றிக்கொண்டது. மூர்க்கமாகத் தொடங்கிய 'ஜெயசிக் குறு' ஒவ்வொரு அங்குல நகர்விலும் கடும் கவனம் எடுத்தது.

'ஜெயசிக்குறு' வுக்கு எதிரான தடுத்து நிறுத்தற் சமரே அன்றைய பிரதான இயக்கச் செயற்பாடாகும். ஏறக்குறைய இயக்கத்தின் அனைத் துப் படையணிகளும் தம்மை அச்சமரில் ஈடுபடுத்திக்கொண்டன.

நெடுங்கேணி முன்னணிக் காவலரணிற் சோதியா படையணி நின்றது. வேறு தேவைகளுக்காகப் பின்னுக்கு வந்திருந்த படையணிப் போராளிகள், மீண்டும் முன்னணிக் காவலரணுக்கு முத்தையன்கட்டுப் பிரதேசத்திலிருந்து புறப்பட்டனர். நீண்ட நெடுந்தூரம்; ஆயினும் நடந்தே அத்தூரத்தைக் கடக்கவேண்டும்.

அன்றிருந்த ஊர்திப் பற்றாக்குறையும் எரிபொருள் தடையும் எமது போக்குவரத்து வாய்ப்புகளை மட்டுப்படுத்தியிருந்தன. மக்கள் அப்பகுதி யிலிருந்து இடம்பெயர்ந்துவிட்டதால் பொதுப்போக்குவரத்து ஊர்திச் சேவையோ தனியார் போக்குவரத்தோ இல்லை. வெறிச்சோடிக் கிடந்த வீதிகள் இதற்குச் சான்று பகர்ந்தன.

தூரத்தைப் பற்றிக் கவலைப்படாமற் பல்வேறுபட்ட பேச்சுக்களு டன் நடந்தோம். சூழலின் நிசப்தத்தினை ஊடறுத்து ஊர்தி ஒன்றின் ஒலி கேட்கத் தொடங்கியது. சற்று நேரத்தில், எம்மை நோக்கி வந்து கொண்டிருந்த ஊர்தி எமக்கருகில் நின்றது.

சாரதி இருக்கையில் இருந்தவர் யன்னலூடாக எட்டிப் பார்த்தார். ஒரு சிரிப்புடன் "எங்குப் போகிறீர்கள்" எனத் தொடங்கியது அவரது பேச்சு. சங்கரண்ணை, பல கேள்விகளினூடாக எமது நிலையை முழுமையாக அறிந்துகொண்டார். அவ்வளவு தூரமும் நடக்கப் போகிறீர் களா என்ற தொனியே பலமுறை அவரது பேச்சிற் காணப்பட்டது.

சற்று நேரம் யோசித்தவர், அவ்விடத்திலேயே எம்மை நிற்கும் படியும் தமது முகாம் ஊர்தியொன்று அவ்வழியே வருமெனவும் அதில் ஏறிச் செல்லும்படியும் கூறிவிட்டுச் சென்றுவிட்டார்.

உழவு இயந்திரம் ஒன்று வந்தது. சங்கரண்ணையின் முகாமைச் சேர்ந்தது. ஏதோ வேலையாகச் செல்வதால் எம்மையும் ஏற்றிச் செல்வ தாக நினைத்தோம்.

சில நாட்கள் கழித்து சங்கரண்ணையும் எமது படையணித் தளப தியும் சந்திக்கும் சந்தர்ப்பம் ஒன்று ஏற்பட்டது. அப்பொழுதுதான் நாம் நடந்து செல்வதை அறிந்து, தனது முகாமொன்றிற்கு அறிவித்து ஊர்தி ஒழுங்கை எமக்காகவே மேற்கொண்டார் என்ற விடயம் தெரியவந்தது.

போராளிகளின் நலனில் உள்ள அவரது அக்கறையை அவரது செய்கை உணர்த்தியது.

- ஜானகி / தாரணி -
சோதியா படையணி

# பாராட்டுக்கள்

புதிய முகாம் அமைப்பு வேலை போன்ற நிகழ்விற் சங்கரண்ணை நேரில் நின்றுகொள்வார்.

பொருட்கள் எடுத்துவரப்பட்டு அப்புதிய இடத்தில் இறக்கப்பட்டன. முகாமை எவ்வாறு அமைப்பது, எங்கெங்கு என்னென்ன செய்யவேண்டும், எங்குப் பாதை வைக்கவேண்டும், எங்கு மேலதிக கொட்டில்கள் போட வேண்டுமென எம்மை அழைத்துச் சென்றபடியே ஒரு விரிவுரையே நிகழ்த்துகிறார்.

கிணற்றைச் சுற்றி வேலி, எப்பக்கம் பாதை விடவேண்டும், குளிக்கும் நீர் போவதற்கான வாய்க்கால் எப்புறம் அமைக்கவேண்டும், அதன் கரையில் எங்கெங்கு வாழை நடவேண்டும், எங்குச் சிறு தோட்டம் அமைப்பது எனத் திட்டமாக விவரிக்கிறார்.

துப்புரவாக்கல், எங்கெங்கு எல்லைகள் போடுவது என வேலைகள் தொடர்ந்தன. எல்லாவற்றிலும் தானே நேரடியாக வந்து சேர்ந்து வேலை செய்வது, ஆலோசனை கூறுவது, கண்காணிப்பது என அவரின் பங்குடனேயே எல்லாப் பணிகளும் நடக்கின்றன.

அவர் எங்கோ அவசரமாகப் புறப்படுகிறார். வேலியடைப்பே அன்றைய வேலை. ஒரு பகுதியைச் சுட்டிக்காட்டி விவரித்தார். பின் அவர் புறப்பட்டுவிட்டார்.

அவர் திரும்பி வரும்பொழுது நான் தரப்பட்ட வேலையைப் பூர்த்தி செய்திருந்தேன். வந்தவுடன் அவ்வேலியைப் போய்ப் பார்த்தார். எங்களைக் கூப்பிட்டார். முதுகில் தட்டினார். வேலையின் நேர்த்தியைக் கவனித்தார். வேலை செய்தால் இப்படித்தான் செய்யவேண்டும் என எம்மைப் பாராட்டினார்.

சற்று நேரம் கழித்து எம்மை அழைத்த சங்கரண்ணை ஒரு தொகைப் பணத்தைத் தந்து வெளியே சென்று விரும்பியதை வாங்கிச் சாப்பிடும்படியும் எங்களது இன்னுமொரு முகாமிற்கு ஒரு மாற்றத்திற்காகச் சென்றுவரும்படியும் கூறினார்.

அவரது பாராட்டுக்கள் இன்றும் அவரின் நினைவுகளை மீட்கின்றன.

இ. இசையமுதன்
சிறப்புப் படையணி

# ஆழ்ந்த அக்கறை

1991 ஆம் ஆண்டு பல்வேறு வேலைகளிற் செயற்பட்டிருந்த போராளிகளும் தளபதிகளும் பெருமெடுப்பிலான வலிந்த தாக்குதலொன் றின் தயார்ப்படுத்தலுக்காக ஒருங்கிணைக்கப்பட்டனர்.

ஆகாயக் கடல் வெளிச் (ஆ.க.வெ.) சமரெனப் பெயரிடப்பட்ட அச்சமருக்காக ஒருங்கிணைக்கப்பட்ட போராளிகளும் தளபதிகளும் பல் வேறுபட்ட பயிற்சிகளில் தம்மை ஈடுபடுத்தியிருந்தனர்.

சங்கரண்ணை போர்த் தயார்ப்படுத்தலில் முக்கிய வேலைகளைக் கவனிக்கிறார்.

பல்வேறு இடங்களிற் பல்வேறு பயிற்சிகள், பயிற்சி ஆசிரியர் பலர்... இவ்வேறுபட்ட இடங்களிற்குச் செல்லும் வாய்ப்புச் சங்கரண் ணைக்குக் கிடைக்கிறது.

செல்லும் இடமெல்லாம் துருவித் துருவி ஆய்வு செய்யும் சங்க ரண்ணையின் காதுகளில், இரு சகோதரர்கள் சமருக்கான பயிற்சியில் ஈடுபட்டிருக்கும் செய்தி விழுகிறது.

உடனே வழமைபோலத் தலைவரிடம் விடயம் தெரியப்படுத்தப் படுகிறது. இரு சகோதரர்களில் ஒருவரைச் சமர்ப் பயிற்சியினின்றும் திருப்பி அனுப்பும்படி தலைவராற் கட்டளை பிறப்பிக்கப்படுகிறது.

ஆ.க.வெ. சமரும் நடைபெறுகிறது. பயிற்சியினின்றும் திருப்பி எடுக்கப்பட்டவரின் சகோதரர் வீரச்சாவைத் தழுவுகிறார். சங்கரண்ணை யின் தீர்க்கதரிசனம் உணரப்படுகிறது.

*- சசிக்குமார் -*
*குட்டிசிறி பீரங்கிப் படையணி*

# அவதானம்

'ஜெயசிக்குறு' நடவடிக்கைமூலம் வன்னிப் பெருநிலப்பரப்பின் குறிப்பிடத்தக்க பகுதி சிங்கள இராணுவத்தால் ஆக்கிரமிக்கப்பட்ட போதும் அந்நடவடிக்கை வெற்றியளிக்கத் தவறியதை அடுத்து, புதிய இராணுவ நகர்வு முயற்சி 'வோட்ட செட்' நடவடிக்கை மேற்கொள்ளப் பட்டது.

காடுகளின் பின்னணியோடுகூடிய இயற்கை எழில் கொண்ட கிராமங்கள் சிங்கள இராணுவ நடவடிக்கையாற் பொலிவிழந்தன. அக்கிராமங்களை அண்டிச் சிங்கள இராணுவ நகர்வு தடுத்து நிறுத்தப்பட்டது. இரண்டு மூன்று தடவைகள் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டபோதும் அவை புலிகளால் முறியடிக்கப்பட்டன.

சிங்கள இராணுவத்தை அங்கிருந்து விரட்டியடித்த ஓயாத அலைகள் மூன்று நடவடிக்கை நடைபெறும்வரை அப்பகுதியில் முன்னணிப் பாதுகாப்பு வலயத்தை அமைத்து நிலைகொண்டிருந்தது சிங்கள இராணுவம். பல பட்டுக் கம்பிகளைக் கொண்ட வேலிகள், கம்பிச் சுருள்கள், மண் அரண்கள், மிதிவெடிகள் எனப் பல்வேறு பாதுகாப்பு முறைகளைக் கையாண்டிருந்தது.

இப்பகுதி மக்கள் மீள அங்குக் குடியமர்ந்து கொண்டபோது, சிங்கள இராணுவம் அமைத்திருந்த பாதுகாப்பு வலயம் மக்களுக்குப் பெரும் இன்னல்களை விளைவித்து வந்தது. இவ்வின்னல்களைப் போக்கச் சங்கரண்ணை பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டார்.

கண்ணிவெடி அகற்றும் பிரிவினரை அங்கு வரவழைத்து கண்ணி வெடிகளை அகற்றினார். உழவு இயந்திரங்களைக் கொண்டு கம்பி வேலி, கம்பிச் சுருள்களை அகற்றிவிட்டார்.

ஒரு நாள் இவ்வாறாகக் கம்பிச் சுருள்களை உழவு இயந்திரத்திற் கட்டி இழுத்துக் கொண்டிருந்தோம். சங்கரண்ணை நேரில் எல்லாவற்றையும் அவதானித்தபடி நின்றார். இரு போராளிகள் நீண்ட தடிகள்மூலம்

கம்பிச் சுருளை உழவு இயந்திரத்திற் கொளுவிவிடும் வேலையைச் செய்துகொண்டிருந்தனர்.

ஒரு கம்பிச் சுருள், உழவு இயந்திரத்தால் இழுக்கப்பட்டுக் கொண்டிருந்தது. இலங்கை இராணுவத்தின் 'டப்பி' என அழைக்கப்படும் மிதிவெடி கம்பியுடன் இழுபட்டு, அங்குக் கொளுவும் வேலையில் நின்ற போராளி ஒருவருக்குப் பின்புறம் விழுந்தது. அப்போராளி பின்னோக்கி நகரக் காலைத் தூக்கியபோது... பாய்ந்து வந்து கட்டிப்பிடித்து அப் போராளியை சங்கரண்ணை இழுத்துக்கொண்டார். சங்கரண்ணையின் அன்றைய அவதானம் ஒரு போராளியைக் காப்பாற்றியது.

- பழனி -
சிறப்புப் படையணி

**1994**

# வெடிக்க மறுத்த குண்டுகள்

புதிய பயிற்சி ஒன்று அங்கு இடம்பெற்றுக்கொண்டிருந்தது. வெளிப்படையான பயிற்சி அல்லாதபோதும் மறைப்பிடத்தில் நிகழ்த்த முடியாத பயிற்சி.

அடிக்கடி அப்பகுதிக்கு வேவுவிமானம் வருவதும் கிபிர் வருவதும் வழமை.

கிபிர் வந்தாற் பங்கருக்குட் போவதும், பின் வெளிவருவதும் எனத் தொடர்ந்தது அப்பயிற்சி.

அன்றும் அவ்வாறே வேவு விமானம் வண்டின் ரீங்கார ஒலியுடன் அப்பகுதியை வட்டமிட்டவாறு இருந்தது. கிபிர் வரக்கூடும் என்ற எதிர் பார்ப்பு இருந்தது. ஆனால், எதிர்பார்ப்பு எல்லைக்கு முன்பாக கண்மூடி விழிக்குமுன் கிபிர் அப்பகுதியை நோக்கி குத்தெனப் பாய்ந்து வந்தது.

சங்கரண்ணையின் குரல் ஓங்கி ஒலித்தது. எல்லோரையும் பதுங்குகுழிகளுக்குட் போகும்படியான உத்தரவு அது. ஒவ்வொருவராக ஒவ்வொரு பக்கம் கடுமையான வார்த்தைகளையும் பயன்படுத்தி அனுப்பு கின்றார்.

கிபிர் குண்டுகளைக் கழற்றிவிட்டு மேலெழும்புகின்றது. பாய்ந்து வந்த போராளியொருவன் சங்கரண்ணையை இழுத்து நிலத்தில் விழுத்து கின்றான். சங்கரண்ணை நிலத்திற் படுக்கவும் முதற்குண்டு வெடிக்கவும் சரியாக இருந்தது. போராளியொருவன் கால்முறிந்து காயப்படுகின்றான்.

வீசப்பட்ட ஆறு குண்டுகளில் நான்கு வெடித்தன. சங்கரண்ணைக்கு மிக அருகில் இரண்டு குண்டுகள் வீழ்ந்தன. நிலத்தைத் துளைத்துச் சென்ற அவை என்ன நினைத்தனவோ? அப்படியே நின்று கொண்டன. வெடிக்கவில்லை. வெடித்திருந்தால்...

- கார்த்திக் -

சிறப்புப் படையணி



# எனக்குப் பின்னாலே. . .

கும்மிருட்டு. அமாவாசையை நெருங்கும் நாட்களில் ஒன்று.

இரவில் இரைதேடும் பயங்கர மிருகங்கள், நச்சுப் பிராணிகள் நடமாடும் நேரம்.

இரு பக்கமும் பற்றைகள் அடர்ந்து சூழ்ந்த மிக ஒடுங்கிய பாதை.

நான் ஐந்து அடிகள் வரை முன்னே சென்றுகொண்டிருந்தேன்.

மெதுவாகவும் அவசரமாகவும் எச்சரிக்கைத் தொனியுடனும் சங்கரண்ணையின் குரல் ஒலித்தது.

"மோனை. நில்லு மோனை. எனக்குப் பின்னாலை வா மோனை. கொஞ்சம் நல்லாத் தள்ளி வா"

விறுக்கென என்னை விலத்தி முன்னே செல்கிறார்.

"தள்ளி வா மோனை. எனக்கு யாரன் அடிச்சாலும் ஏதாவது நடந்தாலும் நீ திருப்பி அடிக்கலாம் மோனை"

சங்கரண்ணையின் அன்றைய குரல் இன்றும் ஒலிக்கிறது.

- ஜ. சிவலோகன் -
சிறப்புப் படையணி

# கரிசனை

மருத்துவ முகாம் சென்று திரும்பியிருந்தேன். விடயத்தைச் சங் கரண்ணைக்குத் தெரியப்படுத்தவேண்டும்.

"கலோ ரூ எயிற் (2,8) சேரா விக்ரர் (SV) தொலைத்தொடர்புச் சாதனத்தினூடாக ஒருமுறை தான் கூப்பிட்டேன்.

"என்னமாதிரி மோனை காட்டி மருந்தெல்லாம் எடுத்திட்டியே" மறுமுனையில் இருந்து சங்கரண்ணையின் குரல் ஒலித்தது.

"காட்டினனான். பன்டேஜ் தந்தவை. தொடர்ந்து கொஞ்ச நாளைக்கு முழங்காலுக்குச் சுத்தட்டாம்" நான் பதிலளித்தேன்.

(ஒரு போராளி சுகவீனமுற்றிருந்தால் நோய்பற்றி மருத்துவம்பற்றி மிக உன்னிப்பாக விசாரிப்பது அவருக்கே உரித்தான சிறப்புக் குணாம் சம்)

தொடர்ந்த, சங்கரண்ணையின் பல விசாரிப்புகள்.

"மோனை 'மேற்றை' (எங்கும் செல்லும், எப்பவும் ஓடியபடி இருக் கும், எல்லோரும் ஓடும் எமது பிரிவு மோட்டார் சயிக்கிள்) அனுப்பிறன். ஒருக்கா வந்து சந்திச்சு விட்டுப்போ மோனை"

"சரி அண்ணை வாறன்"

எமது தொலைத்தொடர்பு உரையாடல முற்றுப்பெறுகிறது.

'மேற்' என்னை ஏற்ற வர இரவு ஏழு மணியைத் தாண்டிவிட்டது.

சங்கரண்ணையின் முகாமை அணமித்தபோது இரவு பத்து மணி யைத் தாண்டியிருக்கும்.

அவர் வழமையாக இருக்கும் இடம். அதே மேசை. அதே கதிரை. அரிக்கன் லாம்பு வெளிச்சத்தில் அவரது முகம் பிரகாசமாகவே தெரிந்தது.

அவரது இருப்பிடத்திற்கு நேரெதிரே முன்புறக் கொட்டகையில் அவரது வாகனம்.

என்னை ஏற்றிச் சென்ற போராளியோ வாகனத்தை விலக்கி மோட்டார் சயிக்கிளை நிறுத்த முனைந்தபோது மோட்டார் சயிக்கிளின் பிறேக் சரியாகச் செயற்படவில்லை.

விளைவு மோட்டார் சயிக்கிள் இரு கப்புகளிற்கிடையால் சென்றது. இதை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

கப்புகளில் மோதுண்டு, கண்மூடி விழிக்க முதற் கால்களில் பலத்த அடி.

எழுந்து வந்தார் சங்கரண்ணை.

மோட்டார் சயிக்கிள் ஓடியவர் தொலைந்தார். இது நான் நினைத்தது.

ஆனால் நடந்ததோ வேறு. "ஏன் மோனை அவனுக்கு அடிபடக் கூடிய மாதிரி விட்டனி? இப்பதான் அவன் கால் நோவிற்கு பாண்டேஜ் வாங்கி வந்தவன்" சங்கர் அண்ணை.

முகாமில் நின்ற வேறு ஒரு போராளியை அழைத்த சங்கர் அண்ணை, "மோனை இவனுக்கு நோ எண்ணை போட்டு உரஞ்சி விடு"

"இவர்கள் எல்லாம் மோட்டார் சயிக்கிள் ஓடினால் றோட்டில் போற சனமெல்லாம் பாவங்கள்" வழமையான சிரிப்புடன் சங்கரண்ணை.

# தேன்

ஒன்றாக இருந்து படித்துப் பயிற்சி எடுத்து, சில வருடங்களின் பின் பிரிகிறோம். எம்மிற் சிலர் தனியாகத் தெரிவுசெய்யப்படுகின்றோம். வயதிற் சிறியவர்கள் இயக்க மொழியாயின் "பக்குட்ஸ்".

எமது "ஒற்றர்கள்" கடுமையாக வேலை செய்தனர். சங்கரண் ணையிடம் போகிறோம் என ஒருவாறு அறிந்துவிட்டோம். தலைமைச் செயலகத்தில் ஒருமுறை சங்கரண்ணையைக் கண்டுள்ளேன். முகம் சரியாக ஞாபகம் இருக்கவில்லை.

தனியாகத் தெரிவுசெய்யப்பட்ட நாம் ஒரு வாகனத்தில் ஏற்றப்படுகி றோம். வாகனம் முகாம் ஒன்றில் நிறுத்தப்படுகிறது. இறங்கி ஓரிடத் திற் கூட்டமாக நிற்கிறோம்.

தனியாக ஒருவர் எம்மை நோக்கி வருகிறார். நடை, தலைமைச் செயலகத்திற் கண்ட அதே நடை. நான் எனக்குள் தீர்மானித்துக் கொண்டேன். வந்தவர் "நான்தான் சங்கரண்ணை" பிரத்தியேகச் சிரிப் புடன் தன்னை அறிமுகப்படுத்திக்கொள்கிறார்.

ஒவ்வொருவராக அருகில் வருகிறார். தோளிற் கையால் தட்டிய படியே பெயரைக் கேட்கிறார். பெயரை மந்திரம்போற் பல தடவை உச்சரிக்கிறார். அந்தக் கணத்தில் இருந்து ஆள் மாறாட்டம் இன்றி எம்மைப் பெயர் சொல்லி அழைக்கத் தொடங்குகிறார்.

முகாமில் ஏற்கனவே சங்கரண்ணையுடன் நின்றவர்கள் சேவையா லும் வயதாலும் மூத்தவர்கள். அப்படையணியிலும் பல ஆண்டுகளை நிறைவு செய்தவர்கள்.

எனினும் சிறியவர்களான எமது தேவைகள் அனைத்தையும் சங்கரண்ணையே நேரிற் கவனித்தார். அதிக அக்கறை காட்டினார். ஒரு தந்தை தனது இளைய பிள்ளையிற் காட்டும் அதே கரிசனை இருந் தது.

தனது தங்குமிடத்தை ஒழுங்குசெய்து துப்புரவு செய்துகொண்டிருந்தார். எம்மில் மூவர் உதவியாளர்கள். புத்தகங்கள், அறிக்கைகள், ஆவணங்கள் எனச் சொல்வதை எடுத்துக் கொடுத்து அடுக்குவதற்கு உதவினோம்.

வேலைகள் முடிவுற்றன. தனது பை ஒன்றைத் திறந்தார். அதிலிருந்து கனத்த நிறையுடைய போத்தலை எடுத்தார். மற்றவர்கள் (பெரியவர்கள்) காணாமற் குடியுங்கோ. நாம் என்னவென முடிவுக்கு வரமுதல் "தேன்" என்றார் சங்கரண்ணை.

நாம் மகிழ்வோடு எடுத்துச் சென்றுகொண்டிருந்தபோது, எமது மகிழ்ச்சிகர நடமாட்டத்தை அவதானித்த கழுகுக் கண் ஒன்று எம்மை நோக்கி வந்தது. ஆம், பெரியவர்களில் ஒருவர். என்ன? என்ன? கேட்டபடியே வந்தார். நாம் வாய் திறக்க முதல்...

"அந்த ஓயில் சரியில்லை. அதைக் கொண்டு வாங்கோ இங்கை. மாத்தித் தாறன்" ஓங்கி ஒலித்தது சங்கரண்ணையின் குரல்.

வந்த பெரிசு தானாகத் திரும்பியது. கிட்டச் சென்றோம். "மடையங்கள் பின்னாலை போய்க் குடியுங்கோ. நான் சென்றி நிற்கிறேன்". எமக்குச் "சென்றியாகவே" நின்றார்.

- *ச. சகுந்தலன்* -
*சிறப்புப் படையணி*

# உதவுபவன் உதவுவதற்கு

பரந்தன் சாலை என்று ஒரு பகுதியிலும் முல்லைச்சாலை என்று ஒரு பகுதியிலும் அழைக்கப்படும் நீண்ட சாலை. வன்னியின் போக்கு வரத்து அதிகமுள்ள சாலை என்றே கூறலாம். நகர்கள் எனக் கூறுமளவிற்குப் பொலிவு பெற்று வரும் பல இடங்களை இணைக்கும் சாலை.

ஆனையிறவுச் சண்டையின் பின், அச்சாலை கிரவல் போடப்பட்டு நன்கு பேணப்பட்டிருந்தது. பீ.பீ.சி. தமிழோசைச் செய்தி அப்போதைய நேரத்தை உணர்த்தியது.

வீதி சன நடமாட்டமற்றே இருந்தது. வாகன ஓட்டமும் பெரிதாகத் தென்படவில்லை. ஆயினும், சங்கரண்ணை அமைதியான வேகத்திலேயே வாகனத்தைச் செலுத்துகிறார்.

விசுவமடுவை அண்மித்த வேளை உருவங்கள் இரண்டு அசைந்து செல்கின்றன. வாகன வெளிச்சம் பெண் போராளிகள் என்பதை உறுதி செய்கிறது. திரும்பிப் பார்த்துப் பார்த்துச் செல்கிறார்கள். வாகன வேகத்தை நன்றாகக் குறைத்துக் கொள்கிறார். மிக்க களைப்புடனும் சோர்வுடனும் செல்வதை, அவர்களது நடையும் வாகன வெளிச்சத்தில் தோன்றிய அவர்களது முகமும் எடுத்துக்காட்டின.

வாகனத்தை மறிப்பார்கள் என எதிர்பார்த்தார் சங்கரண்ணை. அவர்கள் அப்படிச் செய்யவில்லை. அவர்களைத் தாண்டிச் சிறிது தூரம் சென்றுவிட்டு வாகனத்தைத் திருப்பி வந்தார். அவர்கள் அருகில் நிறுத்தினார். "எங்கிருந்து வருகிறீர்கள். எங்கு போகிறீர்கள்?" கேட்டார் சங்கரண்ணை. "பளை" "புதுக்குடியிருப்பு" அவர்களது பதில்கள்.

"ஏன் வாகனத்தை மறிக்கவில்லை?" சங்கரண்ணையின் கேள்வி. "மறித்த வாகனம் ஒன்றும் நிற்கவில்லை" "அதுதான்" இழுத்தார்கள்.

ஒன்றை வைத்து இன்னொன்றைக் கணக்குப் போடாதீர்கள். கூறியபடியே இருவரையும் ஏற்றிக்கொண்டார்.

வாகனத்தை மீண்டும் பழைய திசைநோக்கித் திருப்ப முனைந் தார். அருகில் இருந்த வீட்டுக் காவல் நாய் ஒன்று வாகனத்திற்குக் குறுக்காக நின்று குரைத்துக்கொண்டிருந்தது. நாயிற்கே எனது வாகனத்தை மறிக்கத் துணிவிருக்குது. ஏன் உங்களுக்கு வரவில்லை என்றாரே. கொள்ளெனச் சிரிப்பொலி வாகனத்தை நிரப்பியது.

களைப்புடன் வந்தவர்களது நிம்மதிப் பெருமூச்சு, சிறிது நேரம் வாகனத்தில் நிலவிய நிசப்தத்தை ஊடறுத்தது.

தொடர்ந்து மெதுவாகப் பேசத் தொடங்கினார்கள். சங்கரண்ணை யிடம் அவரது பெயரைக் கேட்டார்கள். சிவசங்கரன் என்றார் சங்க ரண்ணை. எல்லோரும் சிரித்தோம். பொறுப்பாளரை முகாமில் விட்டு விட்டுத் திருத்தகத்திற்கு வாகனத்தை எடுத்துச் செல்வதாகத் தொடர்ந்து கூறினார் சங்கரண்ணை. ஏதோ கிசுகிசுத்துக்கொண்டார்கள்.

இருவரும் இறங்கவேண்டிய இடம் வந்துவிட்டதாகத் தெரிவித்தனர். வாகனம் வேகத்தைக் குறைத்து வீதியின் இடப்பக்கமாக நிறுத்தப்படு கிறது. "உங்கள் பெயரென்ன?" மீண்டும் கேட்கிறார்கள். சொன்ன பெயரின் முன் இரு எழுத்துகளையும் கடைசி எழுத்தையும் எடுத்து விட் டுப் பார்க்கவும் என்றார் சங்கரண்ணை.

யாரென விளங்கிக்கொண்டார்கள். இறங்கும்போது நன்றி கூறி னார்கள். போராளி என்பவர் ஒருவருக்கு உதவுபவரே. உதவுபவருக்கு உதவுபவன் உதவுவதற்கு நன்றி சொல்லத் தேவையில்லை என்றாரே சங்கரண்ணை.

*- எழிவன் -*

*சிறப்புப் படையணி*

# விமானம்

1998 ஆம் ஆண்டு முதன்முதற் சங்கரண்ணையைச் சந்திக்கிறோம். நாற்சக்கர வண்டியில் வந்த எம்மைப் பார்த்து எழுந்துநின்று வணக்கம் செலுத்தி எங்களுக்காக வருத்தப்பட்ட அன்றே எங்கள் நெஞ்சங்களில் நிலைத்துவிட்டார்.

எங்களை அடிக்கடி வந்துபார்க்கும் ஒருவர். எங்களுடன் நெருக்கமாகப் பழகிய மனிதர். அவர் வருவார் இல்லையேல் எங்களைத் தனது வீட்டிற்கே அழைப்பார். அவரை நாங்கள் புரிந்துகொண்டோம். அவர் எங்களைப் புரிந்துகொண்டார். எப்போதும் சிரித்த முகம். எதையும் இயல்பாகச் சிந்திக்கும் கண்கள். எதையும் படித்து ஆராய்ந்து அறியும் மனவியல்பு. மென்மையான உள்ளம். எதையும் பகடியாகக் கதைப்பது அவரின் இயல்பு.

சங்கரண்ணை வரும்போது எல்லாம் எங்களிடம் கேள்விகள் கேட்பார். விடை தெரியாதெனின் விடைகளைக் கூறுவார். விரிவான ஒரு விளக்கமே அவரிடமிருந்து கிடைக்கப்பெறும். படிக்கவேண்டிய புத்தகங்கள் குறித்து எடுத்துரைப்பார். மனந்தளராது வாழப் பல ஆலோசனைகள் கூறுவார்.

இரு கால்களையும் இழந்த நிலையிலும் விமானமோட்டியாகிய வீரனின் வாழ்க்கையை எடுத்துக்கூறி எங்களுக்குத் தெம்பூட்டுவார்.

நேரம் கிடைக்கும்போதெல்லாம் தான் மட்டுமல்ல குடும்பமாகவே எமது முகாமிற்கு வந்து எங்களுடன் பேசி மகிழ்ந்து செல்வார்.

எங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவதில் முன்னிற்பார். ஒரு தடவை வந்தபோது, அவரது வாகனத்தில் இருந்த பூனைக்குட்டிப் பொம்மையினைப் போராளி ஒருவர் அழகாக இருக்கிறது எனக் கூற அதைக் கழற்றிக் கொடுத்துவிட்டுச் சென்றார்.

சிலநாள் கழித்து அவரது வீட்டில் தொங்கிய பொம்மை விமான மொன்றையும் அனுப்பிவைத்தார். எமது முகாமின் முன்புறத்தில் தொங் கியபடி காற்றுக்கு அசைந்தாடும் அந்த விமானத்தைப் பார்க்கும்போது சங்கரண்ணையின் அசைவுகள் மீட்கப்படுகின்றன.

*- மயூரி முகாம் போராளிகள் -*
*மருத்துவப்பிரிவு*

# நினைவொலி

லெப்.கேணல் நவம் ஒரு கையைப் போராட்டத்தில் இழந்தபோதும் துடிப்புடன் செயற்பட்ட போராளி. இந்திய இராணுவக் காலத்தில் மண லாற்று மண்ணில் தலைவர் அவர்கள் நடாத்திய சமர்களுக்குப் பக்கத் துணையாக இருந்தவன். மணலாற்றுக் காட்டின் மரங்கள் ஒவ்வொன்றை யும் அறிந்திருந்த சிறந்த வழிகாட்டி.

களங்கள் பல கண்டு போர்க்களத் தாக்கத்தாற் புலன்களின் செயலிழந்தோர், உறுப்புகளை இழந்தோர், உறுப்புணர்வு அற்றோர் எனப் பலவகையான போராளிகளுக்கும் அறிவூட்ட அவர்களின் எதிர்காலத்தை வளப்படுத்த அவர்கள் அடைந்த குறைகளுக்கு அப்பால் தேசத்தின் விடு தலைக்காக உழைக்க வைக்கத் தலைவரின் சிந்தனையில் உருவானது தான் லெப்.கேணல் நவம் அறிவுக்கூடம்.

லெப்.கேணல் நவம் அறிவுக்கூடத்தின் வருடாந்த விளையாட்டுப் போட்டி ஒன்றுக்காகச் சங்கரண்ணையிடம் பரிசுப் பொருள் ஒன்று வாங் கித் தரும்படி கேட்டுச் சென்றேன். நவம் அறிவுக்கூடம் பற்றி அங்குள்ள போராளிகளின் மனநிலை பற்றிப் பலதையும் கேட்டுத் தெரிந்துகொண் டார். பல ஆலோசனைகள் கூறினார். அறிவுறுத்தல் பல சொல்லி உதவினார்.

சிறிது நேரம் சிந்தனையில் மூழ்கினார். பின்பு மீண்டும் அறிவுக் கூடம் பற்றிப் பல கேள்விகளைக் கேட்டார். போராளிகளின் பொழுது போக்குகள் பற்றிப் பேசினார். அவருக்கேயுரிய சிரிப்புடன் களம் பல கண்டு பார்வை இழந்தவர்களுக்குப் பயன்தரக்கூடிய ஒரு பொருளை அனுப்பி வைக்கிறேன் என்றார்.

இரு நாட்களின் பின் அறிவுக்கூடத்தை நோக்கிச் சங்கரண்ணை யின் அன்புப் பரிசு வந்தது. நீண்ட ஒரு பொதியாகக் காணப்பட்டது. கவனமாக உடைக்கவும் என்ற அவரின் அழகான எழுத்துக்களும் அதில் இருந்தன.

கவனமாக உடைத்தோம். மிகப் பெறுமதியான ஒரு பரிசு. ஒகன் இசைக்கருவி. அறிவுக் கூடத்தில் உள்ள ஆண், பெண் போராளிகள் அனைவரின் இதயத்திலும் சங்கரண்ணையின் நினைவொலியை இன்றும் பரப்பி நிற்கின்றது.

தீபா
அரசியற்றுறை



# வழிகாட்டி

பல்வேறு வயதுகளைக் கொண்டவர்கள், பல்வேறு வளர்ச்சிப் படிகளில் உள்ளவர்கள், பல்வேறு பின்னணிகளில் வளர்ந்தவர்கள் எனப் பல திசைகளினின்றும் வந்தவர்கள் ஒரே இலட்சியப் பாதையில் தம்மை வரித்துக்கொண்டு போராளிகளாகிறார்கள்.

போராளிகள் அனைவரையும் இலட்சிய உரமேற்றுவதில், தலைவரின் சிந்தனைக்கேற்ப வழிநடத்துவதில், அவர்களுக்கு ஏற்படும் மனத் தாங்கல்களை அவர்களின் உள்ளத்தினுள் ஊடுருவித் தீர்த்துவைப்பதிற் சங்கரண்ணைக்குச் சங்கரண்ணையே சமம்.

கொலின்ஸ் ஒரு போராளியாக இருக்கிறான். அவனது உள்ளத்திற் சில தாக்கங்கள் ஏற்படுகின்றன. அவன் மனமுடைகிறான். வேதனையின் உச்ச நிலை அவனது புத்தியைப் பாதிக்கிறது. இலட்சியப் பாதையை விட்டு விலக அவனது உள்ளம் தூண்டப்படுகிறது. இயக்கத்தில் இருந்து விலகுவதென முடிவெடுக்கிறான்.

செய்தி சங்கரண்ணையை எட்டுகிறது. கொலின்சின் தோள்களைச் சங்கரண்ணையின் கைகள் அர்த்தத்துடன் பற்றுகின்றன. விம்மலுடன் கொலின்ஸ் சொல்லும் வார்த்தைகள் ஒவ்வொன்றையும் ஆழமான அவதானிப்புடன் கிரகிக்கிறார். தனது பிரச்சினையை அக்கறையுடன் கேட்கிறார் என்ற முதல் திருப்தி கொலின்சிற்கு ஏற்படுகிறது.

“இல்லை மோனை கொலின்ஸ்” சங்கரண்ணையின் மென்மையான குரல். அர்த்தமுள்ள கருத்துக்கள், இலட்சியத் தீயைப் புகட்டும் போராட்டத் தெளிவுகள் கொலின்சின் நெஞ்சத்தில் ஊடுருவிக் கொள்கின்றன.

ஒரு பெருமூச்சு விடுகிறான் கொலின்ஸ். அவனது விம்மல் மறைகிறது. முகத்தில் ஒரு புதுத் தெம்பு பிரகாசிக்கிறது. உற்சாகப் பிரதிபலிப்புக்களை அவனது செய்கைகள் வெளிக்காட்டுகின்றன. தொடர்ந்தும் சங்கரண்ணை கதைக்கிறார்.

கடற்கரும்புலி கப்டன் கொலின்சாக, முதற் கடற் கரும்புலித் தாக்குதலின் நாயகர்களில் ஒருவனாக, விடுதலைப் போராட்ட வரலாற்றுப் பதிவில் தன்னையும் ஒருவனாக்குவதற்கு, வழிகாட்டி வளர்த்தவர்.

- அம்மா -
லெப்கேணல் ராதா விமான
எதிர்ப்புப் படையணி

# கனனி

1988 ஆம் ஆண்டு. இந்திய இராணுவ முற்றுகைக்குள் இருந்தது மணலாற்றுப் பிரதேசம். இந்திய இராணுவ நகர்வு அணிகளுக்குப் பயமுறுத்தலாய் அமைந்திருந்தன 'ஜொனி' மிதி வெடிகள். காட்டின் இயற்கை மறைப்புக்களில் ஒளிந்து கொண் டிருந்தன. தம்முள் உள்ள மின்கலங்கள் உயிருடன் உள்ளவரை எதிரியை எதிர்பார்த்துக் காத்தே இருந்தன.

தவறு ஒன்று நடந்துவிட்டது. எமது போராளி ஒருவர் 'ஜொனி' ஒன்றில் தவறுதலாக மிதித்துவிட்டார். உணர்வலைகள் அவனை வேகப்படுத்தின. வேகமாகப் பின்வாங்கினான். ஆனால் 'ஜொனி' கள் முந்திவிட்டன. முதற் கால் பதித்த 'ஜொனி' வெடித்துவிட்டது. ஒரு கால் அதில் சின்னபின்னமாகியபோது, மறு காலும் ஒரு 'ஜொனி' யில் பதிந்துவிட்டது. அதுவும் முழங்கியது; அடுத்த காலும் சிதைந்தது.

வெடிச்சத்தங்கள் இந்திய இராணுவத்தைத் தட்டி எழுப்பி யிருக்கும் என எண்ணியிருப்பான். தன்னால் இந்தப் புனிதப் பாதைக்கு இடையூறு ஏற்பட்டுவிடக்கூடாது என எண்ணியிருப்பான். இரண்டு கால்களையும் இழந்த நிலையில் அவ்விறுக்க வாழ்வில் அவனைப் பாதுகாப்பது, பராமரிப்பது, மருத்துவ வசதி, எல்லாம் அவன் முன் தோன்றியிருக்கக்கூடும். சயனைட் குப்பியைக் கடித் துக்கொள்கிறான் கப்டன் சுபேசன்.

சங்கரண்ணையும் அக்காலத்தில் அங்கேயே இருந்தவர்.

இரண்டாயிரமாம் ஆண்டு நிகழ்வொன்றிற் சங்கரண்ணையைச் சந்திக்கிறேன். வழமையான பேச்சுக்கள். என்னுடன் கூட நின்ற போராளியை அறிமுகப்படுத்துகிறேன். கப்டன் சுபேசனின் தங்கச்சி.

கப்டன் சுபேசனின் வீரச்சாவை நினைவு கூருகிறார். 1990 இல் அவர்களின் வீட்டிற்குப் போனதை எடுத்துக் கூறுகிறார். வீட்டின் ஒவ்வொரு அங்கத்தவர்களைப் பற்றியும் ஞாபகப்படுத்தி, ஒவ்வொருவரும் என்ன செய்கிறார்கள் எனக் கேட்டறிகிறார்.

தெரிந்தவர்கள், போராளிகள் அனைவரையும் ஆழமாக நேசிக்கும் அவரது பண்பு அங்குத் துலங்குகிறது. தெரிந்தவரைப் பற்றி, அவரைச் சந்திக்காவிட்டாலும் அறிந்துவைத்திருக்கும் அபூர்வ மனப்பாங்கு அவரிடம் இருந்தது.

பல்வேறு தரவுகளையும் உள்ளடக்கிய ஒரு கணனியாகவே செயற்பட்டவர்.

*இ. குந்தவை*
*புலவிாய்வுத்துறை*

# ஒழுக்கம், கட்டுப்பாடு

இந்திய இராணுவ ஆக்கிரமிப்புக் காலத்தில் நகர்ப்புறங்கள் இந்திய இராணுவத்தின் முற்றுகைக்குள்ளாயின. விடுதலைப் புலிகளின் அணிகள் காடுகளை நோக்கி நகர்ந்தன. காடுகளில் நகரும் அணிகளாக இருந்த அணிகள் படிப்படியாகத் தங்குமிடங்களை அமைத்துத் தங்கின.

விடுதலைப் புலிகளின் பெண் போராளிகளின் முகாமில் வழமையான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தோம். முகாமிற்குரிய காவற்கடமை எல்லாம் ஒழுங்காகவே இருந்தன. திடீரென வெடிச்சத்தங்கள் முகாம் சூழலெங்கும் கேட்டன. இந்திய இராணுவத்தின் முற்றுகைக்குள்ளானது முகாம். பெண் போராளிகள் அனைவரும் தீவிரமாகப் போராடினர். இந்திய இராணுவத்தின் சுற்றிவளைப்பில் இருந்து சாதுரியமாகப் பின்வாங்கிப் பாதுகாப்பான இடம் நோக்கி நகர்ந்தனர். இந்திய இராணுவத்தினருடனான இச்சண்டையின்போது எமது சகபெண் போராளி லெப்.துர்க்கா வீரச் சாவைத் தழுவினார்.

பின்வாங்கிய பெண் போராளிகள் அணி, எமது முகாமில் இருந்து சில கிலோமீற்றர் தள்ளியிருந்த 'கரன்' முகாமுடன் தொடர்பை ஏற்படுத்தியது.

'கரன்' முகாம் என்பது சங்கரண்ணையின் முகாமாகும். பெண் போராளிகளுக்குத் தனது முகாமில் ஒரு பகுதியை ஒதுக்கிக் கொடுத்தார். ஒரே முகாமின் ஒரு பகுதியில் ஆண் போராளிகள் மறு பகுதியில் பெண் போராளிகள்.

பெண் போராளிகளின் பக்கப் பாதுகாப்பிற் சங்கரண்ணை அதீத அக்கறை காட்டினார். ஒரே முகாமில் ஆண் போராளிகளுடன் இருந்த போதும் சங்கரண்ணையின் வழிகாட்டல் எவ்விதத்திலும் சிக்கல்கள் ஏற்படாதவாறு செயற்பட வழிசெய்தது.

*- தீபா -*
*அரசியற்றுறை*

# பிழைவிட்டால்

கிலோ லீமா - எனது சங்கேதப் பெயரிட்டு ஒரு துண்டு வருகிறது. ஸ்டப்ளர் கிளிப்பினால் தைக்கப்பட்டிருந்தது. துண்டில் இருந்த எழுத்துக்கள் சங்கரண்ணையின் துண்டு என்பதை உறுதி செய்தன. பட்டியலிடப்பட்ட சில பொருட்களை நான் இருந்த முகாமில் உள்ள களஞ்சியத்தில் இருந்து அனுப்பி வைக்கும்படி கேட்டிருந்தார் சங்கரண்ணை.

பொருட்கள் எடுக்க வந்தவர் வேறு அலுவல்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். பெட்டி ஒன்றை எடுத்தேன். பட்டியலிடப்பட்ட பொருட்களை அடுக்குவதில் ஈடுபட்டேன். இடையிடையே வோக்கி அழைப்புக்கள் என்னை இடையூறு செய்தன.

பொருட்களைப் பெட்டியினுள் போட்டுக் கட்டி, வந்தவரிடம் கொடுத்தனுப்பினேன். அவர் மோட்டார் சயிக்கிளில் வந்திருந்தார். மாலை நேரம் பொருட்களுடன் புறப்பட்டார். சங்கரண்ணையின் முகாமையடைய நடு இரவாகி இருக்கும். காலையில் எமது எல்லா நிலையங்களும் தொலைத்தொடர்பை ஏற்படுத்தும் நேரம். நானும் தொடர்பை ஏற்படுத்தினேன். சங்கரண்ணையும் அவரது இடத்துத் தொலைத் தொடர்புச் சாதனத்தின்மூலம் தொடர்பு கொண்டு என்னைத் தொடர்பில் நிற்கும்படி கூறிவிட்டு ஏனைய நிலையங்களுடன் பேசிமுடித்தார்.

இறுதியாக என்னைக் கூப்பிட்டார். ஏதோ சிக்கல் உண்டென்பது எனக்கு விளங்கிவிட்டது. நான் தடுமாறிக் கொண்டு 'ஓம்' என்றேன். பட்டியலின்படி ஏன் சாமான்கள் அனுப்பவில்லை? கவனயீனம். எவ்வளவு எண்ணெய் செலவு செய்து வந்தது. தொடர்ந்து பொரிந்து தள்ளினார். நான் எதுவும் பேசவில்லை. ஒரு பொருளை வைக்கத் தவறியதை உணர்ந்தேன். தவறிய பொருளைக் குறிப்பிட்டு அதை எடுத்துக்கொண்டு சயிக்கிளில் தனதிடத்திற்கு வரும்படி கூறினார். இடையில் உள்ள எமது முகாமில் வந்து தொடர்பெடுக்கும்படியும் கூறினார்.

முள்ளியவளை. அடுத்துப் புதுக்குடியிருப்பே தொடர்பெடுக்க வேண்டிய முகாம் உள்ள இடம். வள்ளிபுனம், சுதந்திரபுரம், உடையார் கட்டு, விசுவமடு, வட்டக்கச்சி மேலும் சில கிராமங்கள் தாண்டி மாங் குளத்தை அண்மிக்க வேண்டும். அங்குதான் சங்கரண்ணை. எழுபத் தைந்திற்கு மேற்பட்ட கிலோமீற்றர் சயிக்கிள் ஓடவேண்டும். கடைசி இருபது கிலோ மீற்றர் காட்டுப்பாதை. இருட்ட முதற் போகவேண்டும். வேகமாகச் சயிக்கிளை மிதித்தேன். முக்கால் மணி நேரத்திற் புதுக் குடியிருப்பை அடைந்துவிட்டேன்.

எமது முகாமிற்குச் சென்றேன். சங்கரண்ணையின் முகாமுடன் தொடர்பை ஏற்படுத்தினேன். தொலைத்தொடர்புச் சாதனத்தினூடாகச் சங்கரண்ணையின் குரல் ஒலித்தது. நான் யார் பேசுகிறேன் என்பதைத் தெரியப்படுத்தினேன். என்ன நடந்தது. ஏன் குறிப்பிட்ட பொருளை வைக்கவில்லை என்றார். என்னுடைய பிழைதான் அண்ணை. இனி மேற் கவனமாகப் பட்டியலில் இருப்பதைப் பார்த்து அனுப்பி வைப்பேன் இனிப் பிழை விடமாட்டேன் என்றேன்.

“பிழை விடுறது வழமை அதை ஒப்புக்கொள்ளோணும் ஐசே” “ஒப்புக்கொள்வதுதான் திருந்துவதற்குச் சமன் ஐசே” என்றார். “என் னெண்டைசே இவ்வளவு தூரமும் வரப்போகுறீர்” தொடர்ந்தார். நான் நின்ற முகாம் பொறுப்பாளரிடம் தான் சொன்னதாகக் கூறிப் பணம் வாங் கச் சொன்னார். குளிர்களி வாங்கிக் குடித்து விட்டு, எனது முகாமில் நிற்பவர்களுக்கு மிதிவெடி வாங்கிக் கொண்டு போகும்படி கூறினார். “பிழையை ஒப்புக்கொள்ளோணும் ஐசே” இறுதியாகவும் அதையே கூறி முடித்தார்.

*- குழல்வாணன் -*
*சிறப்புப் படையணி*

# அவதானிப்பு

1990 ஆம் ஆண்டு. இந்திய இராணுவம் தமிழீழப் பிரதேசங்களை விட்டு வெளியேறியவேளை, பலரும் வனவாசம் முடித்துத் திரும்பிக் கொண்டிருந்தோம். கூடுதலாக முகாம்கள் தென்மராட்சியின் பல பாகங் களிலும் இடம்பிடிக்கத் தொடங்கின. எனக்கும் தென்மராட்சியில் ஒரு முகாம். சங்கரண்ணைக்கும் ஒரு முகாம். ஆயினும் இரண்டு முகாம் களும் தென்மராட்சியின் இரு தொங்கல்களில் - பல கிலோமீற்றர் இடைத்தூரம்.

சங்கரண்ணையைச் சந்திப்பதற்குச் சென்றேன். அது ஒரு இரவு நேரம். வானொலி இயங்கிக் கொண்டிருந்தது. கோப்புகள் மேசையில் படுத்திருந்தன. ஆனால், அவற்றைத் தூங்கவிடவில்லை. சங்கரண்ணை இடையிடையே அவற்றின் வாயைத் திறந்து புதுப்புது விடயங்களை ஊட் டிக் கொண்டிருந்தார். சூழவிருந்த புத்தகங்கள் சங்கரண்ணையின் விரல் களின் வருடலால் தமது இதழ்களை மாற்றி மாற்றிச் சங்கரண்ணையின் சிந்தனைக்குத் தீனி போட்டுக்கொண்டிருந்தன.

என்னைக் கண்டவுடன் “வாங்கோ” என அழைத்துக் கதிரையில் அமரச்சொன்னார். தேவையானவற்றைக் கதைத்தேன். எனது தேவை களுக்குரிய விடயங்களைப் பேசிக்கொண்டே கோப்புகளைத் தூங்க விட வில்லை. இடையிடையே எமது பேச்சுக்கள் திசை திரும்பும். மணலாறு, இந்தியா, தலைவர், கொழும்பு எனப் பலதையும் தொட்டு மீள எமது தேவைப் பேச்சிற்கு வரும். நீண்ட நேரம் பேசினோம். நேரம் நள் ளிரவை நெருங்கிக்கொண்டிருந்தது. விடைபெற்றேன்.

முகாமில் ஏனையவர்களுடனும் சிறு சிறு விடயங்களைப் பேசி விட்டுப் புறப்பட்டேன். பல சிந்தனைகளுடன் சென்று கொண்டிருந்தேன். இடையில் நெஞ்சு திக்கென்றது. எனது துப்பாக்கியைச் சங்கரண்ணை யின் முகாமில் விட்டுவிட்டு வந்துவிட்டேன். உடனே திரும்பினேன். சங்கரண்ணை அறிந்துகொண்டால்... மேலும் உடலெங்கும் பய உணர்வு அதிகரித்தது.

மீண்டும் முகாமிற்குச் சென்றேன். சற்றுச் சுதாகரித்துக் கொண்டேன். எவ்வித ஆரவாரமும் இன்றிக் கிணற்றடிக்குச் சென்று முகம் கழுவினேன். இவை யாவற்றையும் சங்கரண்ணையின் புலன்களுக்கு எட்டக்கூடியவாறே செய்தேன். சர்வசாதாரணமாக எனது துப்பாக்கி இருந்த இடத்திற்குச் சென்றேன். அந்த நேரத்திலும் சங்கரண்ணையின் பணி தொடர்ந்தது. நான் துப்பாக்கியை எடுத்தேன். "ஆம்சை மறந்து போய் விட்டிட்டுப் போட்டியளோ?" கீழே குனிந்து குறிப்பெழுதியபடியே சங்கரண்ணை குரல் கொடுத்தார். பதில் எதுவும் சொல்ல வாய் வரவில்லை.

*-சசிக்குமார்-*
*குட்டிசிறி பீரங்கிப் படையணி*

# கெஞ்சிய நாள்

லெப்.கேணல் ஜஸ்ரின் ஒரு சுவாரஸ்யமான போராளி. எப்பவும் அவனைச் சுற்றிச் சில போராளிகள் இருப்பர். அவனது நகைச்சுவை நிரம்பிய பேச்சை ரசிப்பதற்குக் காத்திருப்பர். வாய்வழி வெளிவருவ தெல்லாம் இயக்க மொழியில் 'பைம்பல்' ஆகவே இருக்கும். அவனுடன் கூடச் சிறிது நேரம் இருந்தாலே உடற்களைப்பெல்லாம் நீங்கிவிடும்.

மணலாற்றுக்காட்டில் வேலைகள் கடுமைதான். நடை, உண விழுப்பது, காவற்கடமை, கிணறடிப்பது எல்லாமே தொடர்ந்து வந்த வண்ணமிருக்கும். பொதுவாகவே ஜஸ்ரினுடன் கூடித்திரிபவரில் நானும் ஒருவன்.

சிங்கள மொழி ஆற்றல் ஜஸ்ரினின் சிறப்புக்களில் ஒன்று. அறி வியல் விடயங்களிலும் அவன் ஆர்வமானவன். புதியவற்றை அறிய வேண்டும் என்பதிற் கவனம் செலுத்துபவன். இப்பண்புகள் சங்கரண் ணையை அவன்பால் ஈர்த்தன.

நேரம் கிடைக்கும்போதும் இரவுப் படுக்கையின்போதும் சங்க ரண்ணையும் ஜஸ்ரினும் நானும் பலதும் பத்தும் பற்றிப் பேசுவோம்.

ஓர் இரவு, முகாம் அலுவல்களில் ஈடுபட்டு விட்டு வந்து படுத் தோம். ஜஸ்ரினின் பேச்சு சங்கரண்ணையையும் மெய்ம்மறந்து சிரிக்க வைக்கிறது.

பேச்சுக்கள் அரைமணி நேரத்திற்கு மேலாகத் தொடர்கின்றன. சங்கரண்ணை ஆழ்ந்த நித்திரைக்குச் சென்றுவிடுகிறார். அவரின் தூக் கத்தின் விளைவான இயந்திர ஒலி இரவின் நிசப்தத்தை விட்டு விட்டு ஊடறுத்தது.

பேச்சுக்கள் தொடர்ந்தன. பேச்சுத் திசைதிரும்ப முனைந்தது. ஜஸ்ரின் எச்சரிக்கையானான். சங்கரண்ணையின் தூக்கத்தை உறுதி செய்ய எண்ணினோம்.

பேச்சில் இடையிடையே சங்கரண்ணையையும் சேர்த்து "என்ன அப்படித்தானே சங்கரண்ணை" என்றோம் பதில் குறட்டைதான். மீண்டும் இரண்டு, மூன்று தடவை முயன்றோம். பதில் குறட்டை.

எமது உரையாடல் கேலியும் 'பைம்பலும்' நிறைந்த திசையிற் சென்றது. "உதெல்லாம் உந்தாளுக்குத் தெரிஞ்சுதெண்டால்" இடையிடையே ஜஸ்ரின் சங்கரண்ணையைச் சுட்டிக்காட்டினான். பேச்சுக்கள் தொடர்ந்தன. அன்று பேசுவதற்கும் வேறு இருக்கவில்லை. தூங்கிவிட்டோம்.

காலை முகம் கழுவ மூவரும் சென்றோம். வழமைபோல் பல் வேறு விடயங்களைப் பேசிக்கொண்டே சென்றோம். சங்கரண்ணை முகம் க்ழுவ ஆரம்பித்தார். ஒவ்வொரு முறையும் நீரால் முகத்தை நனைத்துவிட்டுச் சிரிப்பார். அவர் 'தூங்கின' பின் நாம் பேசிய ஒவ்வொரு விடயத்தையும் கூறினார். பய உணர்வு எம்மைப் பற்றிக்கொண்டது.

காலில் விழாத குறை. "இனிமேற் கதைக்கமாட்டோம். அண்ணேட்டைப்போய் சிரிச்சுப் போடாதேயுங்கோ" கெஞ்சிக் கேட்டுக்கொண்டோம்.

*- பிருந்தன் -*
*படைய அறிவியற் கல்லூரி*

# தப்ப முடியவில்லை

தங்குவதற்கெனத் தனிக் கொட்டில் இல்லை. அடுத்தடுத்து உள்ள கொட்டில்களில் ஒன்றில் தங்குவார்.

அவற்றுடன் இணைந்ததே எனது தங்குமிடம். இரவு நித்திரையின் போது வாய்புலம்புவது எனது இயல்பு. கேள்விகள் கேட்டாற் பல பதில் களும் சொல்வேன். பலரும் என்னைப் பற்றிப் பேசும் விடயங்கள் இவை.

நான் புலம்பிய பல விடயங்களைப் பலர் முன்னிலையில் பல தடவைகள் எடுத்துக்கூறி என்னைக் கிண்டலடித்துச் சிரித்த சந்தர்ப்பங் கள் நிறைய உண்டு.

ஒரு நாள், நான் எனது படுக்கை இடத்திற்கு வந்து விட்டேன். சங்கரண்ணை வரவில்லை. சங்கரண்ணையின் மேசையில் பத்திரிகை கள் இருந்தன.

கவனமாகப் பார்த்தேன். பத்திரிகைகளை மெதுவாக எடுத்துப் புரட்டிக் கொண்டிருந்தேன். சற்று நேரத்தில் தூரத்திலே சங்கரண்ணை யின் அசைவுகள் தென்பட்டன.

பத்திரிகைகளை இருந்த மாதிரி வைத்துவிட்டு, எதுவும் தெரியாது ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பவன்போலப் படுத்துக்கொண்டேன்.

கொட்டிலினுட் பிரவேசித்த சங்கரண்ணை, வழமைபோல சுற்றும் முற்றும் தன் கையில் இருந்த வெளிச்சத்தைப் பாய்ச்சினார். வெளிச்சக் கீற்று என் முகத்தையும் தடவிச் சென்றது. முகத்தில் ஒரு கணம் அது நின்று சென்றதையும் உணர்ந்தேன்.

கண்ணில் ஒரு நீக்கலை ஏற்படுத்தினேன். மேசையில் இருந்த விளக்கு வெளிச்சத்தில் மேசையை ஒரு நோட்டம் விடுவதைக் கண்டேன்.

பயம் தொத்திக் கொண்டது. பிடிபட்டால் என்ன செய்வது. மேலும் நெஞ்சு படபடத்தது. நித்திரை அறிகுறிகளை மேலும் பலப் படுத்தினேன்.

சிறிய நிசப்தம். "கலோ கலோ" "எக்கோ நவம்பர்" தொலைத் தொடர்புச் சாதனத்தில் என்னைக் கூப்பிடுவது போன்று கூப்பிட்டார். நானும் வாய்புலம்புவது போல" முன்னால் ரெண்டு கூடுங்கோ என்றேன்.

சற்று நேரம் அமைதி நிலவியது. நான் நித்திரை என்பதை உறுதி செய்துவிட்டார் என்ற திருப்தி. அப்பாடா தப்பிவிட்டேன் என்ற உணர்வு.

மேலும் நேரம் கழியவிட்டேன். மெதுவாகக் கண்ணைத் திறந் தேன். ஒழித்து நின்ற சங்கரண்ணை கையிலிருந்த கொட்டனாற் பல மாக அடித்தார். சிரிப்பு ஒருபுறம். நோ ஒருபுறம். ஆச்சரியம் மறுபுறம். மேலும் அடி விழுமுன் ஓடித் தப்பிக் கொண்டேன். "எனக்குச் சுத்தி ராய் என்ன" சங்கரண்ணையின் ஓங்கிய குரல் ஓடும் எனது காதில் ஒலித்தது.

*- த. இனியவன் -*
*முன்னாட் போராளி*

# படுப்பதிலும்...

காவு தடிகளில் உணவுப் பண்டங்களை நீண்டதூரம் தொடர்ந்து சுமந்த களைப்புத்தீர இடைநிறுத்தி சிறப்புணவு உண்டு களைப்பாறினர்.

வெட்டப்படும் மண் உரப்பைகளிற் போடப்பட்டு கப்பிகள்மூலம் இழுத்தெறியப்படுகிறது. கிணறு வெட்டும் பணி ஒரு பக்கம் நடக்கிறது.

பதுங்கு குழிகள் வெட்டப்படுகின்றன. வளைய வடிவப் பாதுகாப்பு வியூகத்தோடு காப்பரண்கள் அமைக்கப்படுகின்றன.

கப்புகள் நிறுத்தப்படுகின்றன. வளைகள் மூட்டப்படுகின்றன. கூரை வேய்தல் ஒருபுறம் நிகழ்கிறது. நீரூடறுத்தோடிய பகுதிகளில் இருந்து மணல் எடுக்கப்பட்டுக் கொட்டில்களின் தரையில் பரவப்படுகிறது.

முகாம் வேலைகள் யாவும் துரிதகதியில் நடைபெறுகின்றன. தங்குமிடங்கள் ஒதுக்கப்படவில்லை. வேலை முடிந்ததும் உடல் அசதியால் அம்பிடும் இடங்களிற் படுத்துவிடுவார்கள்.

கிணறு வெட்டும் இடத்திற் சிறிது நேரம். பதுங்குகுழி அமைக்கும் இடத்திற் சில அறிவுறுத்தல். நீர் நன்கு கொதிக்கிறதா என சமையற் கூடத்தில் ஒரு நோட்டம். கூரை வேய்தல் சரியாக இருக்கிறதா ஒரு பார்வை. இவ்வாறாக முகாமினுள்ளேயே தொடர்ந்து பல கிலோமீற்றர்கள் நடந்த களைப்பு. சங்கரண்ணையும் இறுதியாக நின்ற பகுதியில் ஓரிடத்திற் படுத்துக் கொள்வார்.

சங்கரண்ணை படுத்ததும் அச்சுற்றாடலிற் படுத்திருப்பவர்கள் யாவரும் ஒவ்வொருவராக மெதுவாக அவ்விடத்தினின்றும் அகன்று கொள்வார்கள். சத்தத்திற் படுத்துப் பழக்கமில்லாதவர்கள் சங்கரண்ணையின் குறட்டைச் சத்தத்தால் "ஜெனரேட்டர் சத்தத்தில் எப்படிப் படுப்பது" என முணுமுணுத்தபடி செல்வார்கள்.

"ஏதாவது மாறிக் கீறி கதைச்சுப் போடுவம்" பிறகு இந்தாள் அண்ணையிட்டைப் போய் 'சிரிச்சுப் போடும்' சைகையால் ஒருவருக் கொருவர் உணர்த்திக்கொண்டு, இடத்தைக் காலி பண்ணும் மற்றொரு பகுதியினர்.

*- பிருந்தன் -*

*பழைய அறிவியற் கல்லூரி*

# குறும்புத்தனம்

இந்திய இராணுவத்துடன் சண்டை தொடங்கிக் காடுகளினுள் வந்துவிட்டோம். உணவிற்குத் தட்டுப்பாடு நிலவியதாற் பெரும்பாலும் சோறும் ஒரு கறியும்தான் கிடைக்கும்.

சோறும் கருவாடு போடப்பட்ட பூசணிக்காய்க் கறியும்தான் அன்றைய மதிய உணவு. நான் அசைவ உணவுகள் உண்பதில்லை. வழமையாக இவ்வாறான வேளைகளிற் கருவாட்டைத் தவிர்த்து பூசணிக்காயில் தனியாக ஒரு சைவக் கறி வைத்துத் தருவார்கள். அன்று சமையல் செய்தவர் அதை மறந்துவிட்டார்.

எல்லோரும் வரிசையாக இருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். நான் ஒரு கரையிற் சாப்பிடாமல் இருந்து ஏனையவர்களுடன் கதைத்துக் கொண்டிருந்தேன்.

அங்குப் பிரவேசித்தார் சங்கரண்ணை. சோற்றுப் பானையைப் பார்த்தார். பலரையும் நோட்டமிட்டார். சிரித்தார். சிலரிடம் சில சொற்கள் பேசினார். அவரது பார்வை வலயத்தில் நான் வந்தேன். என்னில் அவரது பார்வை பட்டதும் அப்படியே தரித்துக் கொண்டது. ஊடுருவும் கேள்விகளைக் கேட்டார். நான் அப்படியே உண்மையைக் கக்கிவிட்டேன். "மச்சமில்லாத கறி ஏன் சமைக்கேல்லை" முணுமுணுத்தபடியே சென்றுவிட்டார்.

சில நிமிடங்கள் கழித்து ஒரு பாத்திரத்திற் கறி என்னை நோக்கி வந்தது. கொண்டுவந்தவர் "சைவக்கறி" என்றார். "அப்பாடா" என நிம்மதிப் பெருமூச்சு விட்டேன்.

சோற்றைப் போட்டுக் கறியை ஊற்றினேன். பிசைந்து ஒரு உருண்டையை வாய்க்குக் கிட்டக் கொண்டுசென்றேன். மணம் சற்று வித்தியாசமாக இருந்தது.

கறி கொண்டுவந்தவரை அழைத்தேன். "யார் தந்தது" எனக் கேட்டேன். அவர் எதுவும் யோசிக்காமல் "சங்கரண்ணை" என்றார். பூச ணிக்காய் - கருவாட்டுக் கறியிலிருந்த கருவாடுகளைப் பொறுக்கி விட்டுப் பூசணிக்காயைத் தனியாக அனுப்பிய 'குறும்புத்தனத்தை' விளங்கிக் கொண்டேன்.

சந்திக்கும்போதெல்லாம் இதை மீட்டுக்கொள்வார் சங்கரண்ணை.

- கு. நொய்லின் -

முன்னாட் போராளி

# அசடு வழிந்தது

கனரக இயந்திரங்கள் செயற்பட்டுக் கொண்டிருக்கும் பேரிரைச்சல் கேட்டுக் கொண்டிருந்தது. டோசர்கள் பல கடலில் இறங்கி ஏதோ வேலைகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தன. பெயர் தெரியாத வேறு பல இயந்திரங்கள் அங்கும் இங்கும் என அசைந்தன.

1990 ஆம் ஆண்டு கடற்புறா முகாமிற்குச் சங்கரண்ணையைச் சந்திப்பதற்கு எமது பொறுப்பாளருடன் சென்றேன். முகாமிற்குள் ஒரு பகுதிக்கு மட்டும் நாம் செல்ல முடியும். அங்குப் போடப்பட்டிருந்த இருக்கைகளில் நாம் அமர்ந்தோம்.

வயதிற்குறைந்த சிறிய போராளி தொலைத்தொடர்புச் சாதனத்தினூடாகச் சங்கரண்ணைக்கு விடயத்தைத் தெரியப்படுத்தினார். சிறிது நேரத்திற் கையிற் சிறிய தொலைத்தொடர்புச் சாதனத்துடன் வழமையான நடை, சிரிப்புடன் சங்கரண்ணை வந்தார்.

சங்கரண்ணையும் எமது பொறுப்பாளரும் அரை மணி நேரத்திற்கு மேலாகப் பல விடயங்கள் குறித்தும் பேசினர். புறப்படுவதற்குத் தயாராகினோம். பேசிக்கொண்டே எமது ஊர்தியை நோக்கி வந்து கொண்டிருந்தோம்.

இடை நடுவில் ஏதோ ஞாபகத்திற்கு வந்தவர் போல நடையை நிறுத்திய சங்கரண்ணை, எமது பொறுப்பாளரைப் பார்த்து நல்ல மகிழ் ஊர்தி (கார்) ஒன்று சும்மாதான் நிற்குது வேணுமென்றால் எடுக்கலாம் என்று கூறினார். எமது பொறுப்பாளரும் "அப்படியா" என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

சர்வசாதாரணமாகப் பேச்சைத் தொடர்ந்த சங்கரண்ணை "ஒரு நிபந்தனை" என்றார். "என்ன என்றார்" எமது பொறுப்பாளர். "முகாமில் நிற்பவர்கள் எல்லோருக்கும் குளிர்களி வேண்டிக் கொடுத்தால் மோட்டார் வண்டியைத் தரலாம்" கூறினார் சங்கரண்ணை. எமது பொறுப்பாளரும் குளிர்களி வாங்கித்தாறன் ஆனால் பேச்சு மாறக்கூடாது எனக் கூறினார்.

இதில் நிற்பவர் அனைவரும் சாட்சி நான் பேச்சு மாறமாட்டேன் என்றார் சங்கரண்ணை.

எமது பொறுப்பாளரும் உடனேயே ஆயிரம் ரூபாய்த் தாளை சங்கரண்ணையிடம் நீட்டினார். பணத்தைப் பெற்றுக்கொண்ட சங்கரண்ணை, அருகில் நின்ற அவரது முகாம் போராளியிடம் காசைக் கொடுத்து எல்லோருக்கும் குளிர்களி வாங்கும்படி கூறினார்.

வேறொரு போராளியின் பெயரைக் கூறியழைத்த சங்கரண்ணை, மகிழ் ஊர்தியின் (கார்) திறப்பை எடுத்து வரச்சொன்னார். திறப்பு வந்தவுடன், திறப்பை எமது பொறுப்பாளரிடம் கொடுத்தார்.

வழமையான அவரது சிரிப்பு. வலிந்து சிரித்தார்.

எமது பொறுப்பாளருக்கும் எனக்கும் இதில் ஏதோ சூட்சுமம் இருப்பதாக எண்ண அலைகள் வந்தன. பொறுப்பாளர் மீண்டும் "ஏன் ஏதேன் பிரச்சினையா?" என்றார்.

"ஒன்றுமில்லை" தோளைக் குலுக்கியவாறு வழமையான நிலைக்கு வந்தார். "இது உங்களுக்கு என்றுதான் திருகோணமலையிலிருந்து வந்தது" என்றார் எமது பொறுப்பாளரைப் பார்த்து. பொறுப்பாளருக்கோ...

*- ஆனந்த் (மலரவன்) -*
*தலைமைச் செயலகம்*

# ஒரே பார்வை

ஒரு மரவுவழிச் சமருக்கான திட்டத்தின் அடிப்படையிற் பெரு மெடுப்பிலான முன்னேற்பாடுகளிற் பல்வேறு படையணிகளும் ஈடுபடுத்தப் பட்டிருந்தன. படைத்தளம் அமைந்திருந்த சூழல் பலரது கவனத்தையும் பெருமளவில் ஈர்த்தது. வெட்டை வெளியில் மணல், சேறு, சதுப்புநிலம், நீர் ஆகியவற்றைக் கடந்தே படைத்தளத்தை நெருங்க வேண்டும். நகர் வதற்கு வசதியாக உழுபொறிகளும் டோசர்களும் கவச ஊர்திகளாக மாற்றப்பட்டன.

இவ்வாறு ஒரு பெரிய சமருக்கான ஏற்பாடுகள் ஒருபுறம் நடை பெற்றுக் கொண்டிருக்க, முகாமைச் சூழவுள்ள இராணுவக் காவலரண்கள் இருக்கும் நிலைகளை அவதானித்து அவற்றுக்கேற்ப நகர்வை ஆரம்பிக் கும் நிலைகள் புலிப்போராளிகளால் விரைவாக அமைக்கப்பட்டுக் கொண் டிருந்தன.

அப்பிரதேசத்திற் குடிநீரைப் பெறுவது மிகச் சிரமமானது - உவர் நீர்ப் பிரதேசம். நகரும் அணிகள் நீரைப் பெறுவதற்கெனப் பல்வேறு ஏற் பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

தலைவர் அவர்களின் தேவைகளை நிறைவுசெய்யவென அங்கு ஒரு சுற்று வருகையை மேற்கொண்டிருந்தார் சங்கரண்ணை. வரை படத்துடன் வருகை தந்த சங்கரண்ணை எதிரியின் இடங்களை வரை படத்திற் குறித்துக்கொள்வதையும் கட்டளை இடங்களை வரைபடத்தில் வரைந்து கொள்வதையுமே பிரதான பணியாகக் கொண்டிருந்தார். ஒவ் வொரு பணியிலுமுள்ள பொறுப்பாளர், தளபதிகள் ஆகியோரைச் சந் தித்து விவரங்களைத் திரட்டிக்கொண்டிருந்தார்.

நான் ஒரு பணி நிமித்தம் வெட்டைப் பகுதி ஒன்றிற் போராளிகள் சிலருடன் நின்றேன். சங்கரண்ணை வந்துசேர்ந்தார். தேவையான பல விடயங்களையும் துருவித்துருவிக் கேட்டறிந்தார். பின் கதைகள் பலதும் பத்துமாகத் திசைதிரும்பின.

எனக்கருகில் நின்ற போராளி ஒருவர் எமதணிக்குரிய தண்ணீர்க் கலனை வைத்திருந்தார். அதை வாங்கிய சங்கரண்ணை குடிக்கலாமா, சுடவைத்ததா என அவசரமாகக் கேட்க, சங்கரண்ணையைத் தெரிந்திராத அப்போராளியோ, அது சுடவைக்கப்படாததெனக் கூறினார்.

"அண்ணேட்டைப் போய்ச் சொல்லுவன் கவனமில்லை என்று" சிரித்தபடி கூறினார் சங்கரண்ணை. சிலநாட் கழித்துச் சங்கரண்ணையை நான் கண்டபோது, "சொல்லிவிட்டன்" என்றார்.

என்னுடன் அன்பு, நெருக்கம். இவற்றிற்கப்பால் பிழை எனின் அது யாராகவிருந்தாலும் ஒரே பார்வை. இவர்தான் நான் கண்ட சங்கரண்ணை.

- வே. தீபன் -
கட்டளைத் தளபதி

# வித்தியாசமானவர்

யாரையும் அவர் அணுகுவார். யாரும் அவரை அணுகலாம். அவர்தான் சங்கரண்ணை.

தளபதி, பொறுப்பாளர், போராளி என்ற வேறுபாடு அவரிடம் காணப்படுவதில்லை. எல்லோருடனும் ஒரேமாதிரியாக அன்பாகவும் பண்பாகவும் பழகும் அவரது சுபாவம் பலரது உள்ளத்தையும் கவர்ந்தது.

கட்டுப்பாடு, ஒழுக்கம் என்ற விடயத்தில் மிகவும் கண்டிப்பானவர். இவற்றைப் போராளிகளுக்குப் புகட்டுவதிலும் மிக்க அக்கறையுடையவர். இவ்விடயத்திற் போராளிகளுக்குப் பல உதாரணங்களுடன் அறிவுரைகள் கூறி அவர்களது வளர்ச்சிக்கு ஊன்றுகோலாக நின்றவர்.

அறிவுரை கூறுதலும், கற்பித்தலும் அவருடன் ஒட்டிக்கொண்டவை. அவரவர் தகைமைக்கேற்றவாறு மிகவும் எளிமையாகவும், விடயத்தைப் பூரணமாக விளங்கிக்கொள்ளும்வரை பொறுமையாகவும் எடுத்துக்கூறும் அந்த மனிதர், அவரவர் உள்ளங்களில் நிலையான இடத்தைப் பிடித்துக் கொள்வார்.

போராளி, பொறுப்பாளர் எவராக இருந்தாலும் அவர்களது தவறுகளை நேருக்கு நேர் சுட்டிக் காட்டுவதிற் பின்நிற்பதில்லை. தவறுகள், குறைபாடுகள் எவரிடமாவது காணப்படின் அவரை நேரில் அணுகி அவற்றைத் திருத்துவதில் அக்கறையாக இருப்பார்.

எவராவது பிழைவிடுகிறார்கள் என்ற தகவல் கிடைப்பின், உரிய பொறுப்பாளரை அணுகி அத்தகவலைக் கூறி, அப்பிழை திருத்தப்படக் காரணமாவார். அப்பொறுப்பாளர்களும் தவறும்பட்சத்தில், தலைவர் அவர்கட்கே நேரடியாகத் தெரிவித்துப் பிழைகள் களையப்பட்டு இயக்கம் நேர்வழியிற் செல்லப் பெரிதும் துணை புரிந்தவர்.

பிழைகளை அறிவதில் மட்டுமல்ல, ஒருவரின் திறமைகளை அறிவதிலும் மிக ஆர்வமாக இருப்பார். ஒருவரின் திறமையை இனம் கண்டு, உரியவர்களுக்குத் தெரியப்படுத்தி, திறமையானவர்களின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபோயுள்ளார்.

ஒருவரின் பல பக்கங்களையும் ஆய்வுசெய்து, அவரைப் பற்றிய முழுமையை எடுத்துச் சொல்வதில் அவரது சிறப்பு அவருக்கே உரியது.

ஒட்டுமொத்தத்தில் இந்தப் போராட்ட வாழ்வில் நான் பார்த்தவர்கள், பழகியவர்கள் எல்லோரிலும் வித்தியாசமானவர்.

*- க. பால்ராஜ்*

*கட்டளைத் தளபதி*

# சுருங்கக் கூறின்...

வரலாற்று நீரோட்டத்தில் தம்மை இணைத்துக்கொள்பவர் பலர். வரலாற்றால் உருவாக்கப்படுபவர் சிலர். வரலாறு படைப்பவர் மிகச் சிலரே.

அந்த மிகச்சிலரிற் சங்கரண்ணையும் ஒருவர். போராளியாக இருந்துகொண்டு, போராளியின் அனைத்து அம்சங்களையும் ஆய்வு செய்து விடைகாணும் அறிஞராகவே திகழ்ந்தார். பாரபட்சமற்ற, நேர் மையான, அவரது ஆய்வின் விளைவுகள் வெளிப்படையாகப் பல வேளைகளில் தெரியாதபோதும் இயக்க வளர்ச்சி, வெற்றிகள், தலை வரின் பாதுகாப்பு, போராளிகளின் நலன் போன்ற பல்வேறு விடயங்களின் பின்னணியில் மறைபொருளாக என்றும் புதைந்தே காணப்படும்.

அவரது ஆய்வுகள் வெற்றிபெற, அவரில் இயங்கிவரும் அவரை இயக்கும் அவருடன் கூடவே உள்ள பல்வேறு இயற்கை அம்சங்கள் அடிப்படையாயின.

என்றுமே அவர் கண்ணாடி வீட்டில் வாழாததால் எவர்மீதும் கல் லெறியக்கூடிய சுதந்திர மனப்போக்குள்ளவராகவும் தன்னலமற்ற நாட்டுப் பற்றாளராகவும் திகழ்ந்தார்.

நேர்மையான, கண்டிப்பான மனிதராக விளங்கியதால் பகை வருக்கே அஞ்சாத தளபதிகளும் பொறுப்பாளர்களும் சற்றுப் பயங்கலந்த மரியாதையுடனேயே அவரை அணுகினர்.

போராளிகளாயினும் சரி, பொறுப்பாளர்களாயினும் சரி, தவறிழைக் கும்போது முகமன் பாராது அத்தவறுகளைச் சுட்டிக்காட்டித் திருத்துகின்ற நேர்மையான வழிகாட்டியாகத் திகழ்ந்தார்.

கனிவான, மென்மையான சொற்களாலும் புன்முறுவல் தவழும் முகபாவத்தினாலும் பண்பாகப் பழகும் தன்மையினாலும் எல்லோரையும் தன்பால் ஈர்த்துக்கொண்டவர்.

சிறிய வயதினரான போரர்ளிகளிடம் பழகும்போதுகூடச் சமமானவர் கள் எனக்கருதிப் பழகும் எளிமையும் அடக்கமான அணுகுமுறையும் நகைச்சுவை உணர்வுள்ள கலகலப்பான சுபாவமும் அனைத்துப் போராளி களையும் அவரை நேசிக்க வைத்தன.

சுருங்கக் கூறின் அறிவுபூர்வமான நேர்மையான அணுகுமுறை யாளராகவும் ஆக்கபூர்வமான செயற்பாட்டாளராகவும் விளங்கினார்.

அழுந்தல்
மருத்துவப் பிரிவு

# பாச உறவிற்கப்பால்...

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் விடுதலைப் புலிகளின் பயிற்சி முகாம்கள் இருந்தன. அனைத்துப் பயிற்சி முகாம்களுக்குமான பொறுப்பாளர் லெப்.கேணல் பொன்னம்மான்.

உயர்ந்த மனிதர். தாடியுடன்கூடிய திடகாத்திரமான தோற்றம். மகேந்திரா ஜீப் தமிழகத்தின் மூலைமுடுக்கு எல்லாம் அவரைச் சுமந்து செல்லும். பயிற்சிப் பாசறைகளுக்கான தேவைகளைத் தமிழக மக்களிடமிருந்து பெற்றுப் பூர்த்திசெய்வதென்பது அவரது கலை.

o

நெல், பயறு, கடலை, சோளம் போன்ற தானியங்கள் முதல் உடுபுடைவைகள் வரை பல்வேறு இடங்களுக்கும் சென்று ஆதரவாளர் பலரினதும் உதவியுடன் பெற்றுப் பாசறைகளிற்கு எடுத்து வருதல் அவரது பணிகளில் ஒன்று.

பயிற்சிகளை ஒழுங்குபடுத்தல், பயிற்சி ஆசிரியரை நெறிப்படுத்தல், பாசறையிற் புதிய போராளிகளை மதிப்பிடுதல் எனப் பலதும் பொன்னம்மானின் கடமைகள்.

சங்கரண்ணையின் இளைய சகோதரர் சுதன் ஐந்தாவது பயிற்சிப் பாசறையிற் பொன்னம்மானினால் தவறுக்காகத் தண்டிக்கப்படுகிறார்.

பாசறை முடிவு நிகழ்விற்குத் தலைவர் அவர்களுடன் வருகை தந்த சங்கரண்ணை இதை அறிந்துகொள்கிறார். சுதனைச் சந்திக்கிறார். சுதன், தன்னைத் தண்டனையில் இருந்து விடுவித்துவிடும்படி கேட்கிறார். கண்டிப்புடன் அதை மறுத்த சங்கரண்ணை தண்டனையை முழுமனத்துடன் ஏற்றுச் செய்துமுடிக்கும்படியும் எல்லோருக்கும் முன்மாதிரியாக இருக்கவேண்டும் எனவும் அறிவுரை கூறினார்.

*பிருந்தன்*
*படைய அறிவியற் கல்லூரி*

# சித்தாவின் செய்தி

விண்ணை அதிரவைக்கும் வெடிப்பொலி. யாழ்க் குடாநாடே நடுங்கியது. எங்கும் ஒரு நிசப்தத்தின் பின்னான கிசுகிசுப்புகள். என்ன வென அறிய எத்தனையோ உள்ளங்கள் துடித்தன.

உயர்ந்த மரங்கள், அழகிய வீடுகள் எதுவும் இல்லை. துகள் களாலும் சாம்பராலும் மூடப்பட்ட, விபரிக்க முடியாத ஒரு பிரதேசம் தோற்றமளித்தது.

எத்தனையோ எண்ணங்களைச் சுமந்து நின்ற வேங்கைகள் ஒரு கணப்பொழுதில் வீரச்சாவைத் தழுவினர். சோகத்தில் முடிந்தது பகீரத முயற்சி.

சித்தா என அன்போடு அழைக்கப்படும், சித்தாத்தனும் ஒருவன். கேணல் சங்கர் அவர்களின் உடன் பிறந்த சகோதரன். குடும்பத்தில் முதல் இழப்பு. தேசத்தின் ஆழமான வித்து.

கேணல் சங்கர் அவர்கள் எல்லோரும் தொடர்புகொள்ள முடியாத இடத்தில், நான் மாத்திரமே தொடர்புகொள்ள முடியும்.

இச்செய்தி என்னை எட்டியது. எப்படித் தெரியப்படுத்துவது? ஒரே மனப் போராட்டம். தொலைத்தொடர்புச் சாதனத்தை தொடுவது, விடுவது. இப்படியே பல மணி நேரம் ஓடியது.

இறுதியில் ஒருவாறு மனத்தைத் திடப்படுத்தினேன். தொலைத் தொடர்புக் கருவியூடாகச் சங்கரண்ணையைத் தொடர்பு கொண்டேன்.

“கலோ” என்ற வழமையான குரல் ஒலித்தது. என்னிடமிருந்து “கலோ” என்ற வார்த்தை மாத்திரமே வெளிப்பட்டது. மேலும் பேச முடியவில்லை நா தழுதழுத்தது

தட்டுத்தடுமாறி ஒரு விடயம் என்றேன்.

"நான் நியூஸ் கேட்டனான். என்ன செய்யிறது. நல்ல முயற்சி ஒன்று வீணாப்போச்சு" சர்வசாதாரணமாகப் பேசினார்.

"என்ன மாதிரி என்னவாம் ஆட்கள். ஒழுங்குகள் எல்லாம் சரியா" உடனேயே வேலை விடயங்களைப் பேச ஆரம்பித்தார்.

எனக்குக் குழப்பமும் சந்தேகமும் ஏற்பட்டது. செய்தியை முழுமையாக அறியவில்லை எனத் தீர்மானித்துக் கொண்டேன்.

மீண்டும் பேச்சைத் திசைதிருப்பி, பொன்னம்மான் உட்பட என இழுத்தேன். "Bad Luck" என ஒரு வார்த்தையில் முடித்துக்கொண்டார்.

இதற்கு மேல் என்ன இவரைப் பற்றிச் சொல்வது. அவர்தான் சங்கரண்ணை.

*சி. நிர்மலன்*
*சிறப்புப் படையணி*

# தந்தையும் முல்லைச் சமரும்

வாரத்தில் ஒரு தடவை வீட்டிற்கு வருவார் என்றுகூட எதிர்பார்த் திருப்பதில்லை. வந்தாலும் சில மணி நேரம் நிற்பார் என்றுகூடக் கூற முடியாது. ஒரு மணித்தியாலம் வீட்டில் நின்றாலே பெருங்காரியமாக விருந்தது.

தகப்பனாருக்கு நன்கு வயது சென்றுவிட்டது. சுகவீனம் வருவ தும் போவதும் வழமையாகவே இருந்தது. சடுதியாக அவரது நிலைமை மோசமடைந்தது. ஒரு மாதகாலம் படுத்தபடுக்கையிலேயே இருந்தார். இதுகூட அவரது வருகையில் மாற்றத்தை ஏற்படுத்தவில்லை. தகப்ப னார் சாவடைந்துவிட்டார்.

ஒருவாறு தகவலை அறிந்துகொண்டார். இறந்த விடயத்தை எவருக்கும் தெரியப்படுத்த வேண்டாம் எனக் கண்டிப்பான வார்த்தை களிற் கூறினார். இருந்து சிறிது நேரம் யோசித்தார். "எத்தனையோ பேர்" ஏதோ முணுமுணுத்தார்.

நாங்கள் ஒன்றும் விளங்காமற் சற்றுச் சினமடைந்தோம். தகப் பனல்லோ, சற்று விளக்கமாக எடுத்துக்கூற முனைந்தோம். "கொஞ்சம் பொறு ஆத்தை" அது மட்டும் பதிலாக வந்தது. மீண்டும் இருந்து யோசித்தார்.

"உங்களுக்கு ஒண்டும் விளங்காது" பேச ஆரம்பித்தார். "எத்த னையோ போராளிகள், எப்படி எப்படியோ" சொல்ல வாயெடுத்தவர் தொட ராமல் நிறுத்திப் பெருமூச்சு விட்டார்.

"எல்லாம் அப்படியே இருக்கட்டும்" என்றவர் தொலைதொடர்பினூ டாகத் தனது முகாம் போராளிகளுடன் ஏதோ பேசினார். நாங்கள் சற்றுச் சினந்துகொண்டே இருந்தோம். "நான் சொல்லுறதைச் செய் யுங்கோ" கோபம் கலந்து வந்த வார்த்தைகள் எமது வாய்களை அடைத்தன. "நான் எல்லா ஏற்பாடுகளையும் செய்யிறன்" இறுக்கமாகக் கூறினார்.

சில மணி நேரம் கழித்துச் சில போராளிகளுடன் 'கன்டர்' ஊர்தி வந்தது. இரவோடிரவாகத் தகப்பனாரின் பூதவுடலை ஏற்றிச் சென்று எரித்து வேண்டியவற்றைச் செய்துவிட்டு வந்தவர், மீண்டும் சில நிமிடங்களில் வீட்டிலிருந்து புறப்பட்டுவிட்டார். என்ன? ஏது? எங்களுக்குள் பல கேள்விகள் முட்டிமோதின. ஏதோ சரியாத்தான் செய்வார் என்ற நம்பிக்கை.

14.07.1996 இல் இது நடந்தது. 17.07.1996 அன்று முல்லைச் சமர் தொடங்கியபோது, முல்லைத்தீவு இராணுவ முகாம் புலிகளின் வசம் வீழ்ந்தபோது, எத்தனையோ போராளிகள் தம்முயிரை அதற்காக அர்ப்பணித்தபோது அவரை விளங்கிக்கொண்டேன்.

குகா
(மன்னார்)

# நள்ளிரவு வேளையில்...

தவளை நடவடிக்கைமூலம் பூநகரி இராணுவமுகாமின் பெரும் பகுதியை வீழ்த்திச் சிங்களப் படைகளின் ராங்கைப் புலிகள் கைப்பற்றிய பெருமைக்குரிய 1993 ஆம் ஆண்டின் மாவீரர் நாள். அப்பொழுது நள் ளிரவு நேரமே ஈகச் சுடரேற்றும் நேரமாக இருந்தது.

முதலாவது 'மாவீரர் துயிலுமில்லம்' அமையப் பெற்ற சிறப்புடை யது கோப்பாய. கோப்பாயும் அதனை அண்டிய அனைத்துப் பிரதேசங் களும் மின் ஒளியாற் பிரகாசித்துக் கொண்டிருந்தன. மக்கள் கூட்டம் அலைமோதியது. நள்ளிரவை நெருங்க நெருங்கச் சனக்கூட்டம் துயிலு மில்ல வளாகத்தை நோக்கிச் சாரிசாரியாகச் சென்று கொண்டிருந்தது.

பல்வேறு பாதைகளினூடாகவும் வரும் மக்கள் வெள்ளம் துயிலு மில்லத்தின் ஒடுங்கிய வாயிலினூடாகச் செல்லவேண்டி இருந்ததால், அங்கு மிகுந்த சன நெரிசல் ஏற்பட்டது. நெரிசலைத் தவிர்க்க மக்களை ஒழுங்கமைக்கும் கடமையில் நின்றேன்.

நள்ளிரவு நெருங்கியது. ஏறக்குறைய ஒன்பது வயது நிரம்பிய பையன் வாயிலிற் சன நெரிசலினூடாக முன்னே செல்ல முயன்றான். சற்றுப் பின்னே வந்துகொண்டிருந்த அப்பையனின் குடும்பத் தலைவன், பையனின் கையைப் பிடித்த காட்சியும் அவசரப்பட வேண்டாம், பொறு மையாகச் செல்வோம் என்பதை உணர்த்திய சைகைப் பேச்சும் என்னை ஈர்த்துக்கொண்டன.

நான் உற்றுநோக்கினேன். சன நெரிசலினூடாக அவர்களை அண்மித்துச் சென்றேன். எனக்கு அறிமுகமானவர்களே. அக்குடும்பத் தலைவன் வேறுயாருமல்ல. சங்கரண்ணையேதான்.

*- மகாதேவன் -*

*பொருண்மிய மேம்பாட்டு நிறுவனம்*
*வட்டக்கச்சி*

# ஒழுங்கமைந்த திட்டமிடல்

சங்கரண்ணையின் எழுத்தினாலான குறிப்புத்துண்டு எமது கையில் இருக்கும். அடுத்த தடவை அவரைச் சந்திக்கும் வரை செய்ய வேண்டியவை அனைத்தும் அதிலிருக்கும். முடிந்தவற்றை சரியிட வேண்டும். இது கண்டிப்பான நடைமுறை.

முகாமிற் பல்வேறு பதிவேடுகள். வெளியே செல்லுதல், வெளியார் முகாமிற்கு வருதல், தொலைத்தொடர்பு, சமையல், முகாம் துப்புரவாக்கல், மலேரியாத் தடுப்பு, தண்டனை, எரிபொருள் விநியோகம், வாகனப் பயன்பாடு இப்படியே எல்லாம் பதிவேடுகளினூடாகவே இடம் பெறும்.

மோட்டார் சயிக்கிளில் வெளிக்கிடுவதானால், போய்த்திரும்பி வரும்வரை எண்ணெய் காணுமா? ஒயில் மட்டம் பார்க்கப்பட்டதா? சில்லுகளிற்குக் காற்றுப்போதுமா? எல்லாவற்றிற்கும் பதில் சொல்லியே ஆக வேண்டும். நேரில் வந்து தானும் கவனித்துக்கொள்வார்.

குறிப்புக்களினூடாக எமது வேலைகளைத் தானே திட்டமிட்டுத் தருவது, குறிப்புகளுடன் வேலை முடிவுகளை அவருக்குத் தெரியப் படுத்துவது நாம் நேரில் அவரிடம் கண்டுகொண்ட, கற்றுக்கொண்ட ஒழுங்கமைந்த திட்டமிடல் தகைமைகளாகும்.

- மு. இளங்கோ -
முன்னாள் போராளி

# அணுகுமுறை

சங்கரண்ணை ஒருவருடன் பேசுவதில் எளிமை இருக்கும். தகைமைக்கேற்பத் தன்னை மாற்றிக்கொள்வார். போராளி முதற் பொறுப்பாளர் வரை, வயதிற் சிறியவர் முதல் முதியவர் வரை, பாமரர்களில் இருந்து புத்திஜீவிகள் வரை சங்கரண்ணை பழகுவார். அஃ்ரவர்களுடன் பேசும் போது அவரவர்களாகவே மாறிவிடுவார்.

ஒரு போராளியெனின் தாய், தந்தை, உடன்பிறந்தவர், உறவுகள், மனைவி, பிள்ளைகள் என எல்லோரையும் அறிந்து வைத்திருப்பார். சந்தர்ப்பங்கள் கிடைக்கும் போதெல்லாம் இயல்பாகப் பழகிக்கொள்வார். அவர்களது குறைநிறைகளைப் பொறுமையாகக் கேட்டுத் தெரிந்துகொள்வார்.

சங்கரண்ணையின் தொடர்பு முறைகள் எல்லாமே கனிவும், பண்பும் கலந்தவையாகவே இருக்கும்.

ஆ.க.வெ. சமர் நிகழ்ந்து கொண்டிருந்தபோது சமர் நடவடிக்கைகளின் நிர்வாகக் கடமைகளிற் சங்கரண்ணை ஈடுபட்டார். தலைமைச் செயலகத்திற்குக் கடிதம் ஒன்று சங்கரண்ணையின் எழுத்துடன் வருகிறது. ‘தேவை ஏற்படும்போது நினைப்பதும், தேவை இல்லாதபோது மறந்துவிடுவதும் தமிழரின் பழக்கமாகப் போய்விட்டது’ எனத் தொடங்கிய சிலேடையான கடிதம். ‘சங்கரண்ணை தனக்குத் தேவை என்றதும் கடிதம் எழுதுகிறார்’ என்று தொடர்ந்தது. அன்று அக்கடிதம்மூலம் கோரியது காகிதாதிகளை. அவரது பண்பான, நட்புடன்கூடிய அக்கடிதம் காகிதாதிகளிற்குப் பெரும் தட்டுப்பாடு நிலவியபோதும் அவர் கேட்டதை மறுக்காமற் கொடுக்க எம்மைத் தூண்டியது.

அவரது அணுகுமுறை அவரை வெற்றிகொள்ள வைத்தது.

இ. தங்கை
புலனாய்வுத்துறை

# வீட்டிலும்...

சிங்கள இராணுவத்தின் ஜெயசிக்குறு இராணுவ நடவடிக்கையால் இடப்பெயர்வுகள் அனர்த்தங்கள் என மக்கள் துன்புற்றனர். இராணுவ நகர்வைப் புலிப்போராளிகள் தடுத்து நிறுத்தக் கடும் சமர் செய்தனர்.

பெரியப்பா (சங்கரண்ணை) தனது முகாமில் இருந்து அவசரமாக வீடு வந்தார். வாகனத்திலிருந்து ஒரு புத்தகக் கட்டும் இறக்கப்பட்டது.

வீட்டில் எங்களுடன் ஏதாவது அளவளாவுவார் என்ற எங்கள் எதிர்பார்ப்பு கலைந்துபோனது. ஜெயசிக்குறுவிற்குப் போகப்போகிறேன் என்பது மட்டுமே அவரது பதிலாக இருந்தது.

வந்தவுடனேயே அவரது இருக்கையில் இருந்தார். புத்தகங்களைத் தட்டிக்கொண்டே குறிப்புக்களை எழுதித் தள்ளினார். ஜெயசிக்குறு - கூடுதலாகக் காட்டுப் பகுதிகளிலேயே சண்டைகள் இடம் பெற்றுக் கொண்டிருப்பதால் இயற்கையை வைத்துத் திசையறியும் முறையை உடன் கற்பிக்கவேண்டும் என்பதற்காகவே அம்முயற்சி என்பதை ஒருவாறு அனுமானித்துக்கொண்டோம்.

சூரியன் அன்றைய கடமையை முடித்தது. வானை அலங்கரிக்கும் நட்சத்திரங்கள் கண் சிமிட்டின. பெரியப்பா அவரது கடமையில் மேலும் தீவிரமடைந்திருப்பதை அவரது நடமாட்டங்கள் காட்டின. எழுதுவது, வெளியே வருவது, கண் சிமிட்டும் நட்சத்திரங்களைப் பார்த்துக் கண்ணயராது குறிப்பெடுப்பது, மீண்டும் உள்ளே வருவது, புத்தகத்தைத் தட்டுவது, குறிப்பைச் சரிபார்ப்பது என இரவு பன்னிரண்டு ஒரு மணி வரை தொடர்ந்தது. பின்பு படுக்கைக்குச் சென்றார்.

அதிகாலை மூன்று மணி அளவிற் படுக்கையை விட்டு எழுந்தவர், குறிப்புப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு வெளியே சென்றார். வானத்தை அண்ணாந்து நோக்கியபடி மீண்டும் நட்சத்திரங்களைத் தேடினார். குறிப்புடன் ஒப்பிட்டுப் பார்த்தார். குறிப்பேட்டிற் சரிகளைப் போட்டார்.

வீட்டிலிருந்து அவர் செய்த வேலை, நட்சத்திரக் குறிப்பேடு எழுதியதுதான். அடுத்தநாள் ஜெயசிக்குறு நோக்கிச் சென்றுவிட்டார். ஜெயசிக்குறுவில் திசைகாட்டிக் கல்விக்கு, ஒரு நட்சத்திரமாகவே விளங்கினார் என வீட்டிற்கு வரும் போராளிகள் சொல்லக் கேட்டுள்ளேன்.

ரதி
(மகள்)

# உழைப்பிற்கு நேரம் தடையில்லை

தலைமைப்பீடம் இந்தியாவிற் செயற்பட்டபோது புலிகளின் அலுவலகங்கள் சென்னையிற் செயற்பட்டன. சர்வதேச விவகாரங்கள் பெரும்பாலும் தொலைபேசிமூலம் நெறிப்படுத்தப்பட்டன. அரசியல் வேலைத் திட்டங்களுக்கெனப் பயன்படுத்தப்பட்ட பகிரங்கத் தொலைபேசியின் இலக்கம் பலருக்கும் தெரியும்.

இதற்கு அப்பால், இரகசியச் செயற்பாடுகளுக்கென ஒரு தொலைபேசி இருந்தது. குறிப்பிட்ட சிலருக்கே அவ்விலக்கம் தெரிந்திருக்கும். அத்தொலைபேசி சங்கரண்ணையின் படுக்கைக்கு அருகிலேயே இருந்து ஒலியெழுப்பும்.

வெளிநாட்டிற் குறிப்பிட்ட வேலைத்திட்டத்தில் உள்ளவர்களின் தொடர்புகள் எடுக்கப்படும். இந்தியாவிற்கும், வெளிநாடுகளுக்கும் இடையே உள்ள நேர வேறுபாட்டால் நேரகாலமின்றித் தொலைபேசி ஒலிக்கும். இந்திய நேரப்படி நடுநிசி, தொடர்புகொள்ளும் வெளிநாட்டிலுள்ளவருக்கு மாலை நேரம். வேறுபாட்டைத் தெரிந்த நிலையிலும் தயங்கித் தயங்கித் தொடர்பை மேற்கொள்வர்.

ஒருதரம்தான் மணி ஒலிக்கும். அடுத்தகணமே "கலோ" என்ற சங்கரண்ணையின் குரல் கணீரென ஒலிக்கும். மறுபுறத்திலுள்ள நானோ தயக்கத்துடன் நித்திரையைக் குழப்பிப்போட்டேனோ என்று கூற, "இல்லை! நான் இப்பதான் படுத்தனான். நீங்கள் போன் எடுக்கேலையென யோசித்துக்கொண்டு இருந்தனான். எடுத்தது நல்லதாய்ப் போச்சுது." உரையாடல் நேரகாலம் தெரியாது தொடரும். அரைமணியைத் தாண்டி ஒரு மணித்தியாலத்தைக்கூட எட்டிவிடும்.

*சி. நிரஞ்சன்*
*சிறப்புப் பறை மணி*

# பொது நோக்கு

18.09.2001 அன்று சங்கரண்ணைக்கு 52 ஆவது பிறந்ததினம். அன்றும் துயிலுமில்லம் சென்று வீடு திரும்பினார்.

பிறந்ததினம் என்றதற்கான அறிகுறி எதுவும் அங்கில்லை. அறிந்த வர்கள் மாத்திரம் அழைப்பின்றி அங்கு வந்துபோய்க் கொண்டிருந்தனர்.

நானும் சகபோராளி ஒருவரும் சைக்கிளில் சென்று, வீட்டு முற்றத் தில் இறங்கினோம். வழமையான இடத்தில் ஆங்கிலப் பத்திரிகையை விரித்துவைத்துப் பார்த்துக்கொண்டிருந்தவர், சைக்கிள் சத்தத்திற்குப் பத் திரிகையைத் தாழ்த்தி எம்மைப் பார்த்தார். எம்மைக் கண்டவுடன் அவ ரது வழமையான சிரிப்பு எம்மை வரவேற்றது.

பத்திரிகைச் செய்தி, ஊர்ப்புதினம், சர்வதேச விவகாரங்கள், குடும்பக்கதை எனப் பல தலைப்புக்களிற் பேச்சுக்கள் போய்க்கொண்டி ருந்தன.

இவ்வேளை, சர்வதேசத் தொலைபேசி அழைப்புக்களை மேற் கொள்ள வீட்டிற்கே வரவழைக்கப்பட்டிருந்த தொலைபேசிச் சேவையினர் ஒழுங்குகளை மேற்கொண்டனர். ஒழுங்குகள் யாவும் மேற்கொள்ளப் பட்ட பின், தொலைபேசி அழைப்புக்கள் தொடங்கின. குடும்பத்தினர் உறவுகளுடன் பேசினர். உறவுகள் ஒவ்வொருவருடனும் சங்கரண்ணை யும் பேசினார். உறவினர் மாத்திரமல்ல நண்பர்களுடனும் பேசினார்.

பேச்சின் முடிவில், சங்கரண்ணைக்கு என்ன வேணும் என்று மறு முனையிலிருந்து ஒவ்வொருவராலும் கேட்கப்படுவதைச் சங்கரண்ணையின் பதில்களிலிருந்து ஊகிக்கமுடிந்தது.

எனக்கென்று ஒன்றும் தேவையில்லை, மண்ணின் விடிவிற்காகப் போராடும் போராளிகளுக்கும் அப்பணியில் ஈடுபட்டு விழுப்புண்ணடைந்து இயங்கமுடியாத நிலையில் இருக்கின்ற போராளிகளுக்கும் உங்களால் ஆன உதவிகளை எப்பொழுதும் செய்யவேண்டும் என்பதே எனது விருப்பம். இதுவே சங்கரண்ணையின் பதிலாக இருந்தது.

யாழினி

# தூக்கமா?

வீதிகள், கட்டடங்கள் யாவும் பனிக்கட்டியால் மூடப்பட்டிருக்கும். கடுங்குளிர் ஊசிபோற் குத்தும். வெப்பமாக்கப்பட்ட அறையின் உள்ளே நன்றாகத் தூங்கவேண்டிய நள்ளிரவைக் கடந்த நேரத்திலும் வெளிநாட்டிற் கிடைத்த நேரத்தை வீணடிக்கக்கூடாதென்பதற்காகவோ என்னவோ சங்கரண்ணை ஏதாவது செய்துகொண்டிருப்பார்.

ஆங்கிலப் படங்களைப் போடச்சொல்லுவார். எல்லோரும் இருந்து பார்ப்போம். வழமையாக அமரும் கதிரையில் மேசைக்கு முன்னாற் கையிற் பேனையுடனும் குறிப்புப் புத்தகத்துடனும் அமர்வார்.

படம் ஓடிக்கொண்டிருக்கும். சிறிது நேரத்தின்பின் ஆழ்ந்த நித்திரையில் எழும் ஒலி எமது காதுகளைத் துளைக்கும். திரும்பிப் பார்த்தால் இருந்த இருப்பில் எவ்வித மாற்றமும் தென்படாது. கண்கள் மாத்திரம் மூடியிருக்கும்.

நாமும் அரைகுறைத் தூக்கத்திற் படம் பார்த்துக் கொண்டிருப்போம். இடையே ஏதாவது விளங்காவிட்டால் எமக்குள் விவாதிப்போம்.

எவரும் எதிர்பாராத விதத்திற் சங்கரண்ணையிடமிருந்து பதில் கிடைக்கும். எல்லோரும் ஆச்சரியப்படுவோம். முன்னமே இந்தப் படத்தைப் பார்த்ததுண்டா எனக் கேட்போம். ஒரு சிரிப்பு மாத்திரம் பதிலாக வரும்.

எங்களால் இதுவரை அவரை மதிப்பிடமுடியவில்லை.

*சி. நிர்மலன்*
*சிறப்புப் படை மணி*

# நித்திரையிலும் கேட்கும் காதுகள்

இந்திய இராணுவக் காலத்தில் விடுதலைப் புலிகளின் உயிருக்குக் கவசமமைத்து நின்றது மணலாறு. இந்திய இராணுவத்தின் வெளியேற்றத்தை அடுத்துப் புலிகளின் செயற்பாட்டிற்கான தனி மாவட்டமாக விளங்கியது. அப்போது மாவட்டத்தின் தளபதி லெப்.கேணல் அன்பு. பூநகரி முகாம் மீதான தவளை வெற்றிச் சமரில் வீரச்சாவடைந்தவர்.

சங்கரண்ணையும் அப்போது மணலாறு மாவட்டத்திலேயே நின்றார். வேவுச் செயற்பாடுகளின் பிரதான வழிநடத்துநராகச் செயற்பட்டார். வேவு ஏற்பாடுகள் அனைத்தையும் நேரடியாகவே கவனித்தார். ஓர் அணி, செயற்பாட்டிற்கெனப் புறப்பட்டவுடனேயே அவ்வணி உருமறைப்புச் செய்தே செல்கிறதா என்பதை அறிவதற்காக அதை அவதானிக்கும்படி வேறு முகாம்களுக்குச் சங்கரண்ணையின் அறிவுறுத்தல்கள் பறந்துவிடும். அவரது அத்தகைய கடுமையான எச்சரிக்கைத் தன்மை பல தடவைகள் எம்மைக் காப்பாற்றியுள்ளது.

வேலை நேரங்களில் எல்லா விடயங்களிலும் கடுமையாக நிற்பவர் வேவு முடிந்து முகாம் திரும்பியவுடன் அன்பாகப் பேசுவார். அந்தக் காட்டிலும் எமக்கெனத் தொட்டியில் நீர் நிரப்பிக் குளிப்பதற்கான ஏற்பாடு செய்வார். வெளியிலிருந்து விசேட உணவு தருவிக்கப்படுவது முதல் இரவு நேரத்தில் அறிவூட்டும் ஆங்கிலப் படங்கள் எனப் பலவற்றையும் சங்கரண்ணை ஒழுங்குபடுத்திவைப்பார்.

இரவு நேரம். ஆங்கிலப் படமொன்று ஓடிக்கொண்டிருந்தது. இடையிடையே படத்தை நிறுத்தித் தமிழில் விளக்கங்களைத் தந்து கொண்டிருந்தார் சங்கரண்ணை. அருகில் லெப்.கேணல் அன்பு அவர்களும் ஒரு நாற்காலியில் இருந்தார். சங்கரண்ணை கண்களை மூடியவாறு சாய்ந்தபடி நித்திரையாக இருந்தார். இதை அவதானித்த அன்பு அவர்கள் "சங்கரண்ணை நித்திரை. எழுப்புங்கோ" என்று கூற உடனே விழித்துக் கொண்ட சங்கரண்ணை படத்தை நிறுத்திவிட்டு உடனேயே படத்திற்போன பகுதியின் தமிழாக்கத்தைத் தொடங்கினார்.

இதேபோன்று ஒருநாள் இரவு சங்கரண்ணை நுளம்புத்திரி கொளுத்தி வைத்துவிட்டு நித்திரை செய்தார். குறட்டை ஒலியும் கேட்ட வண்ணம் இருந்தது. போராளி ஒருவர் மிகவும் மெதுவாகச் சென்று நுளம்புத்திரியை மெல்லத் தூக்கினார். அப்போது, "மோனே எனக்கும் நுளம்பு குத்தும்தானே" என்றதும்...

# வேகத்திலும்...

நிதானமான ஓட்டம், அளவான வேகம். வாகனத்தின் உள்ளே இருப்பவர்களுக்குத் தாக்கங்கள், குலுக்கங்கள் எதுவும் ஏற்படாதவாறான சீரான ஓட்டுகை. ஊர்தி ஓட்டுகையில் இப்படித்தான் இருக்கவேண்டும் என்பதே அவரது இலக்கணம். அவ்வாறாகவே நாங்கள் அவரைப் பார்த்ததுண்டு.

ஊர்தி திருத்துகைப் பயிற்சியில் நான் அப்போது நின்றேன். கூடவே நின்று ஒரு திருத்துநராகவே எம்முடன் பணியாற்றுவார். பாகங் களைக் கழற்றிக் காட்டுவது, அதன் செயற்பாட்டை விளங்கப்படுத்துவது, வரக்கூடிய பிழைகளை எடுத்துச் சொல்வது, பாகங்களின் பெயர்கள், கழற்றுவதற்குப் பயன்படுத்தவேண்டிய சாவிகள் எனத் தொடரும் சங் கரண்ணையின் பயிற்சிப் பட்டறை. துடைப்பதற்குத் துணியும் கையுமா கவே காணப்படுவார்.

ஊர்தி ஓட்டுகைப் பயிற்சிபற்றி ஒவ்வொன்றாகக் கூறுகிறார். போக்குவரத்து விதிமுறைகள், ஊர்திப் பராமரிப்பு, ஊர்தியை இயக்க முதற் கவனிக்கவேண்டியவை, செலுத்தவேண்டிய வேகம் இவ்வாறு தொடர்ந்தது ஓட்டுகைப் பயிற்சி.

ஊர்தி ஓட்டுவதற்கான செயன்முறைப் பயிற்சி ஆரம்பமானது. வீதி விதிமுறைகளைப் பேணுவது, பொதுமக்களுக்கு அசௌகரியங்களை ஏற்படுத்தாதவாறு எவ்வாறு ஊர்திகளைச் செலுத்துவது என்பனவே பிரதான பாடங்களாக இருந்தன. போராளி ஒருவர் கண்டிப்பாக இவற் றைப் பின்பற்றவேண்டும் என்பதை வலியுறுத்தித் தெரிவித்து வந்தார்.

ஊர்தியின் வேகக்கட்டுப்பாடு பிரதானமானது என்பதை அடிக்கடி குறிப்பிட்டுக்கொண்டே இருப்பார். அவசரத் தேவை, யுத்தத் தேவை போன்ற நேரங்களில் ஊர்தியை வேகமாகச் செலுத்தலாம். ஆனால் ஓட்டுநர் எவ்வேகம் வரை தன்னாற் கட்டுப்படுத்தமுடியும் என்பதை அறிந்திருக்க வேண்டும். அதில் தெளிவிருக்கவேண்டும் என்றவர், வேக ஓட்டம் ஒன்றை ஓடி எம்மைப் பிரமிக்க வைத்தார். ஊர்தி மணிக்கு எண்பது கிலோமீற்றர் வேகத்திற் சென்றுகொண்டிருந்தது. சன நட மாட்டமோ ஊர்திகளோ அற்ற காட்டுப் பாதை சடுதியான ஒரு திருப்பத் தில் வேகம் தளராது மடக்கி வெட்டினார். ஊர்தியில் நடுக்கமோ அவ ரது ஓட்டத்திற் பதற்றமோ இருக்கவில்லை.

ஈழவன்
முன்னாட் போராளி

# மென்னுள்ளம்

பொருளாதாரத்தடை. வீதிகள் நிறுவுவதற்கு, புனரமைப்பதற்கு அவசிய அடிப்படைப் பொருள் தார் - அதுவும் அத்தடைக்குள் அடங்கியது.

தாரில்லாத நிலையில் வன்னிப் பெருநிலப்பரப்பின் வீதிகள் யாவும் கிரவலினால் நிரப்பப்பட்டுப் புனரமைக்கப்பட வேண்டிய தவிர்க்க முடியாத நிலை காணப்பட்டது.

வாகன ஓட்டங்களினால் உருவாக்கப்படும் கிரவல் தூசிமண்டலம் வன்னிப் பெருநிலப்பரப்பின் வளிமண்டலத்தை மாசுபடுத்துகிறது. பாதசாரிகள், ஈருருளி - உந்துருளி ஓட்டுநர்களுக்கு அசௌகரியத்தைக் கொடுக்கிறது. வீதியோரக் குடியிருப்பாளர்களுக்குப் பாதகத்தை ஏற்படுத்துகிறது.

ஒட்டு மொத்தத்தில் இது ஒரு சுகாதாரச் சீர்கேட்டை உருவாக்கும். குறுகிய காலத்திற் சுவாசக் கோளாறுகளைத் தோற்றுவிக்கும். நீண்ட காலத்திற் சுவாசப்பையிற் புற்றுநோய் போன்ற உயிர் கொல்லி நோயிற்குக்கூட அத்திவாரமாகலாம்.

புகைப்பிடிப்பவருக்குச் சுவாசப்பையில் ஏற்படும் பாதிப்பைவிட மோசமான பாதிப்பை ஏற்படுத்தக் கூடும்.

இவை சங்கரண்ணையால் அடிக்கடி அலசி ஆராயப்படும் விடயங்கள். பேசுவதுடன் மாத்திரம் நின்றுவிடாமல் செயலிலும் வலிந்து கடைப் பிடிப்பவர். இவ்விடயத்திலும் அவ்வாறே.

தனது வாகனத்தால் இந்தப் பாதிப்பு வரக்கூடாது என்பதற்காகவே மெதுவாக வாகனத்தைச் செலுத்தும் மென்மையான உள்ளம் கொண்டவர்.

இந்த மென்மையான உள்ளம் எதிரியின் கிளைமோருக்கு வாய்ப்பாகிவிட்டதே.

*ம. ரி (ஆதவன்)*
*இம்ரான் பாண்டியன் படையணி*

# சிறுசுகள்

வற்றாப்பளை நந்திக்கடலின் அருகே அமைந்த ஓர் அழகிய கிராமம். நந்திக்கடல் அக்கிராமத்திற்கு எழில் கொடுத்து நிற்கிறது. அங்கிருக்கும் அம்மன் கோயில் அக்கிராமம் பிரபல்யத்துடன் விளங்கக் காரணமானது.

அக்கிராமத்திற்கும் அதைச் சூழவுள்ள பகுதிகளுக்கும் பெரியப்பா (சங்கரண்ணை) நன்கு பரிச்சயமானவர் என அறிந்திருந்தேன்.

ஒரு முறை பெரியப்பாவின் வாகனத்திற் பெரியப்பாவுடன் நானும் வற்றாப்பளைக்கு ஒரு நிகழ்விற்குச் சென்றேன். அந்நிகழ்வை அடுத்து நாம் வீடு திரும்பிக்கொண்டிருந்தோம்.

கிராமத்தின் பாதைகள் பெரும்பாலும் மணல் நிறைந்தவையாகவே காணப்படும். வெண்பஞ்சு மெத்தைபோல் அமைந்திருந்தன அவ் வொழுங்கைகள். துவிச்சக்கரவண்டிகளை அப்பாதைகளினூடக ஓடிச் செல்வது சிரமம். உந்துருளிகளுக்கும் அதே கதிதான். பாதைகளில் மணல் குவியலாகவே காணப்பட்டது. நாம் வாகனத்தில் வந்தபடியால் அச்சிரமம் தெரியவில்லை.

நாம் ஒரு பாதையூடாக வந்து ஒரு நாற்சந்தியை அடைந்தோம். அது மேலும் மணற்குவியல் நிறைந்த இடமாகவே இருந்தது. மணல் நிறைந்த பாதைகள் அமைந்த அந்நாற்சந்தி வேகப் போக்கு வரத் திற்கோ ஏறக்குறைய முழுமையான போக்குவரத்திற்கோ உகந்ததாக அமையாததாற் சிறுவர்களுக்கு மணல் விளையாட்டு முற்றமாக மாறியி ருந்தது.

நான்கிற்கும் ஆறுக்கும் இடைப்பட்ட வயதுக் குழந்தைகள் குழுமியிருந்தனர். வாகனத்தைக் கண்டதும் பாதை ஓரங்களுக்குள் ஒதுங்கிக்கொண்டனர். வாகனம் அவர்களை அண்மித்ததும் "சங்க ரண்ணை... சங்கரண்ணை..." எனக் கூப்பாடு போட்டபடி கையசைத்த வாறு வாகனத்தைச் சூழ ஓடி வந்தனர். பெரியப்பா வாகனத்தை நிறுத்தினார்.

சிறுசுகள் மாறிமாறி யன்னலூடாகக் கதைத்தன. உரிமையுள்ள ஒருவருடன் பழகுவதுபோலவே அவர்களின் செயற்பாடு அமைந்தது. "அப்பா எங்கே? பள்ளிக்கூடம் போனதா?" என்று பல கேள்விகள் கேட்டு குசலம் விசாரித்தார் பெரியப்பா.

அதிலிருந்து புறப்பட்டவுடன் இவர்களுக்கு நான் மாமாவோ தாத்தாவோ அல்லன் அண்ணை என்று கூறிச் சிரித்தார். வாகனம் மறையும்வரை அந்த நான்கு தொடக்கம் ஆறு வயதுத் தம்பி தங்கைகளின் கைகள் அசைந்துகொண்டேயிருந்தன.

*ரதி*
*(மகள்)*

# திறந்த வீடும் மூடிய முகாமும்

நான்கு தகரங்களாற் கூரை போடப்பட்ட சிறிய இடம். அரைச் சுற்றுச் சுவர். அதுவும் தகரமே. பின்னணியில் அவரது உறுமித்திரியும் வாகனத்தின் தகரக் கொட்டகை. அவரின் வீட்டின் ஒரு பகுதியில் இருக்கும் பின்னலாற் செய்யப்பட்ட பழைய காலத்துக் கட்டிலில் அமர்ந் திருப்பார். புத்தகங்கள், கோவைகள், குறிப்பேடுகள், வானொலிப் பெட்டி எனக் கட்டிலிற் பலவும் பரப்பப்பட்டிருக்கும். சிறிய மேசையில் வோக்கி நிமிர்த்தி வைக்கப்பட்டிருக்கும்.

கட்டிலில் முன்னால் அரைவட்ட நிலையில் ஒன்றுடன் ஒன்று பொருந்தாத பல வகைக் கதிரைகள் காணப்படும். எந்நேரமெனினும், ஏதாவது ஒரு துறையைச் சேர்ந்த போராளியோ பொறுப்பாளரோ சாதா ரண நபர் ஒருவரோ வயது வேறுபாடின்றி அக்கதிரைகளில் ஒன்றில் இடம் பிடித்திருப்பார். பத்திரிகைகளைப் புரட்டியபடியும் வானொலியில் ஆங்கிலச் செய்திகளைக் கேட்டபடியும் இருப்பவரிடமிருந்து மிக உன்னிப் பாகக் கதைகளை அறிந்தவாறு இருப்பார்.

"வீட்டை வந்தாலும், இந்த மனிசன் எங்களோடை கதைக்குது இல்லை. பேஸ் வேலையும் ஊர் வேலையும்தான்" இது மனைவியின் பாசமான கண்டிப்பு.

"நீ போ ஆத்தை உனக்கு விளங்காது ஒண்டும்"

"சரி என்னத்தையோ மணித்தியாலக் கணக்காய் கதைச்சுத் துலையுங்கோ" மனைவியின் பதில்.

இது காதில் விழுந்ததோ இல்லையோ "ரீ கொண்டுவாற சாட்டிலை ரெண்டாம் தரம் வராதை" ஒரு சிரிப்புடன் சங்கரண்ணையின் பதில்.

"சேட்டைதான் ஐம்பது வயதைத் தாண்டுது பேசாமல் றிட்டயர் ஆகுங்கோ" மனைவி.

இதுதான் வீடு. வீட்டில் எவரும் சந்திக்கலாம்.

ஆனால், அவரது முகாம்களோ வேறு பிரிவினர் செல்ல முடியாதவை. ஏன் அவரது பிரிவிலேயே குறிப்பிட்ட முகாம்களிற்குக் குறிப்பிட்டவர்கள் மாத்திரமே செல்லமுடியும். வேலைத் திட்டங்களில் இரகசியம் பேணல் என்ற கோட்பாட்டின் விளைவே இது.

இவைதான் சங்கரண்ணையின் இரு பக்கங்கள்.

திறந்த வீடு மூடிய முகாம்.

*சி. நிர்மலன்*
*சிறப்புப் படையணி*

# 1/365

புலிகளின் முகாம்களால் அரண் அமைக்கப்பட்ட மணலாற்றின் அமைதியைக் குலைத்துக் கொண்டிருந்த வெடிச்சத்தங்கள் ஓயத்தொடங் கின. இந்திய இராணுவம் தனது இயலாமையை மெதுமெதுவாக ஒப்புக் கொள்ளத் தொடங்கியது.

மணலாற்றை மூடியிருந்த கருமுகிற் கூட்டங்கள் விடுதலைப் புலிகளின் வீராவேசப் புயலினால் அகன்று செல்லத் தொடங்கின. கதிரவனின் பொற்கதிர்கள் அடர்ந்த காட்டு மரங்களைப் பொன்னிற மாக்கி வெற்றி கொண்டாடின.

மூச்சுவிடும் சத்தம்கூட வெளிவரக்கூடாது என்றிருந்த புலிப் போராளிகள் சுதந்திரச் சுவாசத்தை மெதுவாக அனுபவிக்கத் தொடங் கினர். முகாம்கள் களைகட்டின. எப்பொழுதும் எதிரிப்படைகளுக்காகக் காத்திருந்தவர்களுக்கு இடைவேளை கிட்டியது.

முகாம்களிற் கலை நிகழ்வுகளை நிகழ்த்தும்படி தலைவர் அவர் கள் பணிக்கிறார். உரத்துப் பேசுவதுகூடப் பாரதூரமாகக் கருதப்பட்ட காலம் மாறிக் கலை நிகழ்வுகள்; சொல்லவா வேண்டும்.

கிறிஸ்மஸ் தின நிகழ்வு ஏற்பாட்டில் ஆண், பெண் போராளிகள் மும்முரமாக ஈடுபட்டனர். அகப்பட்ட பொருட்கள் எல்லாம் நிகழ்விடத்தை அலங்கரிக்கப் பயன்பட்டன. நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்வதில், பழகுவதில் அவர்கள் தீவிரமானார்கள். ஆண், பெண் போராளிகளென இரு பகுதியினருமே பல்வேறுபட்ட நிகழ்ச்சிகளை ஒழுங்கு செய்திருந் தனர்.

நிகழ்வுகள் தொடங்கின. எல்லாமே அதுவரை அனுபவித்த இறுக்க வாழ்க்கையைப் பிரதிபலிப்பனவாகவே இருந்தன. இறுக்க வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள் நாடக வடிவம், தனி நபர் நடிப்பு, இசைக் கச்சேரி, வில்லுப்பாட்டு என யாவற்றிலும் பிரதிபலித்தன.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக, ஒவ்வொரு நிகழ்ச்சியும் சங்கரண்ணையின் செயல்களை, முக்கியமாக அவரின் இறுக்கங்களைக் கிண்டல் செய்வனவாக, 'சிரிப்பினூடாகத்' தலைவருக்கு உணர்த்துப வற்றைப் பகடி செய்வனவாக நிகழ்ந்தமை, மணலாறு பெற்ற வெற்றிக்கு அடிமூலமாக இருந்த இறுக்கங்களிற் சங்கரண்ணையின் பங்கைப் பிரதி பலித்தன.

கிண்டல், கேலி, பகடி பற்றி உங்களைத்தான் இலக்கு வைக் கிறார்களே என நான் கேலியாகக் கேட்டபோது, "கிறிஸ்மஸ் வருடத்தில் ஒரு தடவைதான். மீதி முந்நூற்று அறுபத்தி நாலு நாட்களும் என்னட் டைத்தானே" என்றாரே.

*பிருந்தன்*
*பழைய அறிவியற் கல்லூரி*

# நுளம்புகள்

இந்திய இராணுவத்துடனான சண்டை தொடங்கிச் சில மாதங்கள் கடந்துவிட்டன. 1987 ஆம் ஆண்டின் இறுதி நாட்கள். மணலாற்றுக்குள் முகாம்கள் அமைக்கத் தொடங்கிவிட்டோம். இராணுவ நெருக்குதல்கள் மணலாற்றை நெருங்கவில்லை.

முகாமில் ஒரு கொட்டில். சங்கரண்ணைக்கும் வேறு மூவரிற்கு முரியது. எம்முடன் ஒப்பிடும்பொழுது எல்லோரும் வயதில் மூத்தவர் கள். இயக்க மொழியில் 'நைன்ரிகளின் கொட்டில்' என அழைத்தோம்.

கொட்டில் வாசிகளின் கண்டிப்புக்கள், எதிலும் நேர்த்தியை எதிர் பார்க்கும் தன்மை, அதீத அவதானம் என்பன அன்று எம்மாற் புரிந்து கொள்ள முடியாதபோது எமக்கு எரிச்சலூட்டின. அவை எம்மைக் குறளி வேலைகள் செய்யத் தூண்டின.

காட்டு வாழ்க்கை எல்லோருக்கும் புதிதுதான். நுளம்புகள் உட லைப் பதம்பார்க்கும் என அறிந்திருக்கவில்லை. பல அளவுகளில் நுளம்புகள். பெரிய நுளம்பு குத்துவது, ஊசி குத்துவது போல் இருக் கும். 'படார்' விரிந்த கைகளின் அடியில் சிக்கிக்கொள்ளும். சிறிய நுளம்பு கடித்துவிட்டுச் சென்றுவிடும். கடுக்கத் தொடங்கும். கடித்த இடம் வீங்கித் தடித்துக்கொள்ளும். தூங்கும் நேரம் குறைவு. அதைக் கூடக் கெடுத்துவிடும் அந்த நுளம்புகள்.

'நைன்ரிகள்' நுளம்புக்கடியிலிருந்து தப்பித்துக்கொள்ள நெருப்புப் போடுவார்கள்.

நள்ளிரவை நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. எனது காவற் கடமை நேரம். ஒரு சுற்று வந்துகொண்டிருந்தேன். 'நைன்ரிகளின்' கொட்டிலை அண்மித்தேன். பல்வேறு தூக்க இசைகள் ஒலித்துக் கொண்டிருந்தன. ஒன்று உரத்த ஒலி. அது சங்கரண்ணையினுடையது என்பதை ஊகிக்க நேரம் எடுக்கவில்லை.

குறளி எண்ணம் ஒன்று பொறிதட்டியது. மெதுவாக நகர்ந்து சென்றேன். போடப்பட்டிருந்த நெருப்பைச் சந்தடியின்றி எடுத்தேன். எமது கொட்டிலுக்குக் கொண்டுசென்றேன். தடயம் மறைக்கப்பட்டது.

அடுத்த நாள் எங்களுக்குள் ஒரு குசுகுசு. பெரிய தாக்குதல் ஒன்றை நடாத்தியது போன்ற வெற்றிக் களிப்பு. 'நைன்ரிகளின்' கொட்டிலடியால் வேறு அலுவலாகச் சென்றுகொண்டிருந்தேன். இடை மறித்தார் சங்கரண்ணை. நான் செய்ததைச் சிரித்தபடியே விபரித்தார். எந்த நுளம்பு கடித்தாலும் உணர முடியாத உடல் நிலையிற் கைகட்டி நின்றேன்.

*சிவாஜி*
*சிறப்புப் படையணி*

# ழ... ள...

இந்தியப்படை தமிழீழ மண்ணிலிருந்து வெளியேறிவிட்டது. தென் மராட்சிப் பிரதேசத்திற் குறிப்பிட்ட அளவிற் புலிகளின் முகாம்கள் வியா பித்திருந்தன.

சங்கரண்ணையின் முகாமும் அங்கு அமைந்திருந்தது. அங்குச் சென்றபோது சங்கரண்ணை இருக்கவில்லை. அவரது அறைக்குச் சென் றேன். ஒவ்வொன்றும் ஒழுங்காகவே இருந்தது. பல்வேறு புத்தகங்கள் ஒழுங்கான முறையில் அடுக்கப்பட்டிருந்தன. அவரது மேசை பல்வேறு பொருட்களைக் கொண்டிருந்தபோதும் மிக நேர்த்தியாக அவ்வப்பொருட் கள் அவ்வவ் இடங்களில் வைக்கப்பட்டிருந்தன.

இவற்றிற்கு மேலாக அவரது மேசையில் வைக்கப்பட்டிருந்த அறி விப்புப் பலகை அவரைச் சீண்டுவதற்கான எனது எண்ண அலைகளை உருப்பெறச் செய்தது.

"தயவுசெய்து இதில் எவரும் கைபோட வேண்டாம்" என்பதே அந்த அறிவிப்புப் பலகை. எவரும் பார்க்காதபடி மேசையிற் பொருட் களை இடம் மாற்றினேன். 'பழக்கதோசத்திற் குளப்பி விட்டேன்' என்று எழுதி அவ்விடத்தில் வைத்துவிட்டு, சாதனை ஒன்றை முடித்துவிட்டதாக எண்ணி அங்கிருந்து வெளியேறி எனது முகாமை அடைந்தேன்.

சிலமணி நேரம் கழித்துத் தொலைத்தொடர்புக் கருவியில் எனக்கு அழைப்பு வந்தது. எதிர்முனையில் சங்கரண்ணையின் குரல். இனி இப் படி எழுத்துப்பிழை விடவேண்டாம் என்றார். நான் எதுவும் விளங்காத வன்போல் கதைத்தேன். குழப்புவதில் "ள" அல்ல "ழ" எழுத வேண்டும். இன்னும் இப்பிழைகளைத் திருத்தக் கற்றுக்கொள்ள வில்லையா? என்றபோது, நான் வழமையாக விடும் 'ழ', 'ள' எழுத்துப் பிழைகளை மனப்பதிவில் வைத்திருந்து, நான்தான் அப்பிழையைச் செய்தேன் என்பதைக் கண்டுபிடித்துவிட்டதை அறிந்தவுடன் பேசா மடந்தையாக நின்றேன்.

*- சிவாஜி -*
*சிறப்புப் படையணி*

# ஆங்கிலத்திற் புலமை

1983 இன் இனக்கலவரம்... சர்வதேசத்தில் ஈழப்பிரச்சினையை வெளிக்கொணர்ந்தது. ஆயினும், ஈழத்தின் ஆயுதப்போராட்டப் புத்தெழுச்சி பெரிய அளவிற் சர்வதேசத்தைத் தொடவில்லை.

பல்வேறு அமைப்புக்கள், இயக்கங்கள் என இருந்தவேளை இந்தியத் தமிழர்களும் சரி, புலம்பெயர்ந்த தமிழர்களும் சரி, சர்வதேசத்தினரும் சரி அவற்றைப் பிரித்தறியவில்லை.

சர்வதேசச் சக்திகள் சில, தமது கைப்பொம்மை இயக்கங்களைப் பிரபல்யப்படுத்தப் பகீரதப்பிரயத்தனம் செய்து, பரப்புரைகளை முடுக்கிவிட்டன.

ஆங்கிலம் பிறப்பெடுத்த நாட்டிலேகூட ஆங்கில உச்சரிப்புக்கள் நகரத்திற்கு நகரம் வேறுபட்டிருக்கும். அங்கு உயர்கல்வியாளர்கள் பயன்படுத்தும் ஆங்கிலமே "குயின்" (இராணி) ஆங்கிலம் (**Queen English**) எனப்படும்.

இவ்வாறான ஒரு சூழலில், உயர்கல்வி நிலையைக் கொண்டோரும், ஆங்கிலத்தைத் தாய் மொழியாகக் கொண்டோருமானவர்கள் மத்தியிலே சங்கரண்ணை எமது பிரச்சினையை எடுத்தியம்பியபொழுது, பிரச்சினைகளை விளங்கிக்கொண்டதற்கு மேலாக, எவ்வாறு நீங்கள் "இராணி ஆங்கிலம்" பேசுமளவிற்கு வளர்ந்துள்ளீர்கள் எனக் கேட்டு அங்கிருந்தோர் ஆச்சரியப்பட்டனர்.

*சி. நிர்மலன்*
*சிறப்புப் படையணி*

# முதல் வீடியோப் படம்

அழகிய மலைப் பிரதேசம். மலையொன்றின் உச்சியிற் பயிற்சி முகாம், விளையாட்டு மைதானம், பயிற்சித் திடல் எனப் பல்வேறு தேவைகளுக்குமான இடங்கள் கடும் சிரமத்தின் மத்தியில், கடின உழைப்பினால் அமைக்கப்பட்டிருந்தன.

முகாமிற்கு நடை பாதைகூட இருக்கவில்லை. முகாமை அடைவ தென்பது மலையேறும் பயிற்சிக்குச் சமம். மரங்கள், செடிகள், கற் பாறைகள், குன்றுகள் செங்குத்தான பகுதி எல்லாவற்றையுமே கடந்து செல்ல வேண்டும்.

பயிற்சியை நிறைவு செய்து வைப்பதற்காக ஒன்றரை நாள் மலை யேறும் பயணத்தின் பின், தலைவர் அவர்களும் அவருடன் கூடவே பல ரும் வந்திருந்தனர்.

கூட வந்தவர்களிற் சங்கரண்ணை புதிய வீடியோப் புகைப்படக் கருவியுடன் வந்தார். அவரது தம்பியார் லெப். சித்தார்த்தன் தலைவர் அவர்களின் மெய்க்காவலராக வந்தார். அதேவேளை கடைசித் தம்பி யார் சுதன் என்ற இயக்கப் பெயருடன் பயிற்சியாளராக நின்றார்.

வீடியோப் படக்கருவி சூழலின் இயற்கை அழகை, மலையேறும் பாதையின் கடினத்தைத் தனக்குட் பதித்துக்கொண்டது. பயிற்சியின் பல்வேறு நிலைகள். தலைவர் அவர்கள் அணிவகுப்பு மரியாதையை ஏற்பது, விளையாட்டுப் போட்டிகள், கலை நிகழ்வுகள் என எமது பாசறையின் பல நிகழ்வுகளும் முதன்முதல் விடுதலைப் புலிகளின் வீடியோப்பட ஆவணமாகின.

1985 ஆம் ஆண்டு தை மாதமளவில் ஐந்தாவது பயிற்சிப் பாசறையின் முடிவு நிகழ்வே இவ்வாறாகச் சங்கரண்ணையின் வீடியோ புகைப்படக் கருவிமூலம் படமாக்கப்பட்டது. தலைவர் அவர்கள் இப் பாசறையில் ஒரு வாரகாலம் தங்கியிருந்து பல்வேறு நிகழ்வுகளிற் கலந்துகொண்டமை படமாக்கப்பட்டு, முதன்முதலில் சர்வதேசமெங்கும் விடுதலைப் புலிகளின் வளர்ச்சியைப் பறைசாற்றிய வீடியோப் படமாக ஒளிபரப்பப்பட்டது.

*- பிருந்தன்*
*படைய அறிவியற் கல்லூரி*

# கடின முயற்சி

அறிவியலை வளர்க்க, உலக ஓட்டத்துடன் வேகமாக எங்களை நகர்த்த ஆங்கிலம் அத்தியாவசியமாகிறது.

புதிய கட்டமைப்பின் தொடக்க நாட்களில் பெரும்பாலும் வகுப்புக் களே நடந்தன. கல்விதான் அவ்வேலையின் அடிப்படையாகும் பல் வேறுபட்ட பாடங்களைக் கற்கவேண்டிய தேவையிருந்தது. இவையெல் லாவற்றிற்கும் ஆங்கில அறிவு அவசியமாகியது. எப்பாடமெனினும் அதிற்பயன்படுத்தும் சொற்கள் ஆங்கிலச் சொற்களாகவே இருந்தன.

ஆங்கிலம் பாடசாலை வாழ்க்கையிலிருந்தே ஒரு புரியாத புதிர். சங்கரண்ணையின் முயற்சியினால் வகுப்புக்களிற் சொற்களை எழுத, உச்சரிக்கப் பயின்றோம். அது அவ்வளவு பிரச்சினையாகத் தெரிய வில்லை.

அடுத்த கட்டம் முகாமிலும் சரி எங்குச் சென்றாலும் சரி தொலைத்தொடர்புச் சாதனத்தினூடாகிலும் சரி எமது பிரிவிற்குரியவர்கள் ஆங்கிலத்தில்தான் பேசவேண்டும். சங்கரண்ணையின் கடுமையான கட்டளை அது.

வெட்டி, கொலை செய்து, தட்டுத் தடுமாறி ஆங்கிலத்தைப் பேசுவோம். பேசத் தவறின் தண்டனை கிடைக்கும். கழுத்தில் ஒரு அறிவிப்புப் பலகை அன்றைய நாள் முழுவதுமாகத் தொங்கும்.

**'Nothing venture nothing win'** என்ற ஆங்கில வாக்கியமே அந்த அறிவிப்புப் பலகையாகத் தொங்கும். "கடின முயற்சி இல்லையேல் வெற்றி இல்லை" என்ற பொருள்படுவதே அவ்வாக்கியம்.

ஆங்கிலத்திலும் எம்மைக் கடினமாக முயலவைத்தவர்.

*த. அப்பன்*
*முன்னாட் போராளி*

# விவசாயியாக...

உச்சியிலே சூரியன். ஆயினும் வெயிலின் தாக்கம் அதிக மில்லை. தொட்டம் தொட்டமாக நகர்ந்துசென்றன கருமுகிற் கூட்டங்கள். அண்ணாந்து பார்க்கிறார்.

"மேற் காத்து அடிக்குது. இப்போதைக்கு மழை வராது. ரெண்டு நாள் விட்டுத் தந்தால் போதும். கௌபி போட்டிடுவன்". கௌபி போடும் பகுதியைச் சுட்டிக்காட்டுகிறார்.

தோட்டத்தின் மத்தியிற் பலகையிலான சிறிய இருக்கையிற் காக்கி நிற வட்டத்தொப்பியுடன் இருக்கின்றார். கையிலே பேனையும் சிறு குறிப்புப் புத்தகமும் காணப்படுகின்றன. சுற்றும் முற்றும் வெவ்வேறு வேலைகளில் நிற்பவர்களுக்குக் கட்டளைகள் பிறப்பிக்கப்படுகின்றன.

பிரிவுத் தேவைகளைப் பூர்த்தி செய்யவென அப்பண்ணை அமைக்கப்பட்டது. தென்னை, தேசி, தேக்கு, மா, பலா, வாழை, பஷன், கொய்யா, பயறு, கௌபி, உழுந்து, பயிற்றை, வெண்டி, கத்தரி, மிள காய் இவ்வாறு ஒரு முழுப்பொலிவுடன்கூடிய பண்ணை.

"தம்பி மோனை, தேக்கு நட்டிட்டியோ"

"அண்ணை, கிடந்த முப்பத்தெட்டும் நட்டிட்டன். முடிஞ்சுது."

"கொஞ்சம் பொறு மோனை" கையில் இருந்த சிறு குறிப்புப் புத்தகத்தைத் தட்டிப் பார்க்கிறார். "நேற்றைக்கு உங்கால் வேலியிலை மோனை முப்பத்தி ரெண்டுதானை நட்டது. உங்காலை இன்னும் அஞ்சு கண்டு இருக்கோணும் எல்லோ."

"இல்லை அண்ணை, அஞ்சு அவ்வளவு சரியில்லை"

"இங்கை கொண்டுவா மோனை. ஒண்டையும் வீணாக்கக்கூடாது." இவ்வாறு ஒவ்வொரு விடயத்தையும் நேரிற் சரிபார்க்கும் அக்கறை அவருக்கே உரியது.

"தேசியளுக்குப் பசளை போட்டதே மோனை. பயற்றைக்குத் தடி ஊண்டிவிடு மோனை. உழக்கிப்போடுவாங்கள்"

இவ்வாறு ஒரு விவசாயி ஆகிவிடுவார்.

சி. நிர்மலன்
சிறப்புப் பயிலுனர்

# உற்பத்தியிலும்...

பற்றைக்காடாகக் கிடந்த இடத்திலிருந்த கட்டுக்கிணறு அது முன்பு விவசாயப் பிரதேசமாக இருந்ததைச் சுட்டிக்காட்டியது. அது தென்னிலங்கை இன வன்முறைகளாலும் யாழ்க்குடா இடப்பெயர்வாலும் இடம்பெயர்ந்து வந்தவர்களைக் கொண்ட ஒரு வறிய கிராமமாக மாறியது. அதன் ஒருபுறம் இயற்கை எழில் பொங்கும் வற்றாக்கடல் எழில் சமைத்து நின்றது.

துப்புரவு வேலைகள் ஆரம்பமாகின. அருகிலிருந்த அந்தக் கிரா மத்தினர் சங்கரண்ணையுடன் ஒன்றிவிட்டனர். ஒவ்வொரு குடும்ப அங் கத்தவரும் மாறி மாறி வந்து உதவினர். சங்கரண்ணையோ அக்கிராமத் தின் ஒட்டுமொத்த முன்னேற்றத்திற்காகப் பெரும்பாடுபட்டார்.

பற்றைகள் அழிக்கப்பட்டு உழுது பண்படுத்தப்பட்ட நிலம் புதுப் பொலிவுபெறத் தொடங்கியது. அப்பிரதேசத்தின் எல்லையோரம் சுற்றி லும் தேக்குகள் நடப்பட்டன. இரண்டரை ஏக்கரில் தென்னை நாட்டப் பட்டது. ஒருபுறம் பழமரங்கள், மிளகாய், கறிமிளகாய், கத்தரி, வெண்டி, புடோல் மரக்கறிகளும் கரட், பீற்றூட் என பிறதேச கிழங்கு வகைகளு டன் மரவள்ளியும் வைக்கப்பட்டன. டுபாய் சக்கரைப் பூசணி, வத்தகைப் பழம், வெள்ளரி எனக் கொடி வகைகளும் சேர்ந்து கொண்டன.

பனை மரம், பழமரம், பணப்பயிர், தானியம்... எது இல்லை அங்கு. ஒரு மாதிரிப் பண்ணை என்றே சொல்லலாம். எல்லாப் பயிரினங்களை யும் தானே நேரில் நின்று, தூர அளவுகள் பார்த்து நடுகை செய்தார். உரம் போடுவது முதல், தண்ணி விடுவது வரை எல்லாம் எப்பொழுது எனப் பதியப்பட்டிருக்கும். தானே நேரில் மேற்பார்வையும் செய்வார்.

சகலவிதப் பயிர்களினதும் உற்பத்தி முறை, அவற்றின் பராமரிப்பு, பெறக்கூடிய விளைவின் அளவு என்பவற்றை விவசாயப் போதனாசிரியர் களிடம் கேட்டுத் தெரிந்துகொள்வார். வெளியிடப்படும் சிறு குறிப்புப் புத்தகங்களிலிருந்து விவரங்களைத் திரட்டுவார். அவற்றுக்கேற்பச் செய் கையை மேற்கொண்டு பயனைப் பெறுவதிலும் முனைப்பாக இருப்பார். ஒரு ஆய்வுப் பண்ணையாகவே அவரது பண்ணை விளங்கியது.

*மு. இளங்கோ*
*முன்னாட் போராளி*

# சிறகொடிந்த பறவையாக...

என் வயதோ ஈரெட்டு.
அன்னை தந்தை அரவணைப்பை,
அன்பாய் எனக்களித்த சங்கரண்ணாவே!

உறவுகளைப் பிரிந்தாலும் – உனக்கு
நானுண்டு என்றுரைத்த சங்கரண்ணாவே.
உனை இழந்து தவிக்கின்றேன்.

கராஜ் வேலைதனை கவனமுடன் எனக்களித்தீர்
கையிலே கொழுப்பிருந்தால்,
கண்டபடி பேசிடுவீர்.

தளபதி என்றில்லாது
தாயாய் எனக்கிருந்த சங்கரண்ணாவே!
உனை இழந்து தவிக்கின்றேன்.

முதல் நாளன்று – எனையழைத்து
வேலை பல தந்தீரே? படையணி
வளர்வதற்குத் திட்டம் பல சொன்னீரே!

என் வாழ்க்கைதனைத் தொடக்கி விட்டு
உங்கள் வாழ்க்கையை முடித்துவிட்டவரே!
உனை இழந்து தவிக்கின்றேன்.

- சிசுமுகன் -
முன்னாட் போராளி

# தமிழனாகப் பிறந்தால்

"நீர் சிறந்த விளையாட்டு வீரனாக வருவீர்" சொர்ணி அண்ணன் 1980 ஆம் ஆண்டு கூறிய வார்த்தை இது.

பதின்மூன்று வருடங்களின் பின் 1993 இல், வன்னியின் சிறந்த விளையாட்டு வீரனாகத் தெரிவு செய்யப்பட்டேன்.

1979, 80 ஆம் ஆண்டுக் காலப்பகுதி சொர்ணி அண்ணனின் சகோதரர்களான வசி (சீத்தா), கரன் ஆகியோர் வவுனியாவிற் சிறப்புற உதைபந்தாட்டம் விளையாடிய காலம்.

சொர்ணி அண்ணை கப்பலில் வேலை பார்த்துவிட்டு வவுனியா திரும்பியிருந்தார். உதைபந்தாட்டத்தை ஊக்குவிக்க "ஜொலி போய்ஸ்" என்ற பெயரில் விளையாட்டுக் கழகம் சொர்ணி அண்ணையின் முயற்சி யால் அமைக்கப்பட்டது.

தேவையான காலணிகள், காலுறைகள், மேலங்கிகள் யாவும் சிங்கப்பூரிலிருந்து சொர்ணி அண்ணையாற் கொண்டுவரப்படுகின்றன.

வவுனியாவில் முதல் நிலையில் இருந்த கழகமான "யுனைட்டட்" இனை 10.08.1980 இல் வெற்றி கொண்டு "ஜொலி போய்ஸ்" அணி கேடயத்தைக் கைப்பற்றியது.

தொடர்ந்து மூன்று வருடங்கள், விளையாட்டு வீரனாகவும், பயிற்சியாளனாகவும் செயற்பட்டு "ஜொலி போய்ஸ்" இன் முன்னேற்றத் திற்கு உழைக்கிறார்.

விளையாட்டின் புதிய நுட்பங்களை எனக்குக் கற்றுக்கொடுக் கிறார். இலங்கை உதைபந்தாட்ட அணிக்கான தெரிவுப் போட்டிகளில் எனது விளையாட்டு நுணுக்கத்தைக் கண்ட இலங்கை அணியின் பயிற்சியாளரும் ஜேர்மனியருமான கோஸ் பாப்பே என்பவர் என்னை அழைக்கிறார்.

நான் விளையாட்டிற் பயன்படுத்திய நுணுக்கத்தை யாரிடம் கற்றேனென அறியமுற்பட்டார். நான் சொர்ணி அண்ணையை அறிமுகப்படுத்தினேன். நீண்ட நேரம் தமக்குட் பேசிக்கொண்டனர்.

இலங்கை அணிக்குத் தெரிவு செய்யப்பட்டேன். ஆனால், தமிழன் என்ற ஒரே காரணத்தால் திருப்பியனுப்பப்பட்டேன்.

சொர்ணி அண்ணையின் ஆசையின்படி எமது மண்ணிற் சிறந்த விளையாட்டு வீரனாகத் தெரிவாகியுள்ளேன்.

கருணாநிதி (மருவன்)

# நீதியின் உலக நியதி

ஒரே பரபரப்பு. புலிகள் இயக்கத்தின் மூத்த உறுப்பினர்களான குமரப்பா, புலேந்திரன் உட்பட புலிகள் உறுப்பினர்கள், கடற்புறாப் படகுடன் இலங்கைக் கடற்படையாற் கைது செய்யப்பட்டனர். இலங்கை இந்திய ஒப்பந்தம் மீறப்படுகிறது. கைது செய்யப்பட்டவர்கள் இந்திய அமைதிப் படையாற் பொறுப்பேற்கப்பட்டு பலாலி இராணுவ முகாமில் தடுத்து வைக்கப்பட்டிருந்தனர்.

தடுத்து வைக்கப்பட்ட புலிகளைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு இலங்கை அரசு வற்புறுத்துகிறது. அவர்களை விடுவிக்குமாறு புலிகள் தரப்பிற் கேட்கப்படுகிறது. இதுகுறித்து இந்திய அமைதிப்படை அதிகாரிகளுக்கும், விடுதலைப் புலிகளுக்கும் இடையிற் பேச்சுக்கள் நடைபெற்றுக்கொண்டிருந்தன. இப்பேச்சுக்களில் சங்கரண்ணையும் பங்கேற்கிறார்.

தலைவர் அவர்களின் இடத்தில்... தலைவர் அவர்கள் சங்கரண்ணையுடன் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார். சங்கரண்ணையும் நானும் தலைவர் அவர்களின் இடத்திலிருந்து எமது 'டெலிக்கா' ஊர்தியிற் புறப்படுகிறோம்.

கைது செய்யப்பட்ட எமது உறுப்பினர்களை இந்திய அமைதிப் படை சிறிலங்கா இராணுவத்திடம் கையளிப்பதை இயன்றவரை பிற்போட வேண்டும் என்பதே தலைவரின் எண்ணம். அதைப்பற்றிப் பேசுவதற்குச் சங்கரண்ணை செல்கிறார்.

பலாலியினுள் இந்திய அமைதிப் படை இருந்த பகுதிக்குட் செல்கிறோம். இலங்கைக்கான இந்திய அமைதிப் படையின் தளபதி மேஜர் ஜெனரல் கர்கிரட்சிங்குடன் கைகுலுக்குகிறார் சங்கரண்ணை. இருவருக்குமிடையே ஆங்கிலத்தில் உரையாடல் தொடர்கிறது. சற்று இறுக்கமான முகபாவத்துடனேயே பேச்சுக்கள் நடைபெறுகின்றன.

சங்கரண்ணையின் மென்மையான குரலிலும் ஏற்றத்தாழ்வான தொனி பிரதிபலிப்பதை உணர்ந்தேன். ஆயிரக்கணக்கான படையினரை வழிநடத்தும் தளபதி என்ற இறுமாப்பு தளபதி பக்கம் இருந்தபோதும் அதற்குச் சற்றும் சளைக்காமலும் ஆணித்தரமாகவும் சங்கரண்ணை பேசிக்கொண்டதை அவர்களின் முகபாவங்கள் காட்டிநின்றன.

பேச்சுக்கள் முற்றுப்பெறும் தறுவாயிற் சங்கரண்ணை ஏதோ கூறு கிறார். இருவரும் சேர்ந்தே சிரிக்கின்றனர். ஆயினும், சிரிப்பிற் செயற் கைத் தன்மை காணப்பட்டது. இறுகிய முகத்துடன் சங்கரண்ணை வந்து ஊர்தியில் ஏறுகிறார்.

பலாலி முகாமினின்றும் ஊர்தி வெளியேறுகிறது. சங்கரண்ணை தொடர்ந்த மௌனத்துடன் எதையோ சிந்திப்பதை உணர்ந்தேன். எனது பேச்சு அவரது மௌனத்தைக் கலைத்தது.

இறுதியாக நீங்கள் சொன்னது என்ன? ஏன் அந்தச் செயற்கை யான சிரிப்பு? என்பதே எனது கேள்வி. 'பலமுள்ளவர்கள் பக்கமே நீதி என்பதே உலக நியதி' என்பதையே தான் கூறியதாகக் கூறினார்.

அர்த்தமுள்ள அந்த வார்த்தைகள் அன்று அந்த அமைதிப்படைத் தளபதியின் நெஞ்சில் நிச்சயம் தைத்திருக்கும்.

*வே. தீபன்*

# கடிதங்கள்

ஏறக்குறைய இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு சங்கரண்ணை வெளிநாட்டில் இருந்து, தனது கடைசித் தம்பிக்கு எழுதிய அறிவுறுத்தற் கடிதங்கள்.

14-3-1978.

அருமைத் தம்பி குமாரனுக்கு,

இப்போது நாம் நிற்கும் துறைமுகம் இதுதான். மிகவும் சிறிய துறைமுகம். ஒரே வேளையில் இரண்டேயிரண்டு கப்பல்கள் தான் இத்துறைமுகத்தில் நின்று சாமான் இறக்கவோ ஏற்றவோ முடியும்.

பிரெஞ்சு மொழியைத்தான் பேசுகின்றார்கள். ஆங்கிலம் சிறிது கூட இல்லை. வெளியில் சென்று கடைகளில் ஏதாவது வேண்டுமென்றால் சைகள் மூலம் தான். கடைக்காரர்களுக்கு ஒரே சிரிப்பு. வெள்ளையருக்கோ அதைவிட சிரிப்பு. கடைகள், சிற்றுண்டிச்சாலைகள் போன்றவற்றில் பெரும்பாலும் இளைஞர்களும், பெண்களும் தான் வேலை. வீதிகள், ஒழுங்கைகள் எல்லாவற்றிலும் சிறுவர்கள் ஒரே உதைப்பந்தாட்டம் தான்.

அன்பின்
சின்னண்ணா

18th November, 1978

ஏராளமான படங்கள் நான் எடுத்தேன்.
கூடியதும் அனுப்பி வைக்கின்றேன்.
பிரமிட்டின் அண்மையில், அராபிய
உடையுடன் ஒட்டகத்தின் மீது சவாரி
செய்தபடியும் படம் எடுத்தேன். அடுத்த தபாலில்
அனுப்பி வைக்கின்றேன்.

இவற்றைப் பற்றி மேலும் அறிய
ஆவற்பட்டீர்களானால், வாசிகசாலைக்குச் சென்று
'அறிவுக் களஞ்சியம்' எனும் தமிழ்ப் புத்தகங்களை வாசிக்கு
நிலைய அண்ணா (LIBRARIAN) விடம் கேட்கவும்.
தமிழில் உள்ள ENCYCLOPAEDIA வைத் தரும்படி.
வாசிகசாலையில் இருந்தே வாசிக்கவும். மாலை நேரத்தில்
சென்று வாசிக்கலாம் தானே. கட்டாயம் வாசிக்கவும்.

நீங்களும், நன்கு கஷ்டப்பட்டுப்
படித்து, முயற்சி செய்தால், வயது வந்ததும்
நேரடியாக இவற்றைப் பார்க்கலாம்

அன்புடன்
சின்ன அண்ணா

22nd APRIL, 1979

அருமைத் தம்பி குமார் அறிவது

இன்று காலையில் உங்களிற்கும், அப்பாவிற்கும் இரு கடிதங்களை அனுப்பியிருந்தேன். உங்களிற்கு அனுப்பிய கடிதத்தினுள் சில படங்கள் அனுப்பியுள்ளேன். சின்னண்ணாவின் கப்பல் விபத்துக்குள்ளாகிய போது எடுத்த படங்களையும் அனுப்பியுள்ளேன். கவனமாக வைத்திருக்கவும்.

~~கவனமாகப் படிக்கவும்~~

ஆங்கிலம், கணிதம் ஆகிய பாடங்களில் கூடிய கவனம் எடுத்துப் படிக்கவும். நல்ல பழக்கங்கள் பழக வேண்டும்.

அன்பு முத்தங்களுடனும், ஆசிகளுடனும்.

சின்னண்ணா

18th November, 1978.

அருமைத் தம்பி குமார் அறிவது,

சின்ன அண்ணா, எகிப்திய நாட்டின் தலைநகரான கெய்ரோ விற்குச் சென்று மூன்று நாட்கள் தங்கியிருந்தேன். அப்போது, எத்தனையோ ~~[illegible] பார்த்தேன். அப்போது, படத்தில்~~ காணப்படும் பிரமிது, ஸ்பிங்ஸ் என்பவற்றையும் பார்வையிட்டேன். பழைய உலகின் ~~[illegible]~~ ஏழு அற்புதங்களில் பிரமிதும் ஒன்று. படத்தில் காணப்படும் பிரமிது கிட்டத்தட்ட ~~[illegible]~~ 4000 ஆண்டுகளிற்கு முன்பு கட்டப்பட்டவை. ஒரு சில அரசர்கள் தாம் இறந்த பின்பு தமது உடல் அடக்கம் செய்வதற்காகவே கட்டினார்கள், இப் பிரமிதுக்களை. படத்தில் காணப்படும் பிரமிது 455 அடி உயரமானது. 30 இலட்சம் கற்கள் கொண்டு கட்டப்பட்டது. சில கற்கள் 30 தொன் எடையுள்ளவை. இக்கற்களை, நைல் நதிக்கப்பால் உள்ள மலைகளில் இருந்து வெட்டி, படகுகளின் உதவியுடன் ஆற்றைக் கடந்து கொண்டுவந்துள்ளார்கள். இவை நடந்தது 4000 வருடங்களிற்கு - அதாவது யேசு பிறப்பதற்கு 2000 வருடங்களிற்கு முன்பு.

18th Nov. 1978.

My dear brother,
On this card, you see the only remaining examples of the SEVEN WONDERS OF THE ANCIENT WORLD - the majestic pyramids of GIZA. It is 455 feet high and contains 3 MILLION blocks of stone, some weighing as much as 30 tons, built about 4000 years back. Every evening one could witness the unforgettable (I also witnessed it) "SOUND - AND - LIGHT" performance. shall send you some photographs (which I took) in my next letter.

Bye. Bye. SinAnna

25-5-1979

அருமைத் தம்பி இமா அறிவது,

உலகப் பிரசித்தி பெற்ற
வெனிஸ் நகரத்தின் நான்கு தோற்றங்களைப்
படத்தில் காணலாம்.

இப்போது எனது கப்பல் நிற்கும்
துறைமுகமான கியோகியா [CHIOGGIA]
விலிருந்து கிட்டத்தட்ட 20 மைல் தூரம். கடந்த
ஞாயிற்றுக்கிழமை காலையில் வெனிஸ் நகரத்திற்குச்
சென்று பல இடங்களையும், அதன் சாலைகளையும்
சுற்றிப் பார்த்துவிட்டு இரவு திரும்பி வந்தேன்.
வெனிஸ் நகரத்தினூடாக நூற்றுக்கணக்கான
கால்வாய்கள். வவுனியாவில் சைக்கிள்கள்
இருப்பது போல இங்கு வள்ளங்களும், படகுகளும்
உள. கால்வாய்களின் இருபக்கங்களிலும்
வீடுகள். படகுகள் மூலம் தான் வீடுகளிலிருந்து
வெளியில் வர முடியும். படத்தில் காணப்படும்
வள்ளங்களை "GONDOLA" என அழைப்பார்கள்.
வெனிஸ் நகரத்திற்கு வருபவர்கள் எல்லாம்

# மாவீரர்களில்

எப்பொழுதும் மாவீரர்களில் அதியுயர் மதிப்பை வெளிப்படுத்துபவர் சங்கரண்ணை. அவர்களின் தியாகத்தில், அர்ப்பணிப்பில், சாதனைகளில் தமிழீழ வரலாறு எழுதப்படுகிறது என்றே அவரது வார்த்தை வெளிப்படும்.

மாவீரர்கள் குறித்துச் சங்கரண்ணையால், அவரது கைப்பட எழுதப்பட்ட வரிகள்...

* எமது கல்லறைகளின் முன்னால்
நின்று ஒப்பாரி வைக்காதீர்
நாம் இங்கே இல்லை,
நாம் இறப்பதில்லை.

சி.நரேன்
படைய அறிவியற் கல்லூரி



தரையிலும் கடலிலும் போரியற் சாதனைகளைப் புரிவதற்கு வலுச்சேர்த்த சங்கரண்ணையின் துறைசார்ந்த கல்வி அறிவும் ஆற்றலும் அனுபவமும் அவரைப் புதிய சிறப்புப் படையணியை வழிநடத்துவதற்குப் பொருத்தமானவராக்கின.

கேணல் சி.சோ. பானு

# எனது இதயத்தின் துடிப்பு

யாரும் சத்தம் போட்டு, நீ என்று கதைத்தாலே அதைத் தாங்கும் இதயம் எனக்கு இல்லை.

அப்படிப்பட்ட என் வாழ்க்கை எதையும் தாங்கும் இதயமாகி விட்டது.

காலத்தின் கோலம்.

1977 இல் கப்டன் பண்டிதருடன் எனது மைத்துனர் வசீ (லெப் சித்தாத்தன்), எனது அம்மப்பாவிடம் கிணற்று வெடிமருந்து கேட்டு வீட்டிற்கு வந்தபோதே ஓரளவு புரிந்துகொண்டேன்.

1978 ஆம் ஆண்டு மனோகரனுக்கும் (கப்டன் கரன்) எனக்கும் திருமணப் பேச்சு வந்தபோது, சொந்த மைத்துனர் என்பதால் மறுப்புத் தெரிவிக்கவில்லை.

தமையனார் சொர்ணி (கேணல் சங்கர்) திருமணமாகாது இருக்கும் போது ஏன் தம்பி கரனிற்குத் திருமணம் பேசுகிறீர்களென மாமியிடமே கேட்டபோது ஒரு கடிதம் எடுத்துத் தந்தா. 77 ஆம் ஆண்டு சொர்ணியால் தம்பியாருக்கு எழுதப்பட்ட கடிதம். தமிழீழம்தான் என் இலட்சியம். திருமணம் வேண்டாம். 7 மணி பஸ் பழுதடைந்தால் 8 மணி பஸ் போகவேணும்தானே போகட்டும் என்று கடிதவரிகள் அமைந்திருந்தன.

சரி இரண்டாவது மைத்துனர் சொர்ணியும் நாட்டுக்கான போராட்டத்திற்காக...

புகுந்த வீட்டிற் போராட்டக்காரர்கள். என்ன செய்கிறது என்று இருக்க, புகுந்த வீட்டின் தலைவி - மாமி திடீரென மாரடைப்பால் இறந்து விட்டார்.

எனது அப்பா தபாலதிபராக இருந்தபோது, சிறிமா ஆட்சிக் காலத் திற் சிங்களச் சோதனை சித்தியடையாததால் வேலையிலிருந்து நிறுத் தப்பட்டபோது ஏற்பட்ட தாக்கம் அடிமனத்திற் கொழுந்துவிட்டெரிந்து கொண்டிருந்தது. அந்தத் தாக்க வெறியால் ஒற்றுமையாகப் புகுந்த வீட்டின் போக்கில் என்னை மாற்றிக்கொண்டேன்.

வெளிநாட்டிலிருந்து வந்த மைத்துனர் சொர்ணி, ஒரு பொறியிய லாளராக இருந்தும் சும்மா இருப்பது பலருக்கும் கேள்விக்குறியானதைச் சமாளிக்க மன்னாரில் இரண்டு மீன்பிடி ரோளர்களை வாங்கி விட்டதுடன், என் கணவரும் அவரது தம்பியுமான கரனுக்கு, 18.09.80 இல் தனது பிறந்த நாளன்று ஒரு மாட்டுப் பண்ணையையும் ஆரம்பித்துக் கொடுத் தார்.

1980 ஆம் ஆண்டே, போராட்டத்துடன் சம்பந்தப்பட்டவர்கள் என முத்திரை குத்தாத குறை. இராணுவம் பொலீஸ், சி.ஐ.டி. என வருவார் கள். எப்படி எப்படிக் கதைக்கவேண்டும் என்று முன்னெச்சரிக்கையாகக் கூறிவிடுவார்கள். புலிகளுடன் தொடர்பு எனத் தங்களைப் பற்றி விசாரிக் கத் தொடங்க அதிலிருந்து தப்பிக்கொள்ளத் தாங்களே தங்களைப் பற்றி பெட்டிசன் போடுவார்கள். "புளொட்டுடன்" தொடர்பு என்று அதில் இருக் கும். இராணுவத்தினரும் பொலிசாரும் குழம்பி விடுவார்கள். இவர்கள் நல்லா இருப்பது பிடிக்காமல் இப்படிப் பெட்டிசன் வருகுது என இராணு வத்தினரும் பொலிசாரும் நினைத்தனர்.

1983 இல், சித்தாவின் கைதைத் தொடர்ந்து, இராணுவ, பொலீஸ் கெடுபிடியால், வெளிநாடு போவதாகக் கூறிவிட்டுச் சொர்ணி இந்தியா சென்றார். பெண் சகோதரிகள் இல்லாத, ஆறு ஆண் சகோதரர்களைக் கொண்ட குடும்பம் எனது புகுந்த வீடு.

நான்தான் அங்கு முதற்பெண். தங்கள் சகோதரி போலவே என் னைக் கருதினர். எப்படி என்னை வளர்த்தார்கள் என்று எழுத வார்த் தைகள் இல்லை.

தூசுபட்டால் தூசுக்கும்கூடத் தண்டனை கொடுக்க முடிந்தாற் கொடுக்கத் தயங்கமாட்டார்கள். அப்படி ஒரு நுணுக்கமான கவனிப்பு.

1983 இல் ஒவ்வொருவராகப் புறப்பட நான் தனிமைப்படத் தொடங்கினேன். இயக்கச் செயற்பாடுகளில் எல்லோரும் ஈடுபடத் தொடங்க, தனிமை அதிகரித்துச் சென்றது.

என்னைக் கரடுமுரடாக வளரவிட்டிருக்கலாமே என அடிக்கடி கேட் டுப்பேசி அழுவேன். பதில் ஏதும் பேசாது தலைகுனிந்து நிற்பார்கள்.

05.10.1987 இல் கரன் வீரச்சாவடைய, 5 வருடங்கள் விதவையாக இருந்தேன்.

04.05.1992 இல் பிள்ளைகள் இருவருடன் என்னைப் பொறுப்பேற் றார் சொர்ணி.

இந்தியாவில் இருந்த என்னை 1990 ஆம் ஆண்டு நாட்டுக்கு அழைத்தார் சொர்ணி. இருந்தும் 1992 இலேயே என்னைத் திருமணஞ் செய்தார். இரண்டு வருடம் திருமணத்தைத் தள்ளிப் போட்டமை பற்றிப் பலருங் காரணம் கேட்டனர். திருமணத்தின் பின் ஒரு நாள், "இரண்டு வருடமாக முடிவு செய்தியளா? என்ன குழப்பம்" என்று சொர்ணியிடம் கேட்டேன். "நீ திரும்ப விதவையாகக் கூடாதென்ற காரணத்தால் முடிவெடுக்க முடியவில்லை" என்றார்.

ஆனால் இன்று இரண்டாவது தடவையாக விதவையாகி உள் ளேன்.

எனக்கு ஏற்பட்டது ஒருவருக்கும் நடக்கக்கூடாது.

வேறு எவருக்கும் இப்படி நடந்ததாக நான் கேள்விப்படவும் இல்லை. கடவுளை நம்பினேன். இருநாள் முன் கனவு ஒன்று கண் டேன். இரண்டாவது தடவை வராது என நம்பினேன். ஆனால்...

இறுதி மூச்சே நாடு என்பார். எல்லோரும் முன்னேறவேணும், படிக்கவேணும், பண்பு, நேர்மையுடன் வாழவேணும் என்பார்.

நகம் அளவேனும் எரிச்சல், பொறாமை, பொய், பெருமை எதுவும் இல்லாத தூய்மையானவரைக் கணவனாகக் கொண்டு அவரோடு சிறிது காலமே வாழ்ந்தாலும் அதுவே போதும்.

சில நேரங்களில் மனஸ்த்தாபங்கள் ஏற்படும். கூறுவார். செருப்பு இல்லாததற்குக் கவலைப்படக்கூடாது. கால் இல்லாதவனை நினை. செருப்பில்லாத கவலை இராது என்பார்.

மேலே பாராது கீழே பார் என்பார். கிளைமோரில் போனாலும் போவேன் என வாய்கூசாமற் கூறுவார். எரிச்சற் படுவேன். தலைவர் இருக்கும் வரை ஒரு குறையும் விடமாட்டார் தலைவரை நம்பு என்பார்.

தலைவர் காலத்தில் தமிழீழம் நிச்சயம், எல்லாம் விடுதலையின் பெயராற் பொறுமையாக இரு என்பார்.

வீட்டைக் கவனிக்காது நாடு, நாடு என்று திரிந்தாலும் பிள்ளை களின் படிப்பில் அக்கறை காட்டினார். எல்லோரின் பிள்ளைகளும் படித்து முன்னேற வேண்டும் என்ற ஆசை நிறைய உண்டு.

தன்னைப் போலப் பிறரை நேசிக்கும் குணம் படைத்த மனிதர்கள் சிலர். அதில் ஒருவர் இவர்.

சுயநலமற்ற தன் குணத்தையும், நாட்டின் தேவையையும் எங்கள் மூவருக்கும் ஊறவைத்துவிட்டுப் போட்டார்.

*அழுவதற்காகக் கட்டப்பட்ட சமாதியல்ல எனக் கூறி அடிக்கடி துயிலும் இல்லம் செல்வார். எனக்கு அடிக்கடி துயிலுமில்லம் போய்ப் பார்க்கும் மனநிலை இருக்கவில்லை. தாங்கும் சக்தி இல்லை. தற்போது துயிலும் இல்லமே கதி என ஆக்கிவிட்டார்.*

*- குகர் -*
*மனைவி*

# வீரவணக்கம்

| பிறப்பு | | சாவு |
|---|---|---|
| 26 |  | 08 |
| 05 | | 07 |
| 1960 | | 2003 |

**லெப். கேணல் நிர்மலன்**

(சிவானந்தன் நிர்மலராஜ்)

இந்நூலைத் தொகுத்த லெப். கேணல் நிர்மலன் நூல் வெளிவர முன்பே நோய் காரணமாகச் சாவடைந்தார்.

இவருக்கு எமது வீரவணக்கம்.

கேணல் சங்கர், அவர் தோழரான லெப். கேணல் நிர்மலன் போன்றோர் விட்டுச்சென்ற பணி தொடர்வோம்.

*பதிப்பகத்தார்.*



அறிவு, ஆற்றல், நேர்மை ஆகிய அனைத்தும் ஒருங்கே அவரிடம் காணப்பட்டன. இப்பண்புகளே தேசியத்தலைவர் அவர்களையும் சங்கரண்ணையையும் நெருங்கவைத் தன. வெற்றிகள், நெருக்கடிகள், இடர்கள், அழுத்தங் கள் என விடுதலைப் போராட்ட வரலாற்றில் மாறிமாறி வந்த எல்லாச் சூழ்நிலைகளிலும் தேசியத் தலைவர் அவர்களின் அருகிலிருந்து பணியாற்றியவர். தலைவர் தளபதி என்பதற்கப்பால் இருவரிடமும் ஒரு நெருங்கிய தோழமை நிலவியது.